# சித்த மருத்துவம்

## தொகுதி-6 : கபம் தொடர்பான நோய்கள்







தமிழ் வளர்ச்சிக் கழகம் சென்னை-600 005.

# சித்த மருத்துவம்

## தொகுதி-6 : கபம் தொடர்பான நோய்கள்

மரு. வீ. சுப்பிரமணியன்



தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னைப் பல்கலைக்கழக வளாகம்
சென்னை - 600 005

2005

# தமிழ் வளர்ச்சிக் கழகம்

சென்னைப் பல்கலைக்கழக வளாகம்
சேப்பாக்கம், சென்னை - 600 005.

நிறுவனர்
திரு தி.சு. அவினாசிலிங்கம்

தலைவர்
டாக்டர் வா.செ. குழந்தைசாமி

துணைத் தலைவர்கள்
டாக்டர் நா. மகாலிங்கம்
டாக்டர் பெ. இராமசாமி

செயலாளர்
**கொடுமுடி சண்முகன்**

தொகுப்பாசிரியர்
திரு மா. மதியழகன்

**தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு**

முதற் பதிப்பு 2005
இரண்டாம் பதிப்பு 2007



விலை ரூ. **225/-**

அச்சிட்டோர் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்
சென்னை - 600 014.

**Bibliographical Data**

| | | |
|---|---|---|
| Name of the Book | : | Siddha Maruttuvam Vol.6: Kabam Totarpana Noikal |
| Author/Editor | : | Dr. V. Subramanian |
| Edition | : | First - 2005<br>Second - 2007 |
| Copy Right | : | Tamil Valarchi Kazhagam |
| Language | : | Tamil |
| Subject | : | Siddha Medical System |
| Pages | : | xvi + 421 |
| Price | : | Rs. 225/- |
| Paper | : | Maplitho |
| Size | : | Double Crown |
| Binding | : | Deluxe |
| Point | : | 10 Pt |
| Wrapper Design | : | Sivagami Printographics |
| Published by | : | Tamil Valarchi Kazhagam<br>University Building<br>Chepauk, Chennai- 600 005.<br>Ph: 25365440 |
| Printed by | : | Pavai Printers Pvt. Ltd.<br>J.J. Khan Road, Royapettah.<br>Chennai-600 014.<br>Ph. 28482441, 28482973 |

# உள்ளடக்கம்

# முகவுரை

தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்டு வரும் சித்த மருத்துவ நூல் வரிசையில் இந்நூல் கபம் (ஐயம்) தொடர்பான நோய்களைப் பற்றிய ஆறாம் தொகுதியாகும்.

கபம் (ஐயம்) வாழும் இடம், இயற்கைப் பண்பு, கபத்தின் வகைகள், கபத் தாது கேடு அடைவதால் தோன்றும் நேரடியான நோய்கள், கபத் தாதுவுடன் வாதம் (வளி), பித்தம் (அழல்) என்னும் பிற தாதுக்களும் சேர்ந்து குற்றமுறுதலால் தோன்றும் இளைப்பு, இருமல், இரைப்பு, விக்கல், உளைமாந்தை முதலிய நோய்கள், அவற்றுக்கான மருத்துவ முறைகள் ஆகியவை பற்றிய செய்திகள் இத்தொகுப்பில் விவரித்துக் கூறப்பட்டுள்ளன.

மருத்துவர் வீ. சுப்பிரமணியன் அவர்களை ஒருங்கிணைப்பாளராகக் கொண்டு, பல சித்த மருத்துவ ஆசிரியப் பெருமக்கள் அடங்கிய குழுவினரிடம் இத்தொகுதியை எழுதும் பணி ஒப்படைக்கப்பட்டது. ஆனால் குழுவைச் சேர்ந்த பிற ஆசிரியர்களின் பங்களிப்பைப் பெறமுடியாமல், மரு. வீ. சுப்பிரமணியன் அவர்களின் தனிப்பட்ட முயற்சியாலேயே இந்நூல் நிறைவாக எழுதி முடிக்கப்பட்டுள்ளது.

மரு. வீ. சுப்பிரமணியன் அவர்கள் சித்த மருத்துவப் பயிற்சியிலும் மருத்துவ ஆசிரியர் பணியிலும் நீண்ட கால அனுபவம் பெற்றவர். மருத்துவக் கல்லூரியின் முதல்வராகவும், இந்திய மருத்துவம் மற்றும் ஹோமியோபதித் துறையின் இணை இயக்குநராகவும் பணியாற்றி, சித்த மருத்துவ உலகில் தனக்கென ஒரு இடத்தைப் பெற்றவர். அவர் ஈடுபாட்டுடன் முயன்று இத்தொகுதியை எழுதி முடித்துள்ளது ஒரு சாதனையேயாகும். கழகம் அவருக்கு என்றென்றும் நன்றிக் கடன் பட்டுள்ளது.

இந்நூலை எழுதுவதில் ஆசிரியருக்கு உறுதுணையாக இருந்தவர் அவரது மனைவியார் மரு.க. இராஜேஸ்வரி அவர்கள். இவர் கழகம் வெளியிட்டு வரும் சித்த மருத்துவ நூல் வரிசையில், 3-ஆம் தொகுதியானப் "பித்தம் தொடர்பான நோய்கள்" என்னும் நூலின் ஆசிரியராவார். இவருக்கும் கழகம் நன்றிக் கடன் பட்டுள்ளது. இந்நூலில் திருத்தங்கள் செய்து உதவிய மரு.செ.நெ. தெய்வநாயகம் அவர்களுக்கும் நன்றி பாராட்டிக் கொள்கிறோம்.

கணினியில் நூலை வடிவாக்கம் செய்த திரு க. செல்லதுரை, அச்சிட்ட பாவை அச்சகத்தார் ஆகியோரும் நன்றிக்குரியவராவர்.

கழகம் வெளியிட்டு வரும் ஏனைய மருத்துவ நூல்கள் மக்களிடையே பெற்ற வரவேற்பை, இத் தொகுதியும் பெறும் என்று எதிர்பார்க்கின்றோம்.

வா.செ. குழந்தைசாமி
தலைவர்
தமிழ் வளர்ச்சிக் கழகம்

# முன்னுரை

வளி முதலாக எண்ணப்பட்ட மூன்று உயிர்த்தாதுக்களும் உடல் முற்றும் பரவி வாழ்பவை. எல்லா உடல் தாதுக்களிலும் இவை வெவ்வேறு விகிதங்களில் கலந்துள்ளன. ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கையாகவும் இவ்வுயிர்த் தாதுக்கள் உணரப்படுகின்றன. வாயு, விண் ஆகிய இரு பூதங்களின் சேர்க்கையால் வளி அல்லது வாதம் என்ற உயிர்த்தாதுவும், தீ என்னும் பூதத்தால் அழல் அல்லது பித்தம் என்னும் உயிர்த்தாதுவும், மண், நீர் என்ற இரு பூதக்கலப்பால் ஐயம் அல்லது கபம் என்ற உயிர்த்தாதுவும் உண்டாகின்றன. எனவே ஐம்பெரும் பூதங்களினால் தோற்றுவிக்கப்பட்ட இவ்வுடம்பில் அவற்றின் மாறுபட்ட கூட்டுறவினால் வளி, அழல், ஐயம் ஆகிய உயிர்த்தாதுக்கள் தோன்றியுள்ளன. இம் மூன்றும் அணுத்துவம் கொண்டவை. அவைகளின் குணங்கள் மற்றும் செயல்களின் தன்மையால் உடலில் அவற்றின் இருப்பு உணரப்படுகின்றது. இவ்வுயிர்த் தாதுக்களின் கூடுதல் குறைவின் காரணமாகவே நோய்கள் தோன்றுகின்றன. அதனையே திருவள்ளுவர்

*மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்*
*வளிமுதலா எண்ணிய மூன்று*

என்று கூறுகிறார்.

வளி முதலாக எண்ணப்பட்ட மூன்று உயிர்த் தாதுக்களும் ஐம்பூதக் கூறுபாட்டை உடையனவாதலால், அண்டத்திலும் பிண்டத்திலும் (உடலிலும்) ஏற்படும் ஐம்பூத ஏற்றத் தாழ்வுகளினால், மூன்று உயிர்த்தாதுக்களின் நிலைகளில் மாறுபாடுகள் தோன்றுகின்றன. இம்மாறுபாடுகளே நோயாகவோ அல்லது நோய்க் குறிகுணங்களாகவோ உணரப்படுகின்றன. இவ்வாறு தோன்றும் நோயின் குறிகுணங்களின் தன்மைகளைக் கொண்டும் நாடி, தொடு உணர்வு (பரிசம்), நாக்கு, உடல் நிறம், மொழி (பேச்சின் தன்மை), விழி, மலம், மூத்திரம் ஆகிய எட்டு

விதத் தேர்வுகளின் மூலமாகவும் பாதிக்கப்பட்ட உயிர்த்தாதுவின் நிலை பற்றி உணரப்படுகிறது.

உயிர்த்தாதுக்கள் மூன்றும் எவ்வாறு ஐம்பூதச் சேர்க்கையின் வேறுபட்ட கூட்டுறவினால் தோன்றியனவோ, அவ்வாறாகவே உலகில் உள்ள அனைத்துத் தாது, தாவர, உயிரினப் பொருட்களும் ஐம்பூதச் சேர்க்கைகளின் கூட்டுறவால் தோன்றியுள்ளன. ஒவ்வொரு பொருளின் பூதச் சேர்க்கையை உணர்வதற்கு நமக்கு உறுதுணையாக இருப்பது அதன் சுவையாகும். சுவைகள் ஆறு வகை. ஆறுவகை சுவைகளின் பூதச் சேர்க்கை பின்வருமாறு:

இனிப்பு = மண்+ நீர்

புளிப்பு = மண்+தீ

உப்பு = நீர்+தீ

கைப்பு = வளி+விண்

கார்ப்பு = வளி+தீ

துவர்ப்பு = மண்+வளி

எனவே சுவைகளைக் கொண்டு பொருட்களின் பூதக் கலப்பினை உணர முடிவதால் எந்தெந்த பொருட்கள் எந்த அளவில் உடலுக்கு நன்மை புரியும் என்பதையும், முத்தாதுக்கள் பாதிக்கப்பட்ட நிலையில் எப்பொருட்களைக் கொண்ட மருந்துகளை வழங்குதல் நலம் என்பதையும் உணர முடியும்.

*வேர்பாரு தழை பாரு*
*மிஞ்சினக்கால் பற்ப செந்தூரம் பாரு*

என்ற கூற்றுக்கிணங்க நோய்க்கு மருத்துவம் செய்யுங்கால் முதலில் மூலிகை சார்ந்த பொருட்களைப் பயன்படுத்த வேண்டும். அதில் நோய் தீராமல், மேலும் மீறி நிற்குமாயின் உலோக, உபரச, பாடாணப் பொருட்களைக் கொண்ட பற்பம், செந்தூரம் போன்ற மருந்துகளை வழங்குதல் வேண்டும்.

ஐம்பூதங்களின் மாறுபாடுகள் உடலின் உள்ளேயும் வெளியிலும் இயற்கை மற்றும் செயற்கைக் காரணங்களால் ஏற்படுகின்றன.

*அண்டத்தில் உள்ளதே பிண்டம்*
*பிண்டத்தில் உள்ளதே அண்டம்*

என்று கூறப்படுவதால் உடலுக்கு வெளியில் அண்டத்தில் ஏற்படும் மாறுபாடுகள், உடலின் உள்ளே உள்ள உறுப்புகளையும் பாதிப்படையச் செய்கின்றன. புயல், பனி, மழை, வெயில் போன்றனவும் காற்று, நீர் ஆகியவற்றின் தூய்மை இன்மையும்

அண்டத்தையும் பிண்டத்தையும் பாதிப்படையச் செய்கின்றன. மாறுபாடான உணவுப் பொருட்களும் உடலில் உள்ள உயிர்த்தாதுக்கள் மற்றும் உடல் தாதுக்களின் நிலையைப் பாதிக்கும்.

எனவேதான் கால நிலைகளுக்கு ஏற்பவும் சுற்றுச்சூழ்நிலைக்கு ஏற்பவும் உடலின் தன்மைக்கு ஏற்றவாறும் உணவுப் பொருட்களைப் பிரித்து உண்ணும் மாண்பினைச் சித்தர்கள் கூறியுள்ளனர். திருவள்ளுவரும்

*மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்*
*ஊறுபா டில்லை உயிர்க்கு*

என்று கூறியுள்ளார். எனவே ஒவ்வொரு உணவுப் பொருளின் பண்புகளையும் நன்கு அறிந்து, அவை உடலின் வளி, அழல், ஐயம் ஆகிய முத்தாதுக்களுக்கு ஊறு விளைவிக்காத அளவில், நீக்க வேண்டியவற்றை நீக்கியும், சேர்க்க வேண்டியவற்றைச் சேர்த்தும் உணவை அமைத்துக் கொண்டால் உயிர்த்தாதுக்களுக்குக் கேடு ஏற்படாது. நோயும் உண்டாகாது.

"உணவே மருந்து, மருந்தே உணவு" என்னும் இக் கூற்று உயிர்த் தாதுக்களின் நிலையை உணவின் தன்மையால் சரியான நிலையில் வைத்துக் கொள்ள இயலும் என்பதையே உணர்த்துகின்றது.

உயிர்த்தாதுக்களின் மாறுபாடுகளினால் நோய்கள் தோன்றுவதால் அதன் அடிப்படையில் நோய் வகைப்பாடும் செய்யப்பட்டுள்ளது. வளி நோய்கள் 80, அழல் நோய்கள் 40, ஐய நோய்கள் 21 எனப் பிரிக்கப்பட்டுள்ளன.

ஐய நோய்கள் தொடர்பான செய்திகள் மட்டும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. நோய்களைப் பற்றி அறிவதற்கு முன்னால் ஐயத்தாதுவைப் பற்றிய பொதுவான விளக்கங்கள் நூலின் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ளன. அதன்பின் யூகி முனிவர் என்னும் சித்தரால் கூறப்பட்ட 21 வகை ஐயநோய்களின் தன்மைகள் விளக்கப்பட்டுள்ளன. அதன் பின் இளைப்பு நோய், இருமல், இரைப்பு நோய், விக்கல், உளைமாந்தை, முதலிய ஐயம் தொடர்பான நோய்களின் உட்பிரிவுகள் விளக்கப்பட்டு, அவைகளுக்குண்டான மருத்துவ முறைகளும் கூறப்பட்டுள்ளன.

சித்த மருத்துவ நூல்கள் பலவற்றில் கூறப்பட்டுள்ள ஐயம் தொடர்பான நோய்களுக்கான மருந்து வகைகள் அனைத்தும் தொகுக்கப்பட்டுக் குடிநீர் வகைகள், நெய் வகைகள், எண்ணெய் வகைகள், இலேகியம், தைலம், செந்தூரம், பற்பம், சூரணம், மெழுகு, கற்பம், மாத்திரை என்றவாறு வகைப்படுத்தப்பட்டு, சரக்கு, செய்முறை, பயன்பாடு, தீரும் நோய், பத்தியம் என்ற

உட்தலைப்புகளின் கீழ் தெளிவாகவும் எளிமையாகவும் கூறப்பட்டுள்ளன. இறுதியில் மருத்துவச் செய்திகளைத் தொகுக்கப் பயன்பட்ட ஆதார நூல் பட்டியலும் தரப்பட்டுள்ளது.

தமிழ் வளர்ச்சிக் கழகம் மேற்கொண்டுள்ள சித்த மருத்துவ நூல் வெளியீட்டு முயற்சியில் கபம் தொடர்பான நோய்களைப் பற்றிய இத் தொகுதியை எழுதும் வாய்ப்பு எனக்குக் கிட்டியதைப் பெரும்பேறாகவே கருதுகின்றேன். வாய்ப்பினை நல்கிய கழகத் தலைவர், முனைவர் வா. செ. குழந்தைசாமி அவர்களுக்கு நன்றி கூறப் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இந் நூலை எழுத எனக்கு உறுதுணையாக இருந்த என் மனைவி மரு.க. இராஜேஸ்வரி அவர்களுக்கும், திருத்தங்களைக் கூறி செம்மை படுத்திய மரு. செ.நெ. தெய்வநாயகம் அவர்களுக்கும் என மனமார்ந்த நன்றிகள். கழகத்தின் தொகுப்பாசிரியர் திரு மா. மதியழகன், கணினி ஆளர் திரு க. செல்லதுரை ஆகியோருக்கும் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

மரு. வீ. சுப்பிரமணியன்

# Introduction

The three life factors Vatha, Pitha and Kaba persist through out the human body. They are the three fundamental principles and essential factors in the composition of human body. In all tissues of the body they exist in different ratio.

The three life factors Vatha, Pitha and Kaba represent the five basic elements or Bhuthas. Vatha consists of Vali and Vinn. (Air and ether). Pitha consists of Thee (Fire). Kaba consists of Man and Neer (Earth and water). They all persist in the body in subtle form. Their appearance in the body is felt by their special characteristic features and their functions in the body. When these three life factors get deranged due to extrinsic factors or intrinsic factors like diet and habit, they bring about diseases peculiar to their influence.

The diseases caused in such a way are diagnosed by eight types of investigation methods such as Pulse, touch, tongue, colour and appearance, voice and speech, eyes, faeces and urine. By these eight techniques, the extent of derangement of life factors will be assessed. Apart from these 8 methods, the study of aetiology, classification, signs and symptoms of diseases make it possible to diagnose the particular disease and its cause. Thus it solves the statement of Thirukural Noi Naadi and Noi Mudal Naadi (i.e) diagnosing the disease and finding out its cause.

As that of life factors Vatha, Pitha and Kaba, all the worldly substances like herbs, metals, minerals, salts and other organic products

are also made of the five basic elements in different combinations. The presence of these basic elements in a particular substance is decided by its taste. Tastes are of 6 Types. The combination of 5 elements in these 6 tastes are as follows:

| | | |
|---|---|---|
| Sweet (Inippu) | = Man | + Neer(Earth and Water) |
| Sour (Pulippu) | = Man | + Thee (Earth and Fire) |
| Salty (Uvarppu) | = Neer | + Thee (Water and Fire) |
| Bitter (Kaippu) | = Vali | + Vinn (Air and Ether) |
| Pungent(Kaarppu) | = Vali | + Thee (Air and Fire) |
| Astringent (Thuvarppu) | = Vali | + Man (Air and Earth) |

Equating the five elements both in universal substances and the human body guides the physician in the choice of appropriate medicines suited to each case.

While choosing the drugs, it is advised to select drugs of herbal nature at first. If the disease is not cured by herbal medicines, then medicines prepared by metals and minerals should be prescribed.

The five basic elements form the connecting link between the microcosm man and the macrocosm or the world through Vatha, Pitha and Kaba. Hence, the Siddhar's statement "What all persists in the Universe persists in man and what all persists in man persists in the Universe".

Any change in the universe due to natural or unnatural causes will create changes in human systems. For example the natural disorders like cyclone, heavy rain, mist and scorching sun or man created impurities of air and water will create changes both in the atmosphere and in human body. Hence the change in the elementary conditions of external world has its corresponding change in the human organs.

Siddhars have explained the type of food to be consumed in each season or climate and in each period of a day. If it is adopted strictly, there will be no derangement in the life factor and hence no disease. If not, disease pertaining to defective food habits will occur due to the influence of excessive or diminished Bhuthas or life factors in the particular defective food substance. This aspect is well explained by Thiruvalluvar in his Thirukkural in such a way that there is no danger for life to one who consumes correct type of food avoiding the defective or varied food substances.

Hence the nature of each food substance is to be analysed as per siddha principle of life factors and Pancha Bhuthas and the food combinations to be made as per season and climate should also be understood. If the diet regimen is followed in such a way that it will not produce any harm to the harmonious functions of the three life factors, no disease will occur. Here the right food habit helps the body to keep the life factors in good condition. Hence diet becomes medicine in the preventive aspect.

Since the diseases occur due to the derangement of three life factors Siddhars have classified the diseases accordingly. They classified as Vatha diseases 80, Pitha diseases 40 and Kaba diseases 21.

In this book only Kaba and its related diseases are explained. Before going into the details of the disease and its treatment, the physiologic and pathologic conditions of the Kaba factor are explained in general. Afterwards the 21 Kaba diseases as explained by Yoogi Muni in his Vaidhya Chinthamani are narrated. Then the individual Kaba related diseases viz Ilaippu Noi, Erumal Noi, Vikkal, and Ulaimanthai Noi are explained in detail as given in Siddha texts. The treatment for individual Kaba diseases is given both in their headings and in general aspects also.

Valuable preparations in different forms are selected from different Siddha literatures and given here in a collective form. Medicines from simple herbal preparation to complicated mineral preparation are listed

out for the benefit of all types of patients. Medicines are classified according to their form of preparations and given in headings of Kudineer, Nei, Ennai, Leghyam, Thylam, Chenduram, Parpam, Chooranam, Mezhugu, Kalpam, Mathirai, Vatakam, Urundai, Manappagu, Adai, Pittu, Nasyam, Patru and Pugai.

In each preparation of medicine, the actual ingredients with their quantities, the method of preparation, the dosage, the usage, and the diet restrictions if any are given in separate headings.

The list of books which are used for collecting the informations is given in the last.

I am very much grateful to Dr. V.C. Kulandaiswamy, Ex-Vice Chancellor of different Universities and head of Tamil Valarchi Kazhagam for giving me the valuable opportunity to write this book on Kaba related diseases which forms the Vol. VI of Siddha Maruthuvam Editions of Tamil Valarchi Kazhagam.

I wish to thank my wife Dr. K. Rajeswari M.D.(S) Retd. Professor of Siddha Medicine who helped me a lot in preparing the work.

I thank Dr. S.N. Deivanayakam for his valuable corrections and suggestions in brining out this book in a good form.

I wish to thank Mr. M. Mathialagan, Editor and Mr. K. Selladurai, computer Asst. for their immense help in brining out this valuable work in a beautiful form.

**Dr. V. Subramanian**

# 1

# கபம்: வடிவத் தன்மையும் வாழும் இடமும்

## முன்னுரை

உடல் இயக்கத்திற்கு அடிப்படையாய் அமைந்த உயிர்த் தாதுக்கள் மூன்றனுள் ஒன்றாகக் கபம் என்னும் தாதுவும் அமைகின்றது. இது ஐம்பூதங்களுள் மண், நீர் ஆகிய பூதங்களின் சேர்க்கையால் ஏற்படுகின்றது. ஐயம், சீதம் சிலேத்துமம், சிலேட்டுமம், சேத்துமம் எனப் பலவாறு அழைக்கப்படுகின்றது. கபம், சிலேத்துமம் போன்ற வடமொழிச் சொற்களே சித்த மருத்துவ மூல நூல்களிலும் நடைமுறையிலும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஐயம் என்பது இவற்றுக்கு இணையானத் தமிழ்ச் சொல். தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் இந்நூலில் பெரும்பாலும் ஐயம் என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது.

## வடிவத் தன்மை

சித்த மருத்துவக் கோட்பாட்டின் படி வளி (வாதம்), அழல் (பித்தம்) என்ற உயிர்த் தாதுக்களைப் போன்றே, ஐயத் (கபத்) தாதுவின் இயற்கை வடிவம் அணுத்துவம் வாய்ந்ததாகும். மேலும் தண்மை (குளிர்ச்சி), நெய்ப்பு, மந்தம், வழுவழுப்பு, மென்மை, திண்மை என்பனவற்றையும் இதன் வடிவத் தன்மைகளாகச் சித்தர் நூல்கள் அறிவிக்கின்றன.

## வாழும் இடம்

ஐயமானது சமான வாயுவைச் சார்ந்து, சுழு முனையைப் பற்றி, விந்தை இருப்பிடமாகக் கொண்டு, உச்சி வரை ஓடி, தலையில் ஆக்கினையுடன் கூடி வாழும் என்பது சித்தர்களின் கொள்கை. சித்தர்கள் இன்னும் நுட்பமாக ஆய்ந்து உள்நாக்கு, கொழுப்பு, மஜ்ஜை, குருதி, மூக்கு, நரம்பு, மார்பு, எலும்பு, மூளை,

பெருங்குடல், கண், தொண்டை, கீல்கள் (பூட்டுகள்), இரைப்பை, நாக்கு, கணையம், இரசத்தாது முதலியவற்றையும் இருப்பிடமாகக் கொள்ளும் என்று கூறியுள்ளனர்.

### இயற்கைப் பண்பு

- தன் இயற்கை நிலையில் நிலைத்தல்
- கீல்களின் இடையேயான இணைப்புத் தன்மை
- பொறையுடைமை, அதாவது பசி, நீர்வேட்கை, துயரம், கலக்கம், வெப்பம், ஆகியவைகளைப் பொறுத்துக் கொள்ளுதல்

ஆகியன ஐயத்தின் இயற்கைப் பண்புகளாகும்.

### தொழில்

- உடலுக்குக் குளிர்ச்சியையும், நெய்ப்புத் தன்மையையும் வலிமையையும் அளித்தல்
- தினவை ஏற்படுத்துதல்
- உடலைப் பருக்கச் செய்தல்
- எலும்பில் ஏதோ பூசப்பட்டது போன்ற உணர்ச்சியை ஏற்படுத்துதல்
- கீல்களின் தொழிலைப் பாதிப்படையச் செய்தல்
- உடலை வெளுக்கச் செய்தல்
- உணவை எளிதில் செரிக்கத் தடையாக இருத்தல்
- மிகுதியான உறக்கத்தை ஏற்படுத்துதல்
- நாவிற்கு இனிப்புச் சுவையை அளித்தல்
- தோல், கண், மலம், சிறுநீர் ஆகியவற்றை வெளிரப் பண்ணுதல்
- தொழில் புரிவதில் மந்தத்தை உண்டாக்கல்

என்பன ஐயத்தின் தொழில்களாகக் காணப்படுகின்றன.

### வகைகள்

இடம், தொழில் ஆகியவற்றின் வேற்றுமையால் ஐயம் ஐந்து வகைப்பட்டதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. அவை வருமாறு :

1. அவலம்பகம் (அளியையம்): இது காற்று உறுப்பாகிய நுரையீரலில் இருந்து கொண்டு, தன் இயற்கை வன்மையால் திரிகஸ்தானத்திற்கும் தமரகத்திற்கும் அடிப்படையாய் அமைகின்றது. தன் இயற்கை நெகிழ்ச்சித் தன்மையைக் கொண்டு மற்ற நான்கு வகை ஐயங்கட்கும் பற்றுக் கோடாய் இருப்பதால் இது அவலம்பகம் (அளி ஐயம்) எனப்படுகிறது.

2. கிலேதம் (நீர்ப்பியையம்): இது இரைப்பையில் இருந்து கொண்டு, உண்ணப்பட்ட உணவுப் பொருள், நீர் முதலியவைகளை ஈரப்படுத்தி, மெத்தெனச் செய்யும் தொழிலைப் புரிகிறது.

3. போதகம் (சுவைகாணையம்): இது சுவைப் பொறியாகிய நாவில் இருந்து, உண்ணுகிற சுவைகளை அறிவிக்கும் தொழிலைச் செய்து வருகின்றது.

4. தற்பகம் (நிறைவையம்): இது தலையில் இருந்து கொண்டு, இரு கண்கட்கும் குளிர்ச்சியைத் தருகின்றது.

5. சந்திகம் (ஒன்றியையம்): இது பூட்டுகளில் (கீல்கள்) தங்கி, இயற்கையாய் எல்லாக் கீல்களையும் ஒன்றோடொன்று பொருத்தித் தளரச் செய்து கொண்டிருக்கின்றது. இதற்குச் சிலேதகம் என்ற பெயரும் உண்டு.

## ஐயம் தன்னிடத்தும் பிறவிடங்களிலும் சீற்றமுறலும் அமைதியுறலும்

ஐயத்தின் குணங்களுடன் நெய்ப்பசையோடு கூடிய குளிர்ச்சி தரும் பொருட்கள் சேர்ந்தால் ஐயத்தின் இடங்களில் நோய் காணும். ஐயத்தின் குணத்துடன் அழலின் தன்மையுள்ள பொருட்கள் சேர்வதால் ஐயத்தின் இடங்கள் அன்றியும் வேற்றிடங்களிலும் ஐயம் சீற்றம் கொண்டு நோய் விளைவிக்கும். ஐயப் பண்புடன் வறட்சியும் வெப்பமும் சேர்ந்தால் ஐயம் தன்னிலையை அடைவதோடு, ஐயக் குற்றத்தால் தோன்றிய பிற பிணிகளும் குணமடையும் என்பது சித்தர்களின் ஆய்வு முடிபு.

## ஐய உடலின் இயல்பு

குளிர்ச்சி என்னும் இயல்பைப் பெற்ற ஐயமானது (கபம்) சந்திரனின் (நிலா) இயற்கைத் தன்மையை உடையதாகக் கருதப்படுகின்றது. பிரமன், உருத்திரன்,

இந்திரன், வருணன் முதலிய தெய்வங்களும்; சிங்கம், யானை, குதிரை, பசு, எருது முதலிய விலங்குகளும்; கருடன், அன்னம் முதலிய பறவைகளும் ஐய உடலைக் கொண்டவைகளாகக் கண்டறியப்பட்டுள்ளன. சித்த மருத்துவ நூல்களில் ஐய உடலினர்தம் இயல்புகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றைத் தொகுத்துக் காணலாம்:

- ❖ பொதுவாக ஐய உடலினருக்கு வாதம், பித்தம், கபம் என்னும் முத்தாதுக்களுள் கபத் (ஐயம்) தாதுவே மிகுந்திருக்கும்.
- ❖ நரம்பு, எலும்பு, கீல் ஆகிய இடங்களில் எல்லாம் சதைப் பிடிப்பு மிகுந்து, மென்மையும் அழகும் பொருந்திய உடல் வாகு அமையும்.
- ❖ பரந்த நெற்றியும், அகன்று உயர்ந்த மார்பும், முழங்கால் வரை நீண்ட கைகளும், குறைவற்ற உறுப்புகளும் உடையவராய் இருப்பர்.
- ❖ கண்கள் அகன்றும் நீண்டும், கடை சிவந்தும் ஒளி பொருந்தியும், கறுவிழியாகவோ வெள்விழியாகவோ அமையும். தூரப் பார்வை நன்றாக இருக்கும். கறுத்து, அடர்ந்து வளர்ந்த முடியுடன் அழகியதாகப் புருவங்கள் தோன்றும்.
- ❖ மஞ்சள் சோளம், அறுகு முனை, பாணத்து ஒளி, கத்தி ஒளி, கோரோசனை, தாமரைப்பூ, பொன் போன்றவற்றை ஒத்த உடல் வனப்பு ஏற்படும்.
- ❖ தலைமுடியானது பசையுடன் கறுத்து அடர்ந்து முளைக்கும்.
- ❖ கொழுத்த யானையினது போன்ற நடை.
- ❖ மேகம், கடல், சிங்கம், முழவு ஆகியவைகளின் ஓசையைப் போன்று குரல் ஒலி அமையும்.
- ❖ கசப்பு, துவர்ப்பு, காரம், இனிப்பு ஆகிய சுவைகளில் நாட்டம் மிகும்.
- ❖ வெப்பத்தில் விருப்பம் ஏற்படும்.
- ❖ மிகுதியான உணவு தேவைப்படாது.
- ❖ பசி, நீர்வேட்கை, துயரம், அச்சம், சூடு ஆகியவற்றைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றல் மிகும்.
- ❖ குழந்தைப் பருவத்திலும் கூட அழுகை, கோபம், கடுஞ்சொல், கலக்கம், நீர்வேட்கை ஆகிய இயல்புகள் மிகுந்து தோன்றாது.
- ❖ சத்துவ குணம் உடையவராய், நினைவாற்றல், அறிவுக்கூர்மை, முன்

எச்சரிக்கை, பெரியோர்களிடம் அன்பு, பணிவு, நட்புணர்வு, நம்பிக்கை, உண்மை, உள்ள உறுதி, நாணம், பொறுமை, ஒழுக்கம், அறநெறியில் ஈடுபாடு, நன்றி மறவாமை, ஈகை குணம், சொன்ன சொல் தவறாமை, புலமை ஆகிய உயர்ந்த பண்புகள் மிக்கிருக்கும்.

❖ தூக்கத்தில் நாட்டம் மிகும்.
❖ தூய்மையாக இருப்பதில் விருப்பம் மிகும்.
❖ மணப் பொருட்களிலும் அணிமணிகளிலும் நாட்டம் அதிகரிக்கும்.
❖ இந்திரியம் (விந்து) குறைந்து, பிள்ளைப் பேற்றிலும் குறைவு ஏற்படும்.
❖ பேரும், புகழும், செல்வ வளமும் பெருகி, பிறருடைய நன் மதிப்புக்குரியராய் இருப்பர்.
❖ இசையில் நாட்டம் மிகுந்திருக்கும்.
❖ வெயிலைப் பொறுத்துக் கொள்ள முடியாது.
❖ வியர்வை மிகுந்து, உடலில் நாற்றம் காணும்.
❖ பறவைகள் நிறைந்த தாமரைக் குளம், குளிர்ந்த மேகம் ஆகியவை அடிக்கடி கனவில் தோன்றும்.

**ஐயம் இயல்பு நிலை கெட்டு மிகுமானால்:**

❖ அக்கினி மந்தப்படும்.
❖ வாய் நீர் ஊறும்.
❖ ஊக்கம் குறையும்.
❖ உடல் கனமாகத் தோன்றுவதுடன் வெண்ணிறத்தையும் குளிர்ச்சியையும் அடையும்.
❖ உடல் முற்றும் உள்ள கட்டுகள் தளரும்.
❖ இரைப்பு, உப்புசம், இருமல், மிக்க தூக்கம் உண்டாகும்.

**ஐயம் இயல்பு நிலை கெட்டுக் குறையுமானால்:**

❖ தலை சுற்றும்.
❖ கீல்களில் பசை முற்றும் நீங்கி, அவை தளர்ச்சி அடைந்து, அதனால் கீல்கள் நன்றாக வெளியில் தோன்றும்.

- ஐயம் வாழ் இடங்களில் ஐயம் குறைந்தும், நுரையீரலைப் பற்றிய ஐயம் கரைந்தும், நுரையீரல் இல்லாதது போல தோன்றியும், மயிர்க் கால்களினின்றும் வியர்வை பெருகியும் காணும்.
- தமரகத்தில் (இதயத்தில்) படபடத்த ஒலி ஏற்படும்.

## ஐயம் தோன்றும் இடமும் காலமும்

'அண்டத்தில் உள்ளதே பிண்டத்தில்' என்பது சித்தர்களின் அடிப்படையான கோட்பாடு. எனவே மனிதருக்கு உயிர்த் தாதுக்களான முத்தாதுக்களும் அவர்கள் வாழும் நிலத்தின் இயல்பிற்கும், பருவ காலங்களுக்கும் ஏற்பவே மிகுதலும் குறைதலுமாகிய நிலையை அடைகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களில், குளிர்ச்சி மிக்க மலைசார்ந்த குறிஞ்சி நிலத்தில் ஐயம் தன்னிலை கெட்டு, அது தொடர்பான நோய்கள் தோன்றுகின்றன. பாலை நிலத்தில் முத்தாதுக்களும் பாதிக்கப்பட்டு பல வகையான நோய்களும் தோன்றுவதாகக் கூறப்படுகிறது.

இனிப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவைகள் ஐயத் தாதுவைப் பாதிக்கின்றன. காரம், துவர்ப்பு, கசப்புச் சுவைகள் ஐயத்தைச் சமநிலையில் வைத்திருக்கும்.

ஒரு மனிதனுக்கு அதிகபட்சமாக ஆயுட்காலத்தை நூறு ஆண்டுகள் என வைத்துக் கொண்டால்: முதல் 33 ஆண்டுகள் வளியும், அடுத்த 32 ஆண்டுகள் அழலும், கடைசி 35 ஆண்டுகள் ஐயமும் வளருவதாகச் சித்தர்களால் கணக்கிடப்பட்டுள்ளது.

ஒவ்வொரு நாளிலும் ஒரு குறிப்பிட்ட நேரம் வரை, ஒரு குறிப்பிட்ட தாது சிறப்புற்றுத் தோன்றும் எனக் கூறப்பட்டுள்ளது. காலை சூரிய உதயம் முதல் பத்து நாழிகை வளியும், அடுத்த பத்து நாழிகை அழலும், மாலை பத்து நாழிகை ஐயமும் சிறப்புறும். அதே போல் சூரியன் மறைவுக்குப் பின் பத்து நாழிகை வளியும், நடு இரவில் பத்து நாழிகை அழலும், பின் இரவு பத்து நாழிகை ஐயமும் மிகுந்து தோன்றும் காலங்களாகக் கண்டறியப்பட்டுள்ளன.

## மிகுந்த ஐயத்தைத் தன்னிலை படுத்தும் முறை

பின்பனிக் காலத்திலும் வசந்த காலம் என்னும் இளவேனில் காலத்திலும் ஐயம் தன்னிலையில் மிகும். இக் காலத்தில் நெய்ப்புப் பசை உள்ளதும் உடலை வளர்க்கக் கூடியதுமான உணவை உட்கொள்வது உகந்தது. மலம், சிறுநீர் கழிக்கும் காலத்தில் இளவெந்நீரைக் கையாள்வதும், துயிலும்போது குளிரைத்

தாங்கக் கூடியக் கம்பளம், பட்டு, துப்பட்டா இவற்றுள் ஏதாவதொன்றைப் போர்த்துக் கொள்ளுதலும் மிகவும் நலமாகும். மாலை வெயிலில் இருத்தலும், வியர்வை கசியும்படி ஏதேனுமொரு காரியத்தைச் செய்தலும் நன்மையைத் தரும். எப்போதும் செருப்பு இன்றி இருத்தலாகாது. சுருங்கக் கூறின் எவ்வகையிலேனும் உடலில் சூடு நிலைத்திருக்கும்படிச் செய்து கொள்ளலே மிக்க நலமாகும். மிகுதியான ஐயத்தை இயற்கையான முறையில் குறைத்திட, மூக்கில் உறிஞ்சும் நசியப் பொருட்களையும் கண்ணிலிடும் அஞ்சனப் பொருட்களையும் பயன்படுத்தலாம்.

# 2

# கப நோய்கள்

## முன்னுரை

உயிர்த் தாதுக்கள் தம்மளவில் மிகினும் குறையினும் நோய் செய்யும் என்பது சித்த மருத்துவத்தின் அடிப்படைத் தத்துவம். எனவே உடலில் ஐயம் அல்லது சிலேத்துமம் என்றழைக்கப்படும் கபத் தாது தன்னிலையில் இருந்து கெடும் பொழுது மூக்கில் நீர்ப் பாய்தல், தொண்டையில் கோழை கட்டல், குரல் கம்மல், இருமல், வயிறு கடுகடுத்து இரைதல், வெண்மையாகவும் சீதம் கலந்தும் பேதியாதல் என்னும் இயல்புகளுடன் பல வகையான நோய்களும் தோன்றும்.

## நோய் வரும் வழி

- ❖ குளிர் காற்றில் நீண்ட நேரம் இருத்தல்
- ❖ குளிர்ச்சி மிகுந்த நீரையும் பிற பொருட்களையும் மிகுதியாக உண்ணல்
- ❖ இனிப்பையும் புளிப்பையும் அதிக அளவில் சேர்த்தல்
- ❖ கிழங்கு வகைகளை அளவுக்கு அதிகமாகப் புசித்தல்
- ❖ பழைய சோற்றை உண்ணல்
- ❖ பனிக் காலம்

ஆகிய சூழ்நிலைகளில் ஐயம் தன்னிலையில் கெட்டு நோய்களை உண்டுபண்ணுகின்றது.

## நோய் வகை

சித்த மருத்துவ மரபில் நோய்ப் பகுப்பு பற்றிய கோட்பாட்டில் யூகி முனிவரது அணுகுமுறையே பெரிதும் பயில்வில் இருந்து வருகின்றது. அவருடைய

பகுப்பின்படி ஐயம் (கபம்) தன்னிலை கெடுவதால் தோன்றும் நோய்களாக 21 பிணிகள் கூறப்பட்டுள்ளன. அவை:

1. இருமல் ஐயம்
2. காச ஐயம்
3. சுவாச ஐயம்
4. தீபன ஐயம்
5. மந்த ஐயம்
6. வளி ஐயம்
7. அழல் ஐயம்
8. இருதாது கலப்பு ஐயம்
9. முத்தாது (சன்னி) ஐயம்
10. சுர ஐயம்
11. பெருங்கழிச்சல் ஐயம்
12. நீர் ஐயம்
13. நெருப்பு ஐயம்
14. பூத ஐயம்
15. முயலக ஐயம்
16. வெறி ஐயம்
17. விகார ஐயம்
18. சுரோணித ஐயம்
19. விரண ஐயம்
20. துர்க்கந்த ஐயம்
21. நித்திய ஐயம்

என்பனவாகும். இனி இவற்றின் குறிகுணங்களைக் காணலாம்:

## 1. இருமல் ஐயம்

இந் நோயில் உடலில் குளிர் உண்டாகி, முகத்தில் நீரேற்றம் கொண்டு, ஊதித் தளதளவென்று காணும். மார்பில் சளிகட்டி, இளகலாயும் இனிப்பாயும்

வெளிப்படும். உடம்பு முழுமையும் வெளுக்கும். அடிக்கடி சீதத்தோடு வெளுத்துக் கழிச்சல் உண்டாகும். சிறுநீரானது மஞ்சளித்துச் சிறுகச் சிறுக இறங்கும். உட் சுரம் காய்ந்து, உடல் மிக்க வெப்பம் பெறுதலாகிய குறிகுணங்கள் தோன்றும்.

### 2. காச ஐயம்

உடலில் மிகவும் குளிர்ச்சி உண்டாகும். உடல் கனத்துப் பாரமாகும். நாடிகள் தளர்ந்து வன்மையற்றுக் காணும். வாய் வறண்டு மிக்க சூடு உண்டாகும். அடிமூக்குத் தண்டு வீங்கும். ஓயாத இருமலொடு, தினவும் காணும்.

### 3. சுவாச ஐயம்

இந்நோயில் நெஞ்சில் கோழை கட்டி, இருமல் உண்டாகும். மூக்கடைத்துக் குறட்டை விடுவது போன்று மேல்மூச்சு வாங்கும். குளிருடன் சுரம் உண்டாகும். மயக்கம் உண்டாகும். மார்பும், நெஞ்சும் அடைக்கும். வாய் வறண்டு போகும். மூக்கில் நீர்ப் பாய்தல், நீர்வேட்கை மிகுதல் ஆகிய குணங்கள் காணும்.

### 4. தீபன ஐயம்

இந்நோயில் மிகுதியாகப் பசி உண்டாகும். உடல் முழுமையும் எரிச்சல் காணும். நெஞ்சடைத்துத் தாங்க முடியாத வலி உண்டாகித் துன்பம் செய்யும். உடல் முழுமையும் வலி உண்டாகி அழல் உண்டாகும். கையும், காலும் குளிர்ச்சி அடையும். உடல் கனத்துப் பருத்துக் காணும். உள் நாக்கில் பிசுபிசுப்புக் காணுதல் என்னும் குறிகுணங்களையும் உண்டாக்கும்.

### 5. மந்த ஐயம்

இந்நோயில் வயிற்றுள் மந்தம் உண்டாகும். சிறுநீரும் மலமும் கட்டுப்படும். ஐயம் மிகும். உடம்பு முழுமையும் வியர்வை உண்டாகும். வாய் குமட்டி ஓக்காளித்தல், பெருமூச்சு வாங்குதல், அடிவயிறு கனத்துக் கல் போலாதல், நெஞ்சு வறண்டு மிக்க இருமல் உண்டாதல், வாய் கைப்பு, துவர்ப்புச் சுவைகளைப் பெறுதல் ஆகிய குறிகளைக் காட்டும்.

### 6. வளி ஐயம்

இந்நோயில் வயிறு பொருமிக் கொண்டு, அடி வயிறு வலித்து நீர் இறங்கும். நீர்த்துளையில் கடுப்பு உண்டாகும். உடல் வீங்கிக் காணும். அதனை

அழுத்தினால் குழி விழும். உதடும் பற்களும் கறுக்கும். உடல் முழுமையும் வலிக்கும். மேக நோயாளரைப் போன்று சிறுநீரில் வெள்ளை கலந்து இறங்கும். பல் வலி உண்டாகும்.

### 7. அழல் ஐயம்

இந்நோய் கண்களை மயக்கி, தலையைக் கிறுகிறுக்கச் செய்யும். பத்தியத்தின் கடுமை மிகுந்து, அதனால் உடற்கு அசதி உண்டாகும். உணவு கொள்ளாமை, வாய்நீர் மிகுதியும் ஊறல், தொண்டையில் கோழை கட்டல், இருமலோடு பெருமூச்சு வாங்குதல், உடல் மஞ்சளித்தல் ஆகிய குறிகளைக் காட்டும்.

### 8. இரு தாது கலப்பு ஐயம்

இந்நோயில் ஐயத்தாதுவுடன் வளி அல்லது அழல் தாது சேர்ந்து பாதிப்படைந்து நோயை உண்டு பண்ணும். உடம்பு முழுமையும் வெப்பமாகி, விக்கல், இருமல், பெருமூச்சு, மிகுந்த சுரம் முதலியன உண்டாகும். மேலும் உடல் வன்மையற்றுப் போதல், உடல் எங்கும் எரிதல், உணவு செல்லாமை, இருமல் உண்டாகிக் கோழை வெளியாதல், உடல் குளிர்ந்து மயிர்க்கூச்செறிதல் என்னும் குறிகளையும் காட்டும். இது எளிதில் தீராதாம்.

### 9. முத்தாது (சன்னி) ஐயம்

ஐயத் தாதுவுடன் மற்ற இரு உயிர்த் தாதுக்களும் சேர்ந்து பாதிப்படைந்து இந்நோயைத் தோற்றுவிக்கும்.

இந்நோயில் நா மிகவும் வறண்டு கறுத்துக் காணும். உடல் குளிர்ந்து சுரமும் எரிச்சலும் உண்டாகும். உடம்பெங்கும் கடுமையான இசிவு காணும். உடல் வன்மையற்று ஞாபகமறதி ஏற்படும். தாடை, கன்னம், காது, புருவம், மூக்கு, உச்சி ஆகியவைகள் துடித்துப் படபடக்கும்.

### 10. சுர ஐயம்

பல முறை விட்டு விட்டு சுரம் காயும். உடலெங்கும் கனத்து வலிக்கும். அடிக்கடி சுரம் உண்டாகும். சுரம் விடும் போதெல்லாம் உடல் வியர்க்கும். உணவு உண்ட உடனே வாந்தி எழச்செய்யும். வயிறு நொந்து உப்பும். மேல்மூச்சும் இருமலும் உண்டாதல், நா கறுத்து வறண்டு நீர் வேட்கை மிகுதல் ஆகிய குறிகளை இந்நோய் உண்டாக்கும்.

### 11. பெருங்கழிச்சல் ஐயம்

இந்நோய் உற்றோர்க்கு வயிற்றுள் குத்தல் உண்டாதல், சூலை நோயைப் போன்று வயிறு சுழன்று வீங்குதல், விலாப் பக்கங்களில் இரைச்சல் உண்டாதல், சிவந்த நிறத்தோடு மிகுதியும் கழிதல், அதனால் உடல் சோர்வு அடைதல், மார்பும் நெஞ்சும் நோதல், வாய் வறண்டு இருமலோடு மூச்சு வாங்குதல், மிகுந்த நீர் வேட்கையோடு உடல் எரிதல் ஆகிய இவ்வகையான கொடிய துன்பங்கள் உண்டாகும்.

### 12. நீர் ஐயம்

இந்நோயில் நீர் வேட்கை மிகுந்து, நீரை அடிக்கடி பருகச் செய்யும். நீரைக் குடிக்கும்போதெல்லாம் தொண்டையில் தடைபட்டு உள்ளிறங்கும். அடிக்கடி சிறுநீர் வெளியாகும். இவைகளோடு குரல் கம்மல், இருமிக் கோழை கக்கல், பற்கள் குடைதல் ஆகிய குணங்களும் ஏற்படும்.

### 13. நெருப்பு ஐயம்

இந்நோயில் மிகுந்தெழுந்த ஐயத்தோடு வெப்பம் கூடி, அதனால் இருமலுடன் கோழையும் மிகும். உடல் நெருப்புப் போன்று மிகுதியாகக் காயும். கால், கைகள், மூக்கு ஆகியவைகளில் எரிச்சல் உண்டாகும். நீர்வேட்கை மிகும். சில போது கையும் காலும் சில்லிடும். வயிறு நிறைய உண்ணினும் உடனே பசி எடுப்பது போல் தோன்றும்.

### 14. பூத ஐயம்

வெறி கொண்டவரைப் போல் கண்களை உருட்டி விழித்துப் பார்த்தல், ஊமையைப் போன்று பேசாதிருத்தல், திடீரென்று உரத்துப் பேசுதல், குறட்டையோடு மூச்சு வாங்குதல், இருமலோடு கொடி கொடியாகச் சளி வெளியாதல், உடலெங்கும் மிகுதியாக வியர்த்தல், பல்லை மிகக் கடித்தல், இனிமையாக மகிழ்வுடன் பேசிக் கொண்டிருக்கும்போதே சண்டையிடத் தொடங்குதல் முதலியன இந்நோயின் குறிகளாம்.

### 15. முயலக ஐயம்

இந்நோயில் உடம்பெங்கும் வலிப்பு உண்டாகி, உணர்ச்சியற்றுத் தளரும். கண் சிவந்து காணும். கண்ணில் அதிக நீர் வடியும். உடல் கன்றிக் கறுத்துக்

காணும். தன்னை அறியாமலே சிறுநீரும் மலமும் வெளியாகும். இருமலோடு பெருமூச்சு வாங்கும்.

### 16. வெறி ஐயம்

இந்நோயில் வெறி நோயில் காணும் குறிகளாகியக் கண்களை விழித்துப் பார்த்தலும், மீசையை முறுக்குதலும், எழுந்து பிறர்மேல் பாய்தலும், பல்லைக் காட்டிப் பலமுறையும் பாடுதலுமான இயற்கைக்கு மாறான செயல்களைத் தோற்றுவிக்கும். அன்றியும் கண் சிவத்தல், உடல் கறுத்தல், உறுமுதல், உதடு காய்ந்து போதல் ஆகிய குறிகளும் காணும்.

### 17. விகார ஐயம்

உடலின் எல்லாப் பாகங்களிலும் ஏதோ ஓடுவது போன்று தோன்றல், மனம் போனபடி பலவகைப் பட்ட பாடல்களை மிடுக்குடன் பாடல், பெண்களின் மேல் கொண்ட இச்சையால் வேறொன்றிலும் மனம் செல்லாதிருத்தல், மனம் வருந்திப் பலவாறாகப் பேசல், உணவின் மேல் நினைவு செல்லாமை, மயக்கம், முகம் வேறுபாடாதல் ஆகிய குறிகளை இந்நோய் காட்டும்.

### 18. சுரோணித ஐயம்

இதில் முழங்கால் குடைதல், முதுகும் விலாப் பக்கமும் உளைந்து நோதல், முழங்கால் முழங்கைகளின் பூட்டுகள் வீங்கிக் குடைச்சல் உண்டாதல், இருமிக் கோழை கக்கல், பெருமூச்சுண்டாதல், தொண்டையில் சளி கட்டல், நா வறண்டு நீர்வேட்கை மிகுதல், நா இனித்தல் என்னும் குறிகள் தோன்றும்.

### 19. விரண ஐயம்

தொண்டையில் புண்ணாகிச் சளியும் சீழும் கலந்து வெளிப்படும். புறங்கழுத்து, கன்னம் ஆகியவைகள் வீங்கிச் சுரம் உண்டாகும். அத்துடன் குளிர் எடுத்தல், உடம்பு எரிதல், கொக்கென்ற இருமல் கூவல் உண்டாதல், தொண்டையும் நாவும் புண்ணாதல் ஆகிய துன்பங்கள் இந்நோயில் உண்டாகும்.

### 20. துர்க்கந்த ஐயம்

நாற்ற ஐய நோயில் ஐய மிகுதியால் புண் உண்டாகி, அப்புண்களில் சீழும் குருதியும் தோன்றி, இருமலும் பெருகி, மீன் கழுவிய நீர் போன்று ஒழுகி நாற்றம்

உண்டாகும். அன்றியும் சோற்றை விழுங்க முடியாமல் போகும். அடிவயிறும் கால், கைகளும் வீங்கும். நீர்வேட்கை, உடல் வற்றிப் போதல், வியர்த்தல் என்னும் குறிகளைக் காட்டும். இந்நோய் மருந்துக்கு அடங்காத ஒரு தீரா நோயாம்.

## 21. நித்திய ஐயம்

இந்நோய் தும்மலையும் இருமலையும் உண்டாக்கி உடலைக் கறுக வற்றச் செய்து, உடல் முழுதும் எரிச்சலை உண்டாக்கும். குருதியைக் கெடுத்து, உடலை வெளுக்கச் செய்யும். அத்துடன் வாந்தி செய்தல், தலை கிறுகிறுத்துக் கீழே விழுதல், குரல் கம்மல், பேச முடியாமை ஆகிய குறிகள் உண்டாகும். இந்நோய் படுக்கையில் நீண்ட நாட்களாகக் கிடந்தோர்க்கும் வயது முதிர்ந்தோர்க்கும் வரும் நோயாதலால் தீராதாம்.

கப நோய்களுக்கான மருந்துகள் இந்நூலின் "கப நோய்களின் பொது மருத்துவம்" என்னும் அத்தியாத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

# 3

# இளைப்பு நோய்

***முன்னுரை***

ஐயத் தாது குற்றமுறுதலால் வரும் பெரிய நோய்களுள் இளைப்பு நோயும் ஒன்று. இதற்கு ஈளைக் கபநோய், அரச நோய், சயம் (க்ஷயம்), ராஜயக்ஷ்மா, யக்ஷ்மா குசாகைக்ஷ என்ற பெயர்களும் உண்டு. பற்றியவரின் உடலை இளைக்கச் செய்யும் காரணத்தால் இதற்கு 'இளைப்பு நோய்' என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது.

**நோய் வரும் வழி**

- அடிக்கடி பட்டினி இருத்தல்
- இரவில் விழித்திருத்தல்
- வன்மைக்கு மிகுந்த உழைப்பை மேற்கொள்ளல்
- மற்றைய நோய்களில் பன்னாட்கள் துன்பப்படல்
- வறுமையின் கொடுமை
- சிறை வாசத்தால் ஏற்படும் மன அழுத்தம்
- உடலுக்கு ஊட்டம் இல்லாத உணவையே புசித்தல்
- காற்றோட்டம் இல்லாத வீட்டில் வசித்தல்
- கஞ்சாப் பழக்கம்
- உப்பு, காரம் வகைகளை அதிகம் புசித்தல்
- மிகுந்த மயக்கம்
- மருந்தீடு
- சுனை நீரைப் பருகுதல்
- சுவை இல்லாத பதார்த்தங்களை உண்ணல்
- சுக்கான் தண்ணீர் அருந்துதல்

- ❖ மிகுந்த வெயிலில் திரிதல்
- ❖ மிகுந்த அக்கினியின் அருகில் இருத்தல்
- ❖ மிகுந்த வருத்தம்
- ❖ கற்பழித்தல்
- ❖ பொய் சொல்லல்
- ❖ களவாடல்
- ❖ சொந்த பந்தங்களை வஞ்சித்துப் பேசல்
- ❖ பிறரை இகழல்
- ❖ காதால் கேட்கக் கூடாத சொற்களைச் சொல்லல்

ஆகிய காரணங்களினால் இளைப்பு நோய் வரும் என்று சித்த மருத்துவ நூல்களில் தெரிவிக்கப் பட்டுள்ளது. பொதுவாக உடல் வன்மை குறைதல், உளச் சிக்கல் என்ற இரண்டுமே இந்நோய் வருவதற்கான அடிப்படைக் காரணங்களாக அமைகின்றன. இது மதுமேகம் முதலிய பிற நோய்களுக்குத் துணை நோயாகவும் வரும் எனத் தெரிகிறது.

**குறிகுணம்**

- ❖ மாலையில் சுரம் காய்தல்
- ❖ குரல் கம்மல்
- ❖ மூக்கில் நீர்ப் பாய்தல்
- ❖ கண் பஞ்சடைதல்
- ❖ இருமல்
- ❖ கோழை கட்டல்
- ❖ பக்கசூலை
- ❖ காது கேளாமை
- ❖ வாந்தி
- ❖ மிகு கழிச்சல்
- ❖ இரவில் மிகுதியாக வியர்த்தல்
- ❖ உண்ணும் பொருள் எவற்றிலும் விருப்பம் இன்மை
- ❖ ஏக்கம்
- ❖ பசியின்மை
- ❖ மந்தமாகவே இருத்தல்

- ❖ உணவில் மண், கல், தூசி, எறும்பு முதலியன கலந்துள்ளது போன்ற ஓர் பிரமை
- ❖ பல நாள் நோய்க்குப் பின் ஏற்படக்கூடிய உடல் வெளுத்தல், கால் வீக்கம், உடல் துரும்பு போல் இளைத்தல் ஆகியவற்றில் தாக்கப்பட்டிருப்பது போல நினைத்து நடுங்கல்
- ❖ தன்னுடலைத் தானே மீண்டும் மீண்டும் பார்த்து வருந்தல்
- ❖ ஊர்கள் தீப்பற்றி எரிவது போலும், குளம், குட்டை, ஆறு ஆகியவைகள் வற்றிக் கிடப்பது போலும், கொடிய பறவைகளும் பாம்பு முதலியனவும் தன்னைத் துன்புறுத்துவது போலும், சிகரங்கள், மலைகள், காடுகள் முதலியன அழிந்து வீழ்வது போலவும் பிரமை ஏற்படல்
- ❖ நகம், மயிர் முதலியவைகள் மிகவும் வளர்தல்

என்னும் குறிகளைக் காட்டி உடற்கட்டு ஏழும் (சாரம், செந்நீர், ஊன், கொழுப்பு, எலும்பு, மூளை, விந்து) வன்மையில் குறைந்து கொண்டே வரும்.

## நோய் வகை

இளைப்பு நோயானது உடல் வன்மையைக் குறையச் செய்து உடற்கட்டுகளைக் கேடு அடையச் செய்யும் இயல்பைக் கொண்டது. ஆகவே உயிர்த்தாதுக் குற்றங்களே அல்லாமல் அபானன், உதானன் முதலிய வாயுக்கள் கேடு அடைவதன் விளைவாகவும் இந்நோயின் வகைகள் பிரித்தறியப்படுகின்றன. கேடு அடைந்த தாதுக்கள் மற்றும் வாயுக்களின் குற்றத்தின் அளவாகவும் அவை பற்றும் இடங்களுக்குத் (உறுப்புகள்) தக்கவாறும் நோயின் குறிகுணங்களில் வேறுபாடுகள் காணப்படும். இந்த வேறுபாடுகளின் அடிப்படையில் யூகி முனிவர் இளைப்பு நோயைப் பனிரண்டு வகைப்பட்டதாக வகுத்துள்ளார். சித்த மருத்துவ மரபில் யூகி முனிவரது வகைப்பாட்டு முறையே பெருமளவில் பின்பற்றப் படுகின்றது. அவை பின்வருமாறு:

1. பிரம்ம இளைப்பு
2. இராச இளைப்பு
3. வைசிய இளைப்பு
4. சூத்திர இளைப்பு
5. வளி இளைப்பு (வாத சயம்)
6. அழல் இளைப்பு (பித்த சயம்)
7. ஐய இளைப்பு (கப சயம்)

8. வளி அழல் இளைப்பு (வாதப் பித்த சயம்)
9. வளி ஐய இளைப்பு (வாதக் கப சயம்)
10. அழல் ஐய இளைப்பு (பித்தக் கப சயம்)
11. விகார இளைப்பு
12. தொந்த இளைப்பு

என்பனவாகும். இவற்றின் குறிகுணங்களைத் தனித்தனியே காணலாம்:

## 1. பிரம்ம இளைப்பு

- ❖ உடல் இளைத்தல்
- ❖ இருமல்
- ❖ புண்ணிலிருந்து வடிகின்ற நீர் சளியுடன் காணல்
- ❖ கோழையோடு இரத்தம் காணல்
- ❖ உடல் காங்கை குறைதல்
- ❖ கண்ணிலிருந்து உதிரம் கொட்டல்
- ❖ காய்ச்சல்
- ❖ எந்நேரமும் மனக் கலக்கம்
- ❖ சுவையின்மை
- ❖ வாந்தி

முதலிய குறிகுணங்கள் தோன்றும்.

## 2. இராச இளைப்பு

- ❖ தலை நோதல்
- ❖ மார்பில் நோவு
- ❖ மஞ்சள் நிறத்தில் கோழை வெளியாகுதல்
- ❖ மூச்சுக் குழலில் வலி உண்டாகுதல்
- ❖ குரல் மாறிக் காணல்
- ❖ தேகம் மிக வலித்தல்
- ❖ உடலெங்கும் அனலாய்க் காணல்
- ❖ இருமலைத் தொடர்ந்து வாந்தியாதல்

முதலியன தோன்றும்.

### 3. வைசிய இளைப்பு

- கை, கால்களில் சோர்வு
- வெயிலைத் தாங்க முடியாமை
- வியர்வை மிகுந்து சுரம் காணல்
- இருமலைத் தொடர்ந்து கோழை வெளிப்படல்
- வெளுப்பு நோய்
- மலச்சிக்கல்
- பசியின்மை
- வேதனை
- கொட்டாவி
- உடல் நடுக்கம்

போன்றவை காணப்படும்.

### 4. சூத்திர இளைப்பு

- கண்ணில் அழற்சி
- கண்ணில் நீர்ப் பாய்தல்
- இருமல்
- சுவாசக் குழல் புண்ணாகுதல்
- அதிகாலை நேரங்களில் குளிர் எடுத்தல்
- மயிர்க்கூச்செறிதல்
- மயக்கம்
- வலி உண்டாதல்
- உடல் வேர்த்தல்
- வாந்தியுடன் கோழை வெளிப்படல்
- கோழை கண்டத்தில் அடைத்தல்
- குத்தல், எரிச்சல்
- கொட்டாவி
- மலச்சிக்கல்

முதலிய குறிகுணங்கள் காணப்படும்.

### 5. வளி இளைப்பு

- உடல் இளைத்தல்
- தலைவலி
- விக்கல்
- விலாவில் நோதல்
- நடுமுதுகில் நோதல்
- வாந்தியாதல்
- சுரம் தோன்றல்
- தாகம் எடுத்தல்
- தோள்பட்டை, கை, கால், கழுத்து நோதல்
- அதிசாரம் (மிகு கழிச்சல்)
- இருமல்
- உறக்கமின்மை
- நாவு கசத்தல்
- மார்பு குத்தல்

முதலிய குறிகுணங்கள் தோன்றும்.

### 6. அழல் இளைப்பு

- இரைப்பு
- விலாப் பக்கமும், கழுத்துப் பக்கமும் சுருங்குதல்
- இருமலைத் தொடர்ந்து கோழை உண்டாதல்
- இரத்த வாந்தி
- குரல் கம்மல்
- மூர்ச்சை
- உணவு செரியாமை
- வெளுப்பு நோய்
- மஞ்சள் நோய்
- மூத்திரம் மஞ்சள் நிறத்தில் வெளியாதல்
- சுரம்
- குளிர்

- வியர்வை
- மிகு சீதளம்
- தசையில் வலி
- வேதனை

முதலிய குறிகுணங்கள் தோன்றும்.

## 7. ஐய இளைப்பு

- இருமலைத் தொடர்ந்து வாந்தியாதல்
- வாந்தியில் கோழை காணல்
- ஏப்பம்
- சுவையின்மை
- அதிசாரம் (மிகு கழிச்சல்)
- குரல் கம்மல்
- உடல் வெளுத்தல்
- அசதி
- மூக்கு நீர்ப் பாய்தல்
- வயிறு கல்லைப் போலிருத்தல், பொருமல்
- எரிச்சல்
- செரியாமை
- வேதனை

என்பன இதன் குறிகுணங்களாம்.

## 8. வளி அழல் இளைப்பு

- தேகமெங்கும் கடுத்தல்
- குத்தல்
- சுரம்
- தாகம்
- கோழை கக்கல்
- சுவையின்மை
- இருமல்
- அதிக வாயு

- உடம்பெரிச்சல்
- மயக்கம்
- வாய் நீர் ஊறல்
- நீரருக்கல்
- உடல் மிக கறுத்தல்
- மிகு குளிர்ச்சி
- இரைப்பு
- தும்மல்
- வயிறு குத்தல்
- கண்ணில் நீர் வடிதல்
- புளித்தல்
- நெஞ்சு உலர்தல்

முதலியன காணப்படும்.

## 9. வளி ஐய இளைப்பு

- குரல் கம்மல்
- தொண்டை கம்மல்
- சுரம்
- இருமல்
- உடம்பெங்கும் கடுப்பு
- கோழை கக்கல்
- பலவீனம்
- அக்கினி மந்தம்
- அரோசகம்
- உடல் வெளுத்தல்
- கால், கை வற்றல்
- நாடி படபடத்தல்
- மிகு வெப்பு
- தண்டின் அடியில் தினவு

என்னும் குறிகுணங்கள் தோன்றும்.

## 10. அழல் ஐய இளைப்பு

- ❖ அதி நித்திரை
- ❖ அதி சோம்பல்
- ❖ சுரம்
- ❖ வாந்தி
- ❖ வாந்தியில் கோழை
- ❖ பேதியாதல்
- ❖ இருமலோடு கோழையில் இரத்தம் வெளியாதல்
- ❖ கோழை வெகு நாற்றத்துடன் காணல்
- ❖ தலைசுற்றல்
- ❖ பிரமை
- ❖ தாகம்
- ❖ மூக்கடைப்பு
- ❖ குளிர்
- ❖ நெஞ்சில் கபம்
- ❖ மூக்கு வறளல்

முதலிய குறிகுணங்கள் காணப்படும்.

## 11. விகார இளைப்பு

- ❖ காதில் ஒலி
- ❖ கண்ணிரண்டும் வெளுத்தல்
- ❖ உடல் வன்மை இழத்தல்
- ❖ உடல் இளைத்தல்
- ❖ விரணம் (புண்) தோன்றல்
- ❖ பிரமேகம்
- ❖ மூர்ச்சை உண்டாதல்
- ❖ விலாப் பக்கம் வலி உண்டாதல்
- ❖ வாந்தியில் மிக இரத்தம் காணல்
- ❖ மூச்சோடு சேர்ந்து வாய் நாற்றம் காணல்
- ❖ தீபனம் (பசி)

- ❖ எரிச்சல்
- ❖ நோவு
- ❖ கை, கால் குளிரல்
- ❖ மிகு குளிர்ச்சி
- ❖ உள் நாக்கில் பசபசப்பு, தினவு

முதலியன காணப்படும்.

## 12. தொந்த இளைப்பு

- ❖ குரல் மாறுதல்
- ❖ சுரம்
- ❖ இருமலைத் தொடர்ந்து கோழையில் இரத்தம் காணல்
- ❖ வாய் நாற்றம்
- ❖ நடுக்கல்
- ❖ பேதி
- ❖ மயக்கம்
- ❖ நடு நாக்கு கறுப்பாதல்
- ❖ உடம்பெங்கும் கற்றாழை நாற்றம்
- ❖ அதிகப் பேச்சு
- ❖ மலம், சிறுநீர் கட்டுப்படல்
- ❖ கக்கல்
- ❖ மேல் மூச்சு
- ❖ காறல்
- ❖ இருமல்
- ❖ வாய் கசத்தல்

என்பன இதில் தோன்றும் குறிகுணங்களாகும்.

**சாத்தியம்**

கழலை, விக்கல், மூச்சிரைப்பு, சுரம், எரிச்சல், தாகம், சஞ்சலம், வலி, மிகு குளிர், மயிர் சிலிர்ப்பு முதலிய குறிகுணங்கள் காணப்பட்டால் அது எளிதில் குணமாகக் கூடிய நோயாகும்.

**அசாத்தியம்**

வளி இளைப்பு, வளி ஐய இளைப்பு, அழல் ஐய இளைப்பு, வளி அழல் இளைப்பு முதலிய வகைகள் எளிதில் குணமாகாதவைகளாகக் கருதப்படுகின்றன.

மேற்கூறிய முறையானது இளைப்பு நோய் பற்றிய பொதுப்படையான பகுப்பு முறையாகும். இதனோடு கேடு அடைந்த தாதுக்களும் வாயுக்களும் பற்றும் இடங்களை (உறுப்புகளை) வைத்து, இளைப்பு நோயை அடையாளம் காணும் முறையும் சித்த மருத்துவ நூல்களில் கூறப்பட்டுள்ளது. அதனைக் காணலாம்:

**மூக்கில் தோன்றும் இளைப்பு நோய்**

அடிக்கடி மூக்கு அடைத்துத் தும்மல், இருமல் எனும் குணங்களைக் காட்டி, மூக்கு நீர்ப் பாயும். மூக்கில் உண்டான இக்கேடு எளிதில் தீராமல் நெடுநாட்கள் வரை மூக்கில் நீர்ப் பாய்ந்து கொண்டே வந்து, பின் மூக்கு நீர்க் கடினப்பட்டுச் சளி போல் விழும். அச்சளி சில வேளை கடினப்பட்டுச் சக்கைத்துண்டு போல விழும். மூக்குத் தண்டின் இரு பக்கத்திலேனும் அல்லது ஒரு பக்கத்திலேனும் புண்பட்டு உலராமல் சற்று வீங்கித் தடித்து, மற்றைய புண் போல் சிவந்திராமல் வெளுத்திருக்கும். புண்ணைச் சுற்றிக் குழகுழப்பான சீழ் அமைந்திருக்கும். அன்றியும் இளைப்பு நோயில் காணும் பொது குறி குணங்கள் பலவும் ஒன்றன்பின் ஒன்றாக இதில் தொடரும். இந்நோய் மிகுதியும் காணப்படுவதில்லை.

**தொண்டையில் தோன்றும் இளைப்பு நோய்**

குரல்வளையில் ஐயம் மிகுவதால் குரல் கம்மி, குரல் ஒலியைக் குறைத்து எளிதில் தீராமல் நாளுக்கு நாள் உடலை மெலியச் செய்து, இளைப்பு நோய்க்குரிய மற்ற குறிகுணங்களும் தொடரும். அன்றியும் குரல்வளையின் இரு பக்கத்திலும் கழலையைப் போன்ற வீக்கத்தை உண்டாக்கி, வெளுத்து நிரம்பியது போலக் காணும். அக்கழலையில் புண்பட்டுப் பள்ளம், மேடாகத் தோன்றும். புண்கள் போல் சிவந்திராமல் வெளுத்துக் காணும். குரல் கம்மல் நாட்பட்டு நிலைத்திருந்து எம் மருந்திலும் தீராமை என்னும் குறிகளையும் பெறும்.

**கழுத்தில் தோன்றும் இளைப்பு நோய்**

கழுத்தைச் சுற்றிலும் கண்டமாலை வருவது போல் சிறு கழலைகள் கண்டு, வீங்கி நொந்து, நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வரும். இக்கழலைகள்

முதலில் நோவுடன் பிறந்து பின் ஒன்றோடொன்று இணைந்து, மாலை தொடுத்தாற் போல அணி அணியாகத் தோன்றும். இந்நோய் பெரும்பான்மையும் சிறு வயதில் வருவதொன்றாகும்.

கழுத்தில் பிறந்த இக்கழலைகள் நாளுக்கு நாள் அளவில் பெருத்துத் திரண்டு கடினப்பட்டு உருண்டை உருண்டையாகக் காணும். சில வேளை அவைகள் பருத்து, பழுத்து, உடையும். உடைந்த பின்பு பிசுபிசுத்த சீழ் எளிதில் உலராது கொடுமைகள் பல செய்யும். எலும்பும் தோலுமாக ஆக்கும். சுரம், இருமல், பேதி முதலியன தொடர்ந்து, இறுதியில் கொல்லும்.

## மார்பில் தோன்றும் இளைப்பு நோய்

இந்நோய் நுரையீரலைப் பற்றி மெல்ல மெல்லப் பரவும். நோயினர் அறியாவண்ணம் உடலை மெலிவடையச் செய்யும். உணவில் வெறுப்பை உண்டாக்கும். மூக்கு நீர்ப் பாய்தல், சிறு அளவில் இருமுதல், அதில் கொஞ்சம் சளியும், சில வேளை குருதியும் கலந்து வெளியாதல், குரல் கம்மல், ஐயக் (கப) காலமாகிய மாலைப் பொழுதில் சுரம் வருதல், மூச்சும் தடைப்படல் என்னும் குறிகளைக் காட்டி, பக்கசூலை, மிகுசுரம் என்னும் பல நோய்களையும் துணைகொள்ளும். சில வேளைகளில் தீவிரமான சுரம் காய்ந்து இருமல், இளைப்பு என்னும் குணங்களோடு, சுரம் காய்வதும் இறங்குவதுமாக நெடுநாள் வரை இருந்து, இடைவிடாத இருமலை உண்டாக்கி, மிகுந்த அளவில் கோழையைக் கக்கச் செய்யும். இவ்வாறு தீவிரமாகக் காயும் சுரம், பகல் எல்லாம் காய்ந்து இரவில் விட்டு மிகவும் வியர்க்கும். காலை வேளையில் சுரம் இராது. சிலருக்கு மேற்கூறிய குறிகுணங்கள் ஒன்றையுமே காட்டாமல் உடல் மட்டும் மெலிவடைந்து, நாளுக்கு நாள் வன்மை குறைந்து, சிறிதளவில் இருமலைக் காட்டிப் பின் தீவிரப்படுத்துவதும் உண்டு.

மற்றும் சிலருக்கு ஐயச்சுரம் ஏற்பட்டுத் தணிந்து பின், சிறு சுரம் தொடர்ந்து உடலை மெலியச் செய்து, இளைப்பு நோயை உண்டாக்கிப் பின் மற்றைய குறிகுணங்களையும் காட்டும்.

## அக்குளில் தோன்றும் இளைப்பு நோய்

அக்குள்களில் தோன்றும் நோயானது பத்துப் பதினைந்து வயதுக்கு மேல் காணும். மேற்கூறிய குறிகுணங்கள் யாவும் கண்டு, சிறு கழலைகள் உண்டாகும்.

### உந்திக்குக் கீழ் தோன்றும் இளைப்பு நோய்

உந்திக்குக் கீழ் வரும் இளைப்பு நோய் குடலைப் பற்றியும், குடலைச் சார்ந்த உறுப்புகளைப் பற்றியும் உண்டாகும். இதில் மார்பைப் பற்றிய இளைப்பு நோயின் குறிகுணங்களோடு அடிக்கடி கழியச் செய்யும். உடல் மிகவும் இளைக்கும். அடிவயிறும் சிறிது பெருத்துக் காணும். இந்நோய் சிறு வயதினர்க்கு உண்டாயின் வயிறு பெருத்து, கைகால் சூம்பி, முகம் சுருங்கி, உடல் அடிக்கடி சுரத்தை வருவிக்கும். வயிற்றுத் தோலின் கீழ் சிறு கழலைகள் போலத் திரளும். நாளுக்கு நாள் வயிறு பெருத்துக் கொண்டே வருவதுடன் கழிச்சலையும் உண்டாக்கும். வயிறு நோதல், பெருவயிறு போல் வயிற்றுள் நீர் கோர்த்தல் என்னும் குறி குணங்களையும் காட்டும்.

### மார்புக்குக் கீழ் தோன்றும் இளைப்பு நோய்

இது இடப்பாட்டீரல், நீர்க் குண்டிக் காய் ஆகியவைகளைப் பற்றி வரும் நோயாகும். இடப்பாட்டீரல் நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வரும் அவ்வாறே நீர்க்குண்டிக்காய் வீங்கி, அடிக்கடி நீரிழிதல், அதில் சிறிது சீழ் கலந்தேனும் குருதி கலந்தேனும் காணுதல், நீரிழியும் போதெல்லாம் நீர்ப்புழை எரிதல், நீரை அடக்க முடியாமல் இழிதல் முதலிய குறிகுணங்களைக் காட்டும். இவற்றோடு இளைப்பு நோயில் உடல் இளைத்தல் போலவே, இதிலும் உடல் இளைத்துக் கொண்ட வரும். இடுப்பின் பின் பக்கத்தில் தாங்க முடியாத வலியை உண்டாக்கும்.

### தோலைப் பற்றி வரும் இளைப்பு நோய்

பெரும்பான்மையும் சிறு வயது அல்லது நடு வயதில் வரும் நோயாகும். இந்நோய் மூக்கு, தாடை, கால் விரல், கை, முதலியவைகளில் ஒரு படை போல் தோன்றி, சிறிதும் பெரிதுமான கழலைகளைப் போல வளர்ந்து புண்ணாகும். இவ்வாறாகப் புண்ணாவதும் பக்குக் கட்டிக் கொள்வதுமாகவே ஆறாமல் நிலைத்து விடுவதுண்டு.

பக்கசூலை நோயில் காணும் குறிகுணங்களாகிய மூச்சு விட முடியாமை, மூச்சு விடும்போதெல்லாம் விலா எலும்பு வலித்தல், குத்தல், சிறுசுரம் காய்தல், படுக்கையில் இருக்க முடியாமை, சிறு இருமல், இருமிக் கோழையைத் துப்ப முடியாமை முதலியவற்றைப் பிறப்பித்து, நாட்செல்லச் செல்ல மார்பின் சவ்வுகளினிடையே நீர் கோர்த்து, விலா எலும்புகள் தெரியாமற்படி வீங்கிக் காணும். அத்துடன் இந்நோய் இளைப்பு நோயில் காணும் குறிகள் யாவற்றை பெற்றிருக்கும்.

இது பக்கசூலை நோய்க்குத் துணையாகவும் வருவதுண்டு. இளைப்பு நோய் முதலில் வருங்கால் திடீரெனப் பக்கத்தில் தாங்க முடியாத வலியைத் தந்து அங்கு ஏதோ கிழிந்து விட்டது போல் தோன்றி, மூச்சுவிட முடியாமல் பரிதவிக்கச் செய்யும். அத்துடன் மனம் திடுக்கிடுதல், முகம் வெளுத்து நீலமாதல், கை கால் சில்லிட்டுப் பிசுபிசுத்த வியர்வை விடல், மார்பு துடித்தல், நாடி நடை மெலிதல், பேச முடியாமை போன்ற குறிகளையும் காட்டும்.

## கீல்களில் வரும் இளைப்பு நோய்

இது பெரும்பான்மையும் சிறுவர்கட்கு முழங்கால், முழங்கைகளில் வரும். நரித்தலை வாதத்தைப் போல முட்டிகளில் ஒன்றேனும் பலவேனும் வீங்கி, நோயுற்றுச் சிறுகச் சிறுக வீங்கிக் கொண்டே வரும். வீங்கிய வீக்கத்திற்கு ஏற்ப அங்கு நீர்க் கோர்த்துக் கொள்ளும். இதனோடு சிறு சுரம், உடல் இளைத்துப் போதல் முதலிய நோய்க்கான மற்ற குறிகுணங்களையும் காட்டும்.

இவற்றுள் இடுப்பின் கீழே உள்ள இரு பட்டை எலும்பும், கால் மேல் எலும்பும் கூடும் கிண்ணிப் பந்து சந்தில் உண்டாகும் நோயில், பெரும்பான்மையும் மேற்காலின் எலும்பு முட்டி பாதிக்கப்படும். பின் அக்கீல் தாபிதப்பட்டு, அது வெகு சீக்கிரத்தில் பரவி எலும்பை அழுகச் செய்து, காலின் அளவைக் குறுகச் செய்யும். அதனால் நோயுற்ற கால், மற்ற காலை விடக் குறுகிக் காணுவதோடு, காலை நீட்டவும் மடக்கவும் முடியாத படிச் செய்து, நாளுக்கு நாள் உடலை இளைக்கச் செய்து, மற்ற இளைப்பு நோயின் குறிகுணங்களையும் காட்டும்.

## எலும்பைப் பற்றி வரும் இளைப்பு நோய்

தலையில் இருந்து கீழ் வரையும் உள்ள முதுகுத்தண்டு எலும்புகளுள் எவ்வெலும்பையாவது பற்றி நோய் உண்டாகும். பற்றிய எலும்பிற்கேற்பக் குறிகுணங்களும் வேறுபட்டு அமையும்.

முதுகுத்தண்டின் கீழ் பாகத்தைப் பற்றி வரும் நோயில் முதுகுத் தண்டின் உறுப்புகள் எப்பக்கத்தேனும் சிதைந்து, சிதைந்த எலும்பின் எடை குறைவதால், முதுகுத் தண்டு வளைந்து காணும். இவ்விடத்தில் மிக்க வலி இல்லாமல் இருப்பினும் தலையில் தட்டல், அடித்தல் முதலியவைகளின் அதிர்ச்சியால் நோயுள்ள எலும்பில் தாங்கமுடியாத வலி ஏற்படும். அன்றியும் முதுகுத் தண்டு வளையும் போதும் வலிக்கும். மேலும் அரையின் பக்கமுள்ள தண்டெலும்புகளின் நோயில் கால் குறைதலும், அதற்கு மேல் உள்ள இடத்தில் உள்ள போது அடிவயிறு, பிட்டம் முதலிய இடங்களில் நோதலும், மார்பின் பின்புறம்

உள்ளபோது, மேல் வயிறு வலித்தலும் உண்டாகும். இன்னும் முதுகுத் தண்டைக் குனியவும் நிமிரவும் ஒட்டாமற்படி செய்யும். நோய் முதிர, முதுகு எலும்புகள் இணைந்து பின் பக்கமாக வளைந்து கூன் அடையும். அல்லது முன் பக்கமேனும் இட அல்லது வலப் பக்கமேனும் வளைந்து காணும். இது கழுத்தின் இடமாக இருப்பின் தலை நிமிர்ந்து, அதற்குத் துணையாகத் தோள் பட்டைகளை அணையச் செய்து, தலையைத் திரும்பிப் பார்க்க முடியாமல் உடலோடு அசையச் செய்யும்.

இந்நோயில் எலும்புகள் அழுகிச் சீழ் உண்டாகி, அச்சீழ் எலும்புகளைப் பற்றி மெல்லிய சவ்வுகளின் இடையே நுழைந்து, நோயுற்ற இடத்திற்குத் தகுந்தது போல வாயின் கீழ்ப்புறம், விலாப்புறம், மார்பின் பக்கம் அல்லது துடையின் இடுக்கு ஆகியவைகளில் பாய்ந்து, கட்டி போல் தோன்றி உடைந்து வடிவதுண்டு.

அழுகி நொந்த எலும்பினிடையே அகப்பட்டு நரம்புகள் சிதையுமாயின், அந் நரம்புகளின் இயக்கம் கெட்டு, அங்குள்ள உறுப்புகள் செயலற்றுப் போதல், குடைதல், குத்தல், மரத்துப் போதல், பக்கவாத நோயைப் போன்று கால் நடக்க முடியாமை, சிறுநீரைக் கழிக்க முடியாமை முதலிய குறிகுணங்களைக் காட்டும். கழுத்தினிடத்துள்ள எலும்பைப் பற்றி வரும் நோய் திடீரெனக் கொல்வதும் உண்டு.

## இளைப்பு நோய் மருத்துவம்

இந்நோய் ஐயப் பெருக்கால் பிறந்து, ஏழு உடற்கட்டுகளின் வன்மையையும் குறையச் செய்து, வாயுக்களைத் தூண்டும். தூண்டப்பட்ட வாயுக்கள், வாழும் இடத்தில் நோயினை விளைவிக்கும். ஆதலால் தன்னளவில் மிகுந்த உயிர்த்தாதுவையும் அதற்குத் துணையாயுள்ள மற்ற தாதுக்களையும் தன்னிலைப்படுத்தி, மெலிவடைந்த உடற்கட்டுகளை வன்மைப்படுத்தி, உடலுக்கு உரம் உண்டாக்குவதற்கும், வாயுக்களைத் தன்னிலைப் படுத்துவதற்குமான மருத்துவ முறையை மேற்கொள்ள வேண்டும். மற்ற நோய்களைக் காட்டிலும் இது பசித்தீயைக் கெடுத்து, உடல் வன்மையைக் குறைத்து, உடலை இளைக்கச் செய்யும் நோய் ஆதலால் பசித்தீயைத் தூண்டக் கூடியதும், உடலுக்கு உரம் தரக் கூடியதுமான மருந்துகளையும் உணவு வகைகளையும் கொடுத்தல் வேண்டும்.

ஐயப் பெருக்கைப் போக்குதற்காக வாந்தி, கழிச்சல் ஆகியவற்றை உண்டாக்கி வறட்சியைத் தணிக்க வேண்டும். பால், நெய் முதலியவைகளோடு மருக்காரை நெய், மருக்காரைக் குடிநீர் முதலியவைகளைக் கொடுக்கில், வாந்தியொடு கோழை வெளியாகும்.

அவ்வாறே நிலாவாரை நெய்யினைக் கொண்டு கழிச்சலை உண்டாக்கவும். பின்பு பசித்தீயைப் பெருக்கி, உண்ட உணவைச் செரிப்பித்து, உடலுக்கு ஊட்டம் தரக்கூடியதான மருந்துகளையும் உணவுகளையும் அளித்து, உயிர்த்தாதுக்களைத் தன்னிலைப்படுத்தவும். தொடர்ந்து நோயினை நீக்குவதற்காகப் பெரு மருந்துகளாகிய இரசப்பாடாணம், தங்கம் முதலிய உலோகங்களால் ஆக்கிய பற்பம், செந்தூரம் முதலியவைகளையும் கொடுத்தல் நல்லது.

### வாந்தி, கழிச்சலுக்கு மருந்து

- இலைக்கள்ளிச் சாறு அரை ஆழாக்கு; மருக்காரைப் பழம் இரண்டு பலம்; அதிமதுரம் பலம் ஒன்று; மிளகு, திப்பிலி, சுக்கு, வகைக்கு அரை பலம்; நெய் அரைப்படி. இவற்றைக் கூட்டி நெய் காய்த்து வடித்ததில் ஒரு கரண்டி அளவு கொடுக்க, வாந்தியுடன் கோழையும் வெளியாகி ஐயம் தணியும்.
- கோரோசனைக் கருப்பு ஒரு சிட்டிகையைக் கொத்துமல்லிக் குடிநீரில் கலந்து, சர்க்கரையும் நெய்யும் கூட்டிக் கொடுக்க, வாந்தியோடு கழிச்சலும் உண்டாகும்.
- நிலாவாரை, சிவதை, மருக்காரைவேர், சுக்கு, ஏலம், சிற்றரத்தை, கொம்புக்கள்ளிவேர் ஆகியவற்றில் வகைக்கு ஒரு பலம் எடுத்து, இரண்டு படி நீர் விட்டு அரைப்படியாகக் காய்த்து வடித்ததில் நெய் அரைப் படி கூட்டிப் பதமாகக் காய்த்து, அதில் அரை முதல் ஒரு உச்சிக் கரண்டி அளவு கொடுக்க வாந்தியும் கழிச்சலும் உண்டாவதோடு பசியும் ஏற்படும்.
- உத்தாமணி எண்ணெய், கழற்சி எண்ணெய் போன்றவைகளுள் ஒன்றை நோய் வன்மைக்கும் நோயினர் வன்மைக்கும் ஏற்ப அளவிட்டுக் கொடுக்கலாம்.

### பசித்தீயைத் தூண்டுவதற்கு மருந்து

*நண்டுத் தீநீர்*

வரப்பு நண்டு முந்நூறு கொண்டு கழிக்க வேண்டியவைகளைக் கழித்து அலம்பி, ஒன்றிரண்டாக இடித்து அதில் பதினைந்து பலம் நீர் விட்டுச் சீரகம், இஞ்சி, இலவங்கம், இலவங்கப் பட்டை, சாதிக்காய், சாதிப்பத்திரி, ஓமம், ஆகியவற்றில் வகைக்கு ஒரு பலம் எடுத்து இடித்துப்போட்டுத் தீநீர் வடித்ததில் அரைக்கால் முதல் கால் ஆழாக்கு வரை கொடுக்கில், அது பசித்தீயைத் தூண்டி. உண்ட உணவைச் செரிப்பித்து, உடலுக்கு ஊட்டத்தைத் தரும். இது கைகண்ட மருந்தாகும்.

*நத்தை நெய்*

நத்தைச் சதை வீசை ஒன்று, ஆட்டுப் பால் படி நான்கு, நெய் படி இரண்டு. இவற்றைச் சேர்த்துக் காய்த்து நெய் வடித்து வைத்துக் கொள்ளவும். இலவங்கம், சாதிக்காய், சாதிப்பத்திரி, சித்திரமூலம், அமுக்கராக் கிழங்கு, தண்ணீர்விட்டான் கிழங்கு, திப்பிலி, மிளகு, சுக்கு, வகைக்கு ஒரு பலமாகக் கலந்து, நீர் நான்கு படி கூட்டி, நாலிலொன்றாகக் காய்த்து வடித்துக் கொள்ளவும். இதை மேற்படி நெய்யில் கூட்டி, மீண்டும் நீர்வற்றக் காய்த்து மெழுகு பதத்தில் வடித்துக் கொண்டு, அந்நெய்யில் ஒரு கரண்டி அளவில் கொள்ளவும். இவ்வாறே உடும்பு நெய், முயல் நெய் முதலியவற்றையும் பயன்படுத்தலாம்.

*மாத்திரை*

சயகுலாந்தகம், பூரணசந்திரோதயம், மகாவசந்தகுசுமாகரம் போன்ற பெருமருந்துகளில் ஒன்றைத் துணை மருந்தோடு கொடுத்தல் வேண்டும்.

*பற்பம்*

தாளகப்பற்பம், வெள்ளைக்கல்பற்பம், தங்கப்பற்பம், வெள்ளிப் பற்பம் அயநாகப் பற்பம் போன்றவைகளையும் வழங்கலாம்.

*உணவு*

இந்நோய் படிப்படியாக ஒவ்வோர் உடற்கட்டையும் மெலியச் செய்து கொண்டு வருமாதலின் உடலின் ஊட்டம் குறையா வண்ணம் பால், நெய் முதலிய நெய்ப்புப் பொருள்களையும், ஊன் பொருளையும், பழ வகைகளையும் செரிப்புத் தன்மைக்குத் தகுந்தவாறு கொடுத்தல் வேண்டும். செரிப்புக் குறைந்துள்ளபோது, செரிப்பை உண்டாக்கக்கூடிய காய்கறிகளைக் கொள்வது மிக நன்று. நண்டு, முயல் ஆகியவைகளை வழங்கலாம். பத்தியமாக உப்பு, புளியை நீக்க வேண்டும்.

# 4

# இருமல்

***முன்னுரை***

ஐயத் தாது குற்றமுறுவதால் தோன்றும் நோய்களுள் இருமலும் குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைகின்றது. இது காசம், ஈளை என்றும் அழைக்கப்படுகின்றது. கபக் கேட்டினால் மார்பிலும் தொண்டையிலும் சேர்ந்த கோழையானது வெளியேற்றப்படுகின்றது. அவ்வாறு கோழை வெளியேற்றப்படும் தொழிலானது ஓசையுடன் கூடியதாக அமைகின்றது. அதுவே இருமல் என்னும் பிணியாக அடையாளப்படுத்தப்படுகின்றது.

**நோய் வரும் வழி**

- குளிர் காற்றில் ஈடுபடல்
- மிகுதியாக வெயிலில் அலைதல்
- மிகுந்த குளிர்ச்சி அல்லது சூட்டைத் தரக்கூடிய பொருட்களை உண்ணல்
- உரத்துக் கத்துதல் அல்லது பாடல்
- புழுதி, சுண்ணம், பூநீறு, புகை, மிகுந்த காரம், நறுமணம், துர்நாற்றம் ஆகிய பொருட்களை முகர்தல்
- குளிர்காலம்
- இளைப்பு, இரைப்பு, நுரையீரல் புற்று, இதயம் சார்ந்த நோய்கள் ஆகியவற்றின் காரணமாக
- புகை பிடித்தல், கஞ்சா, மது ஆகிய பழக்கம்
- நாக்குப் பூச்சி முதலிய கிருமித் தொற்று

ஆகியவைகளின் வழியாகவும் தொழில் சார்ந்தும் இருமல் வரும் என்று கூறப்படுகிறது.

**பொதுக் குறிகுணங்கள்**

சித்த மருத்துவ நூல்கள் பின் வருவனவற்றை இருமலின் பொதுவான குறிகுணங்களாகக் குறிப்பிடுகின்றன:

- ❖ மூக்கு, தொண்டை, மூச்சுக் குழல் ஆகியவைகளில் வெப்பம் உண்டாகும்.
- ❖ மூக்கில் நீர் வடியும்.
- ❖ கண் சிவக்கும்.
- ❖ சுரம் காயும்.
- ❖ தொண்டை கட்டும்.
- ❖ தலை கனக்கும்
- ❖ மார்பு நோகும்.
- ❖ நொந்து இருமல் விளைவிக்கும்.
- ❖ வாய் ஓயாமல் இருமச் செய்யும்.
- ❖ கோழை, சளி வெளியாகும்.
- ❖ கோழை கடினப்பட்டு நுரையுடன் வெளியாகும்.
- ❖ மூச்சு த் தடுமாறும்.
- ❖ உடல்வன்மை குறையும்.
- ❖ முகம் கறுத்து, உதடு நீலநிறமாகும்.
- ❖ நோய் முதிர முதிர சளியானது சீழ் போல நாற்றத்துடன் வெளிப்படும்.
- ❖ மார்பு நடு பருத்து, அடியும் நுனியும் குறுகித் திணரும்.
- ❖ மூச்சுத் திணரும்.
- ❖ நாள் செல்லச் செல்ல ஐயத் தாது குறைந்து, உடல்வன்மை குன்றி, இருமலும் சளியும் ஆயாசமும் அதிகமாகும்.

**நோய் வகை**

சித்த மருத்துவ நூல்களில், சிறப்பாகத் தோன்றும் குறிகுணங்களின் அடிப்படையில் இருமல் நோயானது பின்வருமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளது:

**1. வளி இருமல்**

- ❖ வளிக் குற்றம் மிகுந்து, தொண்டையில் புண்பட்டது போல் சிவத்தல்
- ❖ காது நோய்

- காதடைப்பு
- மார்பு நோய்
- மூச்சு வாங்கவும் விடவும் முடியாமை
- தொண்டையை அடைத்தது போல் நோதல்
- பெருமூச்சு விடல்
- விலாப் பக்கம் வலி
- வாந்தி வருவது போன்ற உணர்ச்சி
- வாய் ஓயாதபடி இருமலை உண்டாக்கி, நுரையுடன் கறுநிறத்தில் கோழையை உமிழச் செய்யும்.

## 2. அழல் இருமல்

- அழல் தாது மிகுந்த நிலையில் குளிர்ச்சியான பொருள்களை உண்பதால் இருமல் உண்டாகி, இனிப்பு அல்லது உப்புச் சுவையுள்ள வாந்தி
- தலைவலி
- உடல்வலி
- சுரம்
- தாகம்
- இருமி இரத்தம் கக்கல்
- உடல் வறண்டு இளைத்தல்
- உணவில் வெறுப்பு
- மயக்கம்
- புளியேப்பம்
- மனம் தடுமாறல்

ஆகியன தோன்றும்.

## 3. ஐய இருமல்

- ஐயம் மிகவும் கேடடைந்து முகம் ஊதல்
- மூக்கு நீர் வடிதல்
- தொண்டை புண்ணாதல்
- மார்பு நொந்து இருமலை உண்டாக்கல்
- வாய் ஓயாது இருமுதல்

- ❖ கோழை வெளுத்துச் சீழ் போல் முடை நாற்றத்துடன் வெளியாதல்.
- ❖ பெருமூச்சு
- ❖ அடிவயிறு நோதல்
- ❖ வயிற்றில் காற்று நிரம்பல்
- ❖ சுரம்
- ❖ மனக் கலக்கம்
- ❖ உடல் இளைத்தல்
- ❖ வாந்தி
- ❖ உடல்வலி

முதலிய குறிகுணங்கள் உண்டாகும்.

## 4. வளி அழல் இருமல்

- ❖ தொண்டை உலர்ந்து புண்பட்டு வாய் ஓயாது இருமி இரத்தம் வெளியாதல்
- ❖ காதடைப்பு
- ❖ காதிரைச்சல்
- ❖ செரியாமை
- ❖ பேதியாதல்
- ❖ வயிறுப்பல்
- ❖ மார்பு எலும்பும் முதுகின் தண்டும் நோதல்
- ❖ மார்பு நோய்
- ❖ மூச்சு படபடத்து, சாதலைப் போல் வெளிப்படல்

ஆகியவற்றுடன் சுவாசகாச நோயில் உண்டாகும் இரைப்பு முதலிய குறி குணங்களையும் இதில் காணலாம்.

## 5. பக்க மந்தார இருமல்

இந்நோய் முன் நிலவிலும் பின் நிலவிலும் வரும் நோயாதலால் பக்க மந்தார இருமல் என வழங்கலாயிற்று. இடுப்பு வலி, வயிறு பொருமல், மூக்கில் நீர்ப் பாய்தல், தொண்டை கம்மல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி சில நாட்கள் கழித்து குணமடையும்.

## 6. சுடர் இருமல்

இது பிள்ளை பெற்ற பின் தாய்க்கு வரும் நோயாகும். பிள்ளை பெற்று உடல் தளர்ந்திருக்கும் காலத்தில் ஐயத் தாது தன்னிலை மாறித் தொண்டை, மார்பு, மூக்கு ஆகியவற்றில் தங்கி குத்தல், மூக்கு நீர்ப் பாய்தல் தலை நோதல், மார்பு வலி, நீர்வேட்கை, சுரம், இடைவிடாத இருமல், இழுப்பு, பெருமூச்செறிதல், கண்கள் சிவந்து முட்டுதல் என்னும் குறிகுணங்களைப் பிறப்பிக்கும்.

## 7. இழுப்பு இருமல்

- ❖ மூக்கிலிருந்து வெளியாகும் காற்றில் அனல் வீசும்.
- ❖ தொண்டை கட்டி, மூச்சு எலி கூச்சலிடுவது போல் ஒலிக்கும்.
- ❖ மார்பில் கோழை கட்டி இருமல் எழும்.
- ❖ நோய் முதிர்ந்த நிலையில் வெளியாகும் மூச்சு நல்ல பாம்பு சீறுவது போல் ஒலிக்கும்.
- ❖ வயிறுப்பும்.
- ❖ உணவு செரியாது.

இதனை இசிவு இருமல் எனவும் கூறுவர்.

## 8. இரத்த இருமல்

- ❖ கண்டத்தில் வேதனை
- ❖ குரல் கம்மல்
- ❖ வாந்தியில் கபமும் செந்நீரும் கலந்து மஞ்சள் நிறத்துடனேனும் அல்லது இரத்தமேனும் உண்டாதல்
- ❖ வயிறு நோதல்
- ❖ கை கால் ஓய்ச்சல்
- ❖ மார்பிலும் பக்கங்களிலும் ஊசியால் குத்துவது போல் நோதல்
- ❖ தாகம்
- ❖ குரல் மாறல்
- ❖ பெருமூச்செறிதல்
- ❖ கோழை இரத்த நிறமாகவும் எரிச்சலுடனும் இருத்தல்
- ❖ நெஞ்சில் குறு குறு என்று சப்தம் உண்டாதல்

என்பன இதன் குறிகுணங்களாகும்.

### 9. பீனிச இருமல்

- ❖ கோழை இறைச்சி நாற்றத்துடன் விழல்
- ❖ ஆயாசம்
- ❖ இரைப்பு
- ❖ உடல் இளைத்தல்
- ❖ மலமும் நிறுநீரும் கறுநிறம் அடைதல்
- ❖ உணவு செல்லாமை
- ❖ வயிறு பொருமலுடன் நோதல்
- ❖ உடல் குளிர்ந்திருத்தல்
- ❖ மூக்கு நீர்ப்பாய்தல்

முதலானவை தோன்றும்.

### 10. மருந்தீடு இருமல்

இடு மருந்து என்பது ஒருவர் மற்றொருவரைத் தன் வழிக்குக் கொணரும் பொருட்டுக் கொடுக்கும் வசியம் போன்ற மருந்தாகும். இம்மருந்து நாள் செல்லச் செல்ல உடல் வன்மையைக் குறைத்து, இருமலை உண்டாக்கும். இதனால்:

- ❖ உடல் மெலியும்
- ❖ தொண்டை புண்ணாகும்
- ❖ வாய் ஓயாத இருமல் உண்டாகும்
- ❖ வாய் நாற்றம்
- ❖ தலை கிறுகிறுப்பு
- ❖ மயக்கம்
- ❖ மிகுபசி

இவற்றோடு குன்ம நோயில் தோன்றும் குறிகுணங்களைக் காட்டி, உடலையும் மனத்தையும் கெடுத்து, உயிரையும் மாய்ப்பதுண்டு.

### 11. கஞ்சா இருமல்

- ❖ கஞ்சா, புகையிலை, அபின், முதலியவற்றின் புகையைப் பிடிப்பவர்கட்குத் தொண்டை, மூச்சுக் குழல், நுரையீரல் ஆகியவைகள் வெதும்பி இருமல் உண்டாகும்.
- ❖ இதில் உடல் மெலிந்து, இருமல் தீராமல் நாட்பட நிலைத்திருக்கும்.

நாட்கள் செல்லின் இருமலும் கோழையும் அதிகமாகி, கோழையானது கறுத்துக் கெட்டிப்பட்டு வெளியாகும்.

### 12. மது இருமல்

கள், சாராயம் ஆகியவைகளை அளவு கடந்து அருந்தலால் உடல் வன்மை குறைந்து தொண்டை, அகடு, ஈரல் முதலியன வெதும்பி இருமலை உண்டாக்கும். இடைவிடாது இருமி மேல்மூச்சு, ஆயாசம், இளைப்பு முதலியனவும் தோன்றும்.

### 13. சுர இருமல்

வெகுநாட்கள் தனிப்பட்ட சுர நோயால் உடல் மெலிந்த நிலையில் வரும் இருமல் சுர இருமல் எனப்படும்.

*தீருபவை*

வளி இருமல், ஐய இருமல், வளி அழல் இருமல், அழல் இருமல், மருந்தீடு இருமல், மது இருமல், சுர இருமல் ஆகியன எளிதில் குணமாகும் தன்மை உடையன.

*தீராதவை*

கஞ்சா இருமல், இரத்த இருமல், பீனிச இருமல், பக்க மந்தார இருமல், இழுப்பு இருமல் முதலியன எளிதில் தீராதவையாகும்.

### இருமல் மருத்துவம்

கப மிகுதியைத் தன்னிலைப் படுத்தவும், தன்னளவில் மிகுந்த மேல்நோக்குக் காலைத் தன்னிலைப் படுத்தவும், கோழையை வெளிப்படுத்தவும் மருத்துவம் செய்தல் வேண்டும். சித்த மருத்துவ முறைப்படி பெரும்பாலான நோய்களுக்குக் கழிச்சல், வாந்தி ஆகியவற்றை ஏற்படுத்தி, உயிர்த் தாதுக்களைத் தன்னிலைப் படுத்திய பிறகே உரிய மருத்துவம் செய்யப்படுகிறது.

### கழிச்சலுக்கு

| | | |
|---|---|---|
| மாந்த எண்ணெய் | — | 5 மிலி. காலையில் |
| சஞ்சீவி மாத்திரை | — | காலையில் வெந்நீரில் |
| கோரோசனை | — | 100 மிலி. காலையில் |

ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றைக் கொடுத்துக் கழிச்சலை ஏற்படுத்தலாம்.

மூக்கில் நீர் பாய்தல், தும்மல், தொண்டை கட்டல் ஆகியவை

இருப்பின்: தும்பைப் பேறு 1 கி. மிளகு $^1/_2$ கி. தேன் விட்டு அரைத்து 4 பங்காக்கி, 2 வேளை, 4-5 நாள் தரலாம்.

*தும்மல் இருப்பின்*

தும்பைப்பூ சாற்றைத் துணியில் தடவித் துவட்டி மூக்கிடவும்.

*மூக்கில் நீர்ப் பாய்தல் அதிகப்படின்*

நீர்க் கோவை மாத்திரையை வெந்நீரில் உரைத்து நெற்றியில் பற்றிடலாம்.

*கோழை நாற்றத்துடன் வெளிப்படின்*

| | |
|---|---|
| சிவனார் அமிர்தம் | - 100 மி.கி. |
| கஸ்தூரி கருப்பு | - 60 -120 மி.கி. |
| முத்துச்சிப்பிப் பற்பம் | - 100 மி.கி. |
| தாளகக் கருப்பு | - 60- 120 மி.கி. |

இவற்றைத் தாளிசாதி சூரணத்துடன் சேர்த்துத் தேனில் உண்ணலாம். அல்லது தங்கப் பற்பம், முத்துப் பற்பம் ஆகியவற்றைத் தனித்தனியே எடுத்து, தும்பைச் சாற்றையும் தேனையும் கலந்து 2 வேளை தரலாம்.

*நாட்பட்ட இருமலுடன் இரைப்பு காணின்*

செம்புப் பற்பம் அல்லது கஸ்தூரி கருப்பில் 60 மி.கி. எடுத்து இருவேளை உத்தாமணிச் சாற்றில் தரவும்.

*புகை இருமலுக்கு*

திரிகடுகு சூரணத்தை மை போல் அரைத்துச் சம எடை வெள்ளை சர்க்கரை சேர்த்து, 300 மி.கி. காலையில் பசு நெய்யில் குழைத்துத் தரலாம். அல்லது திப்பிலியை மை போல் அரைத்து இருவேளை தேனில் தரலாம்.

*ஓயாத இருமலுக்கு*

தாளிசாதி வடகத்தை வாயில் அடக்கிக் கொள்ளலாம். அல்லது 10 மிளகை நெய்யில் வறுத்து அத்துடன் கறிமஞ்சள் 15 கி. சேர்த்துப் பொடித்து, 70 கி. சர்க்கரை எடுத்துப் பாகு செய்து, இத்தூளைப் போட்டுக் கிண்டி கழற்சிக்காய் அளவு உருண்டை செய்து வாயில் அடக்கிக் கொள்ள, மார்பில் அடங்கி இருக்கும் சளி கரைந்து, இருமல் தணியும்.

*இரத்த இருமலுக்கு*

இம்பூறல் குடிநீர்

இம்பூறல் அடை

நத்தை பற்பம்

முத்துச்சிப்பிப் பற்பம்

பவழப் பற்பம்

முத்துப் பற்பம்

ஆகியவை இதற்குச் சிறந்த மருந்துகளாகும்.

*கோழை இருமலுக்கு*

ஆடாதோடைக் குடிநீர் அல்லது அரத்தைக் குடிநீரை வேளைக்கு 30-60 மி.கி. வரை பருகலாம்.

*உடல் வன்மை பெற*

மகாவசந்தகுசுமாகரம்

தாளிசாதி வடகம்

பூரணசந்திரோதயம்

ஆகியன சிறந்த மருந்தாகும்.

**குழந்தைகளுக்கு**

குழந்தைகளுக்கச் சளி கட்டி, இருமல், சுரம், மலச்சிக்கல், மூக்கில் நீர்ப் பாய்தல் ஆகியன இருப்பின்:

கோரோசனை மாத்திரை

சாந்த சந்திரோதய மாத்திரை

கஸ்தூரி மாத்திரை

மகாவசந்தகுசுமாகர மாத்திரை

ஆகியவற்றில் ஏதேனுமொன்றைத் தேன் அல்லது தாய்ப்பாலில் தரலாம். மடக்கு கரிசாலைத் தைலமும் காசத்திற்குச் சிறந்த மருந்தாகும்.

*தலைக்குத் தைலம்*

சுக்குத் தைலம், அரக்குத் தைலம் ஆகியன பீனிச இருமல் கண்டவர்கள் தலை முழுக உகந்த தைலங்களாகும்.

*உணவு*

குளிர்ச்சி தரும் பொருட்களை நீக்கி, சூடான பொருட்களை உண்ணவும்.

*வரும் முன் காத்தல்*

புகைப்பிடித்தலைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும். சுற்றப்புறச் சூழல் மாசு அற்றதாக இருக்க வேண்டும். தூய்மையான உணவுப் பழக்கம், மாசு படிந்த காற்றைச் சுவாசிப்பதைத் தவிர்த்தல், யோகாசனம், பிராணாயாமம் போன்ற பயிற்சிகளை முறையாகச் செய்தல் ஆகியனவும் காசம் என்னும் இருமல் நோயை வரும் முன் காக்கும் வழிகளாம்.

# 5

# இரைப்பு நோய்

***முன்னுரை***

ஐயத் தாது தன்னிலையில் திரிந்து, நுரையீரலில் ஏற்படுத்தும் பாதிப்பால் இந்நோய் தோன்றுகிறது. இழுப்பு நோய், சுவாசகாசம், மந்தாரகாசம், பக்கமந்தார காசம் என்பன இதன் வேறு பெயர்கள். இது ஒவ்வாத உணவு, செயல் முதலியவைகளால் மார்பை வலித்து இறுக்கிக் கட்டியது போன்ற வேதனையைத் தந்து, மூச்சுத் திணறலை உண்டாக்கும். வெளியாகும் மூச்சு மிகுந்த சிரமத்தோடு வெளியாவதுடன் குழல், யாழ், வீணை முதலிய வாத்தியங்களின் ஒலியைப் போல் ஒலிக்கும். மார்பிலுள்ள கோழையை வெளியேற்றுவதற்கு முயற்சித்தாலும் அது வெளியாதல் இல்லை. இந்நோயின் குறிகுணங்கள் நுரையீரல் தவிர இதயம் மற்றும் சிறுநீரக பாதிப்பாலும் ஏற்படும்.

***நோய் வரும் வழி***

இந்நோய் வருவதற்கு முக்கிய காரணமாக இருப்பது ஒவ்வாமை ஆகும். இந்த ஒவ்வாமையை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். அவை:

1. புறக்காரணங்களால் ஏற்படும் ஒவ்வாமை
2. அகக்காரணங்களால் ஏற்படும் ஒவ்வாமை

என்பனவாகும்.

***1. புறக்காரணம்***

புறக்காரணங்களால் ஒவ்வாமையை ஏற்படுத்துவதில் முக்கிய பங்கு வகிப்பது பூக்களின் மகரந்தம் ஆகும். காற்றின் மூலம் மகரந்தம் பறந்து சென்று மற்ற பூக்களை அடையும். சூரியன் உதிப்பதற்கு முன்பே சிலவகை பூக்கள் விரிந்து மகரந்தத் துகள்கள் காற்றில் கலந்துவிடும். எனவே மகரந்தத் துகள்களினால் நோயாளிகள் அதிகாலையில் மிகுதியாகப் பாதிக்கப்படுவார்கள்.

அடுத்ததாகப் பூஞ்சைக்காளான்கள், பயன்படுத்தாத தோல் காலணிகள், பழைய ரொட்டிகள், உணவுப் பொருட்கள், மரச்சாமான்கள் ஆகியவைகளில் மிகுதியாக மழைக் காலங்களில் படிந்திருப்பதைக் காணலாம். இவையும் சிலருக்கு ஒவ்வாமையை உண்டாக்குகின்றன.

ஒட்டடை, தானியங்களின் சுணைகள், வீட்டிலுள்ள தூசிகள் ஆகியவையும் ஒவ்வாமையை உண்டாக்குகின்றன. முக்கியமாக நாம் அணியும் ஆடைகளின் தூசிகள், படுக்கை விரிப்பு, நடை விரிப்பு, தலையணை, கம்பளத்தால் ஆன பொருட்கள் முதலியவற்றில் ஒருவகை கிருமிகள் உண்டாகி, அவை அந்தத் தூசிகளை உண்டு பெருகி ஒவ்வாமையை உண்டாக்குகின்றன.

இவை தவிர வீட்டில் வளர்க்கப்படும் கால்நடைகள், பூனை, நாய் போன்ற செல்லப்பிராணிகளின் மயிர், பறவைகளின் இறகுகள் கூட ஒவ்வாமையை உண்டாக்கும். சிலவகை வண்டுகள், தேனி, குளவி, தேள் ஆகியவைகள் கொட்டுவதாலும் கடிப்பதாலும் கூட இந்நோய் உண்டாகலாம்.

சிலருக்குச் சிலவகை உணவுப்பொருட்கள் ஒவ்வாமையை உண்டாக்குகின்றன. இவர்களுக்கு இந்த ஒவ்வாத பொருட்களை உட்கொண்டவுடன் உதட்டில் அரிப்பு ஏற்பட்டு, வாயில் புண், வாந்தி, வயிறு ஊதல் ஆகியவற்றை உண்டாக்கி ஒவ்வாமையை ஏற்படுத்தும். இந்த வகை ஒவ்வாமை சிறுவயதினருக்கே அதிகமாக உண்டாகிறது. சிலருக்குச் சிலவகை மருந்துப் பொருட்கள் ஒவ்வாமையை உண்டாக்கும்.

சிலருக்குத் தொழில் காரணமாக ஒவ்வாமை உண்டாகும். உதாரணமாக மாவு அரைக்கும் தொழில் செய்பவர், தச்சு வேலை செய்பவர், முடி திருத்துபவர்கள், அழகுக் கலை நிபுணர்கள், சிலவகை இரசாயனப் பொருட்களைப் பயன்படுத்தும் தொழிற்சாலையில் வேலை பார்ப்பவர்கள் ஆகியோர் புறக்காரண ஒவ்வாமையால் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர்.

மிகவும் இளவயதினருக்கு இந்நோய் வந்தால் பரம்பரை காரணமாகிறது. சிலருக்குக் காலநிலை மாறுபாடு ஏற்படும் பொழுதிலும், சிலருக்கு இடமாற்றம் ஏற்படும் நிலையிலும், திடீரென்று உணர்ச்சி வசப்படுவதாலும் இந்நோயின் குறிகுணங்கள் மிகுதியாகின்றன.

## 2. அகக்காரணம்

நுரையீரலிலோ, மேல் சுவாச உறுப்புகளிலோ ஏற்படும் நுண்கிருமித் தாக்கம் இந்நோயைத் தோற்றுவிக்கும் ஒவ்வாமைக்கான அகக்காரணமாக அமைகின்றது.

### நோயின் முற்குறிகள்

மேற்கூறிய ஒவ்வாத பொருட்கள் நோயாளிகளின் சுவாசப் பாதையைச் சென்று அடைந்தவுடன், அந்தப் பொருளை வெளியேற்ற மூச்சுக் கிளைக் குழல்களில் ஒருவகை பிசு பிசுப்பான திரவம் சுரக்கிறது. அதனால் அங்குள்ள சளிக்கவசம் வீக்கம் அடைகிறது. அத்துடன் மூச்சுக் கிளைக் குழல் சுவர்கள் விரிந்து சுருங்குகின்றன. இந்தக் காரணங்களால் மூச்சுக் குழலின் விட்டம் இயற்கையாய் இருப்பதைவிட அளவில் சுருங்கிவிடுவதால் உள்ளே சென்ற காற்று வெளிவருவதற்கு மிகுந்த சிரமம் ஏற்படுகிறது. இருமலும் மூச்சுத்திணறலுக்கு முக்கிய காரணமாகிறது. சுருங்கிய மூச்சுக் கிளைக் குழலின் வழியாககச் செல்லும் காற்று, காற்று நுண் அறைகளை அடையாத நிலையில், வாயுப் பரிமாற்றம் தடைபடுகிறது. அதைச் சீர் செய்வதற்குச் சுவாசத்தின் எண்ணிக்கை கூடுவதாலும் மூச்சுத் திணறல் அதிகமாகிறது.

பொதுவாக இந்நோயில் பல நாட்கள் துன்பப்பட்டவர்கள், நோய் வருமுன் இதன் குறியை அறிவார்கள். வரவிருக்கும் நோயின் வன்மையையும் அளவிடுவார்கள். அக்குறிகள்: தங்களுக்கு ஆகா உணவும், ஆகாக் காற்றின் மணமும் பட்டவுடன் மூக்கில் நீர்ப்பாய்தல், தும்மல் வருதல், மார்பு நோதல், மார்பை இறுக்கிக் கட்டியது போன்ற உணர்வு உண்டாதல், வேதனை, விலாப்பக்கம் வலித்து மூச்சுத் திணறல், வயிறு உப்பல், உடல் வியர்த்தல் முதலியனவாகும்.

### நோய் வகை

சித்த மருத்துவ நூல்கள் இந்நோயைத் தனி வகையாகக் கூறவில்லையாயினும் இருமல் நோயின் பகுதியுள் சுவாசகாசம் எனவும், பித்த நோயின் பகுதியுள் சுவாசப் பித்தம் எனவும் கூறி, அவைகட்குரிய குறிகுணங்களும் இயம்பப்பட்டுள்ளன. அந்த வகையில் வகுத்தபடி இந்நோய் ஐந்து வகைப்படும். அவை குற்ற அளவாய் நான்கும், வெளிப்படும் மூச்சின் அளவாய் ஒன்றும் ஆகும். இவ்வைந்தையும் தனித்தனியே காணலாம்:

### 1. வளி இரைப்பு நோய்

எளிதில் செரிக்க முடியாத உணவைக் கொள்ளுதல், கடும் வெயிலில் திரிதல், கிழங்கு முதலிய பொருட்களை உட்கொள்ளுதல் ஆகியவற்றால் வளிக்குற்றம் தன்னளவில் மிகுந்து, உடல் வன்மை குறைந்து, மூச்சு விடுவதற்கு

வேண்டிய உடல் வன்மை இல்லாது, விடும் மூச்சு தன் வலிவு குறைந்து எழும். நெஞ்சினுள் யாதும் இல்லாதது போன்ற ஓர் உணர்ச்சி தோன்றும். இக்குணங்களைப் பெறுமாயினும், இந்நோய் நோயாளிக்கு மிகுந்த துன்பங்களை விளைவிப்பதில்லை. அன்றியும் இது எளிதில் தீரக்கூடிய நோயேயாகும். இந்நோயைச் 'சூத்திர சுவாசம்' என்றும் அழைப்பர்.

## 2. ஐய இரைப்பு நோய்

இது ஐயத்தைப் பெருக்கக்கூடிய உணவு வகைகளாலும், மழை, குளிர்ந்த காற்று ஆகியவைகளாலும், உடலில் ஐயம் மிகுந்து தலைக்கேறி மூக்கு அடைப்பு, மூக்கில் நீர்ப்பாய்தல் என்னும் குறிகளைக் காட்டி, சற்று நேரத்திற்குள் நீங்கி விடும். மார்பை அடைப்பது போல் தோன்றி, மூச்சை வெளிவிட முடியாமல் மிக்க வேதனையை பிறப்பித்து வாட்டும். சில வேளை மூச்சை வெளிவிடாதபடி மார்பை இழுத்துப்பிடித்துச் சீவனே வெளியேறி விடுமோ எனச் சிந்திக்கக் கூடிய நிலைக்கு வந்து விடுவதுண்டு. இந்நிலையில் சற்று இருமிக் கோழை அகலின், ஒருவாறாக விடுதலை ஏற்படும். இழுப்புள்ள வேளையில் சிறிது இருமல் வாராமலும், சளி வெளியாகாமலும் இருப்பின், நோயாளியை மூச்சு வெளிவிடமுடியாமல் தவிக்கச் செய்து, படுக்கவும் இருக்கவும் செய்யாது. அவரைத் திணறித் திணறிப் படுக்கையை விட்டு எழுந்து நிற்கச் செய்யும். நெற்றியில் வியர்த்தல், முகம் கறுத்தல், கைகால் சில்லிடுதல், மூச்சுத் திணறலால் கண்முட்டி வீங்கியது போல் தோன்றல், நா வறளல், உடல் நடுங்கல், பெருமூச்செறிதல், படுக்கையில் பொருந்தாமை முதலிய குறிகுணங்கள் தோன்றும். இந் நோயைத் 'தமக்க சுவாசம்' எனவும் வழங்குவர்.

## 3. ஐயவளி இரைப்பு நோய்

இந்நோயில் ஐயமும் வளித் தாதும் ஒன்றுபடக் கேடு அடைந்தமையால் கொடுமையான குறிகுணங்களைக் காட்டும். முற்கூறிய ஐய இரைப்பு நோய்க்குச் சொல்லிய குறிகுணங்களோடு, வளித் தாது கேடு அடைந்து மேல் நோக்குக் காலைத் (உதானவாயுவைத்) தனக்குத் துணைகொண்டு வரும் நோயாதலால், மூச்சைச் சரிவர உள் வாங்குவதற்கும் வெளிவிடுவதற்கும் இயலாமல் விட்டுவிட்டு மூச்செறியும். மலமும் சிறுநீரும் கட்டி, வயிறு உப்பிப் பொருமல் உண்டாகி உடலை வாட்டும். இவை அல்லாமலும் நா வறளல், கண் சிவந்து வலித்தல், மர்ம இடங்களில் நோதல், வியர்வை விடுதல், வாய் பிதற்றல், மனம் கலங்குதல் தன்

நிலையறியாமை, மயக்கம், உடல் அழற்சி என்னும் பல கொடிய குறிகுணங்களையும் காட்டும். இதனை 'விச்சின்ன சுவாசம்' என்றும் கூறுவர்.

## 4. முத்தாது இரைப்பு நோய்

முக்குற்றங்களும் ஒருங்கே கூடிவரும். அவைகளின் வழியே மேல் நோக்குக்கால், கீழ்நோக்குக்கால், பரவுகால், நடுக்கால் ஆகிய இந்நான்கும் ஒன்றன்பின் ஒன்றாய்க் கேடு அடைவதன்றி, ஏழு உடற்கட்டுகளும் மெலிவடையும். இவைகள் மெலிவடைந்த நிலையில் உண்டாகும் இரைப்பு நோய் மிகக் கொடிதாம். நோய் துவங்கும் முன்னே மூச்சுவிட முடியாது திகைத்தல், உடல் நடுங்கல், மனம் கலங்குதல் ஆகிய குறிகளைக் காட்டிப் பின்பு இரைப்பை உண்டாகும். விடும் மூச்சு பெரிய மாடு விடும் மூச்சை ஒத்திருக்கும். மார்பை இறுக்கிக் கட்டியது போல நோதல், அடிக்கடி மயக்கம் உண்டாதல், மலமும் மூத்திரமும் கட்டி வயிறு உப்புதல், வாய் குழறித் தடுமாறுதல், ஐம்புலனும் மங்குதல், உடல் முழுமையும் வலி உண்டாதல், நெற்றியில் மிகுதியும் வியர்த்தல் ஆகிய குறிகுணங்களைக் காட்டும். இதனை 'மகா சுவாசம்' எனவும் கூறுவர்.

## 5. மேல் நோக்கு இரைப்பு நோய்

முற்கூறிய இரைப்பு நோய்களில் எவையேனும் மருத்துவத்திற்குக் கட்டுப்படாமல் நீண்ட நாள் தொடர்ந்து, மேல் நோக்குக்கால் (உதான வாயு) வன்மை இழந்து மூச்சை வெளியாக்க இயலாத போது பிணியாளர் மூச்சுத் திணறி, கண் வெளியே முட்டி, வாய் உலர்ந்து பேச முடியாது திகைத்துப் படுக்கை நிலையாமல் எழுந்து, வாய் திறந்தது போல் மேல் நோக்கிச் சற்று காற்றை வெளியாக்கி உள்ளிழுக்க அலைவர். அச்சமயத்தில் உடனே தகுந்த மருத்துவம் செய்யின் குணமடைந்து பிழைப்பர். இன்றேல் திறந்தவாய் திறந்தபடியே இருக்க, முகம் கறுத்து மயக்கமுற்று மரணத்தை அடைவர்.

## முத்தாது வேறுபாடுகள்

உணவு வகைகளில் மிகுதியும் ஐயத்தை உண்டாக்கக்கூடிய பொருட்களை உண்பதாலும், குளிர் காற்றில் இருத்தல், மலையில் வாழ்தல், பனியில் நடத்தல், ஆகிய செயல்களாலும், ஐயத் தாது தன்னிலை மாறி, வளி அல்லது அழல் தாதுவையேனும் அல்லது அவ்விரு தாதுக்களையும் தனக்குத் துணைகொண்டு, தொண்டை, மூக்கு, அண்ணாக்கு, நுரையீரல் ஆகியவைகளில்

மிகுந்த தாதுவின் அளவாகத் தாபத்தை எழுப்பி, கோழையை உண்டாக்கிச் சுரம் முதலிய குறிகுணங்களைப் பிறப்பிக்கும்.

உடல் நிலைகளில் (ஆதாரங்களில்) மார்பிடமான அநாகதத்தில் எழும் மேல் நோக்குக்கால் (உதானன்) தன் அளவில் மிகுந்து நிற்கும். இந்நோய் வருவதற்கு வளித் தாது காரணம் என்று சிலர் கூறுவர். அவர் கூற்றும் பொருத்தமுடையதே. எங்ஙனம் எனில் மூச்சு உறுப்புகளின் வழியே காற்றானது இயற்கையாகச் செல்ல ஒட்டாமல் தடை செய்தலால் என அறியலாம்.

இந்நோய் வருவதற்கு ஐயத் (கபத்) தாதுதான் காரணம் என்பவர்களின் கொள்கையின் படி, ஐயமானது மூச்சு உறுப்புகளின் உள்ளிடங்களில் அடைத்துக் கொண்டு, காற்றை இயற்கையாகச் செல்லவொட்டாமல் தடுத்து, இரைப்பை ஏற்படுத்துகின்றது என்ற கருத்தும் சரியானதேயாகும்.

எச்சில், கோழை, சளி ஆகியன நுரைத்து, அளவில் மிகுந்து, பளுவற்றுக் காணின் வளிக் (வாதக்) குற்றத்தால் வந்ததாகும்.

கறுத்து, கடினப்பட்டு, புலால் மணத்துடன் காணின் ஐயத் (கபம்) தாதுவைக் குறிக்கும்.

வெளுத்துச் சீழ் கலந்தது போலும் மஞ்சள் நிறத்தோடும் காணின் அழல் (பித்தம்) தாதுவைக் காட்டும்.

**மருத்துவம்**

தன்னிலை மிகுந்த ஐயம் முதலிய தாதுக்களைத் தன்னிலைப்படுத்துவதற்கும், மேல் நோக்குக்காலின் (உதானன்) மிகுதியான வன்மையைக் குறைப்பதற்கும் பேதி மருந்துகளைக் கொடுத்துக் கழிச்சலான பிறகு நோய்க்கான மருந்துகளையும், உணவுகளையும் தருதல் நல்லது.

**கழிச்சலுக்கு**

- ❖ மூக்கிரட்டை வேர், காக்கட்டான் வேர், சிவதை வேர், நிலவாகையிலை இவை வகைக்கு 10 கிராம். தண்ணீர் ஒரு படி விட்டு எட்டொன்றாய் வற்றக் காய்ச்சி வடிகட்டி, 50 மிலி. வீதம் காலையில் மட்டும் கொடுக்கக் கழிச்சல் உண்டாகும்.
- ❖ உத்தாமணித் தைலம் (மாந்த எண்ணெய்) 5 மிலி. அளவு சிறிது பாலில் காலையில் மட்டும் கொடுக்கக் கழிச்சலாகும். இரைப்பும் தணியும். தேவை இருப்பின் மூன்று நாட்கள் காலையில் மட்டும் தக்க அளவில் கொடுக்கலாம்.

- ❖ குழந்தைகளாயின் சஞ்சீவி மாத்திரையும், பெரியோராயின் அட்டபைரவம், இலவங்காதி, மேக நாதக் குளிகை, வச்சிர கண்ட மாத்திரை, சிவரத்தினக் குளிகை, சுகவிரேசனக் குளிகை ஆகியவற்றில் ஏதேனும் ஒருவகை மாத்திரையைத் தக்க அளவில் காலையில் மட்டும் வெந்நீருடன் கொடுக்கக் கழிச்சலாகும்.
- ❖ சஞ்சீவி மாத்திரையை (1முதல் 2 வரை) உத்தாமணிச்சாறு 4,5 துளிகளில் அனுபானித்துக் கொடுக்கலாம் எனவும் மருத்துவ நூல்கள் கூறுகின்றன.

### நோய்க்கான மருந்துகள்

பவளம், முத்து, சிருங்கி, வெள்ளி, முத்துச்சிப்பி, தாளகச் செம்பு, தங்கம் இவற்றின் பற்பம், செந்தூரம், சுண்ணம் முதலியனவும், காளமேக நாராயணச் செந்தூரம், தாளகக் கருப்பு, கஸ்தூரி மெழுகு, கஸ்தூரிக் கருப்பு, சுவாச குடோரி, மகாவசந்தகுசுமாகரம், பூரண சந்திரோதயம், சாம்பிராணிப்பூ மாத்திரை, தாளிசாதி வடகம் ஆகிய இவற்றைத் தக்க அளவில், தக்க அனுபானங்களுடன் காலை, மாலை இரு வேளையும் கொடுக்கலாம். அன்றியும் க்ஷய குலாந்தகன், சொர்ண, பவள, முத்துப் பற்பங்களும் உபயோகமாகும். இவற்றிற்குத் துணை மருந்துகளாக ஐய மிகுதியைக் குறைக்கக்கூடிய குடிநீர், பிட்டவியல், சுரசம் (சாறு), இலேகியம், பொடி (சூரணம்) முதலியனவற்றை உபயோகிக்கலாம்.

ஆடாதோடைக் குடிநீர், தாளிசப்பத்திரிக் குடிநீர், ஆடாதோடையிலை, கண்டங்கத்தரி இலை, துளசியிலை, தூதுவளை, கஞ்சாங்கோரை, முசுமுசுக்கை, திப்பிலிக் கொடி ஆகியவற்றை முறைப்படி பிட்டவியல் செய்து பயன்படுத்தலாம். ஈளை, இருமல் இலேகியம், தாளிசாதிச் சூரணம், திப்பிலி இலேகியம், அரத்தைச் சூரணம் போன்றவற்றையும் உபயோகிக்கலாம்.

### கடைச் சரக்குகள்

சிற்றரத்தை, தாளிசப்பத்திரி, திப்பிலி, அதிமதுரம், கோஷ்டம், இலவங்கம், அக்கிராகாரம், கண்டுபாரங்கி, மூங்கிலுப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி மூலம் முதலியன உபயோகமாகும்.

### பச்சிலைகள்

துளசி, கண்டங்கத்தரி, ஆடாதோடை, கஞ்சாங்கோரை, தூதுவளை, முசுமுசுக்கை, திப்பிலிக் கொடி, கரிசாலை, பொன்னாங்காணி, உத்தாமணி,

தும்பைப்பூ, இம்பூறல், மணித்தக்காளி ஆகிய இவற்றின் சாறு முதலியன உபயோகமாகும்.

இதன்றியும் தேரன் மருந்து பாரதத்தில் கூறியபடி செம்புப்பற்பத்துடன் புனுகு, கஸ்தூரி சேர்த்து உத்தாமணிச் சாற்றோடு கொடுத்துவர இந்நோய் நீங்குமென்று அறியலாம்.

### சிற்றண்டப் பற்பம்

பொரித்த கோழி முட்டையின் ஓடுகளை உவர்மண் கூட்டி, நீர் விட்டுக் கொதிக்க வைத்துக் கழுவி எடுத்ததைக் கல்வத்தில் இட்டு, நீர்முள்ளிச்சாறு விட்டு அரைத்து வில்லை தட்டி அகலில் இட்டுச் சீலை செய்து முறைப்படி புடமிட்டு எடுக்கவும், மீண்டும் இவ்வாறு மூன்று புடமிடப் பற்பமாகும். ஒரே புடத்திலும் நயமான பற்பமாவது உண்டு. இதில் துவரை அளவு பற்பத்தைக் கடுகுரோகணித் தூளும், மிளகரணை வேர்ப்பட்டையும் கூட்டிக் குடிநீராக்கி அதில் அனுபானித்துக் காலை, மாலை கொடுக்க இரைப்பு நோய் நீங்கும் எனவும் கூறப்பட்டுள்ளது.

### பவள வீரச்சுண்ணம்

இம் மருந்து இருமல், இரைப்பு, இளைப்பு, மஞ்சள் காமாலை, பித்தப்பையிலுள்ள கல்லடைப்பு முதலிய நோய்களுக்கு நல்ல பலனளிக்கும். ஒன்று முதல் இரண்டு சிட்டிகை அளவு தக்க அனுபானங்களில் காலை, மாலை கொடுத்து வரலாம்.

### இரைப்பு நோய்ப் பொடி

தாளகக் கருப்பு, கஸ்தூரிக் கருப்பு அல்லது செந்தூரம், பவள வீரச் சுண்ணம், காளமேக நாராயணச் செந்தூரம், முத்துப் பற்பம், சிருங்கிப் பற்பம், முத்துச் சிப்பிப் பற்பம், தங்கச் செந்தூரம் ஆகியவற்றில் வகைக்கு ஒரு அரிசி எடையும், தாளிசாதிச் சூரணம், அரத்தைச் சூரணம், அக்கிராகாரச் சூரணம், திப்பிலி இலேகியம், திரிகடுகுச் சூரணம் ஆகிய இவற்றில் ஏதேனுமொன்றில் 4 சிட்டிகையும் சேர்த்துத் தேனில் குழப்பிக் காலை, மாலை கொடுத்துவர விரைவில் இரைப்பு நோய் குணமாகும்.

### ஒற்றடம்

குக்கில் தைலம், சடாமாஞ்சில் தைலம், கற்பூராதித் தைலம், கரிசாலைத் தைலம், நீர்க் குண்டித் தைலம், அரக்குத் தைலம், சுக்குத் தைலம், மிளகுத்

தைலம், சந்தனாதித் தைலம் ஆகியவைகளில் ஒன்றை மார்பைச் சுற்றிலும் தடவிப் பிடித்தலும் ஒற்றடமும் செய்யலாம். வியர்வையின்றி உடல் வெப்பத்துடன் வறட்சியும் காணுமாகில் மேற்கண்ட தைலங்களில் ஒன்றைத் தடவி ஒற்றடமிடலாம். வியர்வையுடன் இருப்பின் தவிடு போன்றவற்றை வறுத்து முறைப்படி ஒற்றடமிடலாம். இங்ஙனம் செய்வதனால் மார்புச்சளி இளகிச் சுலபமாக வெளியாகும். மார்பை இறுக்கிப் பிடித்தது போலிருந்தால் குறைந்துவிடும்.

### வாந்தி

அவ்விதம் இளகிய மார்புச் சளியை வெளியேற்ற இலகுவாய் வாந்தி செய்விக்கலாம்.

சங்கங்குப்பிச் சாறு, கரிசாலைச் சாறு, தேற்றான் துளிர் ஆகிய ஏதேனும் ஒன்றின் பச்சிலைச் சாறு செய்து கொடுக்கலாம். சளி வாந்தியாகும். ஆடாதோடையிலை, முசுமுசுக்கை, தூதுவளை, கண்டங்கத்தரி, தாளிசம், சிற்றரத்தை போன்ற கபம் அகற்றி மருந்துகளைக் கொடுத்தும் சளியை வெளியாக்கலாம்.

### பேதி

ஐய மிகுதியால் தடைபட்டு அடிவயிற்றில் சேர்ந்த வாயுவைப் பேதியாக்குவதன் மூலம் அகற்றலாம். அட்டபைரவம், சஞ்சீவி மாத்திரை, கோடா சூரிக் குளிகை, வச்சிரகண்ட மாத்திரை, சிவரத்தினக் குளிகை, சுகவிரோசனக் குளிகை, அகத்தியர் குழம்பு, இலவங்காதி, மேகநாதக் குளிகை ஆகியவைகளில் ஏதேனும் ஒன்றைத் தக்க அளவில் ஒரே வேளை கொடுக்கப் பேதியாகும். வாயுவும் நீங்கும்.

சுகதேகியாக இருந்தால் சிற்றாமணக்கெண்ணெய் 4 பங்கு, நயம் தேன் 1 பங்கு வீதம் கலந்து வைத்துக்கொண்டு இதில் ஒரு அவுன்சு வீதம் காலையில் கொடுக்கப் பேதியாகும். இரைப்பு நோயில் இது மிகவும் பயன்படும்.

### ஆவி பிடித்தல்

ஆவி பிடித்தலும் இந்நோயில் நன்மையாக இருக்கும். ஊமத்தையிலை, எருக்கிலை, போஸ்தக்காய்த் தோல் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றைத் தண்ணீர் அல்லது பசுவின் பாலில் போட்டு வாய்மூடிக் கொதிக்க வைத்து அதனின்றும் வெளியாகும் ஆவியை முறைப்படி ஆவி பிடிக்கலாம்.

**புகை பிடித்தல்**

கறு ஊமத்தம்பூவைப் பொடியாகக் கத்தரித்து, சிறிது வெடியுப்பு சேர்த்தேனும் அல்லது சேர்க்காமலேனும் முருக்கயிலையில் (பலாசு) வைத்துச் சுருட்டி, சுருட்டாகப் புகை பிடிக்கலாம்.

ஊமத்தம் விதையையும் பொடித்துச் சுருட்டாக உபயோகிக்கலாம். இதற்கு மேல், மேலே கூறப்பட்ட இரைப்பு நோய்க்கான உள் மருந்துகளை கொடுத்துவர எளிதில் குணமாகும்

**சர்வ சங்கார உப்பு பற்பம்**

குப்பை மேனிச் சமூலம் கொண்டு வந்து நிழலில் உலர்த்திச் சுட்டுச் சாம்பல் எடுத்து அதனைச் சிறுநீர் விட்டுக் கரைத்துக் கலக்கித் தெளியவிட்டு, அந்தத் தெளிவை இறுத்து அடுப்பேற்றி வற்றக் காய்ச்சி வெயிலில் காயவைத்து உப்பெடுக்கவும், அந்த உப்பைக் கல்வத்தில் இட்டுப் பிரண்டைச்சாறு விட்டரைத்து, வில்லை தட்டி அகலிலிட்டு மூடி சீலைமண் செய்து குக்குடப் புடமிட்டெடுக்கப் பற்பமாகும்.

அளவு: அரிசி எடை பற்பத்துடன் சிறிது திரிகடுகுத்தூள், தேன் ஆகியவற்றைக் கலந்து காலை, மாலை கொடுக்க இரைப்பு, இருமல், ஈளை, கபம் முதலியன விரைவில் குணமாகும்.

உணவு: தனக்கு ஒவ்வாப் பொருட்களை அறிந்து ஒதுக்கவும். எளிதில் செரிக்கக் கூடியதும், உடலில் ஐயத்தைப் போக்கக்கூடியதுமான உணவு வகைகளைக் குறைந்த அளவில் உண்ண வேண்டும். இரவில் சிறிது ரொட்டி, பால் சாப்பிடலாம். மாலை 6 மணிக்கு இந்தவித உணவை அருந்துவது நல்லது. பகலில் கஞ்சி ஆகாரம் கொள்ளலாம். அதிக இரைப்பு இருக்கிற நாட்களில் கஞ்சி ஆகாரம் பொருத்தமானது. கடினமான உணவைக் கொள்ளக் கூடாது. மேலும் இருமல், இளைப்பு இவற்றில் கூறிய மருந்துகளையும் இந்நோயில் உபயோகிக்கலாம்.

# 6

# விக்கல் நோய்

**முன்னுரை**

'விக்' எனும் ஒலியுடன் எழுதலால் விக்கல் என்றும், "இக்" எனும் ஒலியுடன் எழுதலால் இக்மா என்றும் அழைக்கப்படுகின்றது. இருமி எழும் ஒலியுடன் "இக்" எனும் ஒலியும் கூடுவதால் இதனை மேலை நாட்டார் "இக்கப்" (Hiccup) என்கின்றனர் போலும்

**நோய்க் காரணம்**

மிகுதியும் காரம், இனிப்பு, கைப்பு ஆகிய பொருட்களை உண்பதாலும், மாப்பண்டத்தை மிகுதியாகப் புசித்தலாலும் அவைகள் வயிற்றுள் புளித்துக் காற்றைப் பெருக்கும். அன்றியும் வாயுவைப் பெருக்கும் உணவுகளைக் கொள்வதாலும், மூச்சை அடக்கலாலும் உண்டான கேட்டால் அகட்டில் (வயிறு) ஐயம் மிகுந்து அது மேல்நோக்குக்காலைத் தூண்டச் செய்து விக்கல் நோயைப் பிறப்பிக்கும். ஈதன்றியும் நெடுநாள் நோயுடன் படுக்கையில் இருப்போர், முத்தாது நோயால் பாதிக்கப்பட்டோர், நீர்வேட்கையுற்றோர், பசியால் வாடினோர், நீரிழிவு நோயினர் ஆகிய இவர்களுக்கும் விக்கல் துணை நோயாக வருவதுண்டு.

**நோய் வரும் வழி**

சித்த மருத்துவ நூல்கள் தரும் தரவுகளைத் தொகுத்துப் பார்த்தால் வயிற்றறை, மார்பு, மூளை, நச்சு நிலை போன்றவைகள் விக்கல் நோய் தோன்றுவதற்கான வாயில்களாகத் தெரியவருகின்றன. அவற்றைத் தனித்தனியாகக் காணலாம்:

***வயிற்றறை***

அதிக அளவில் உணவு அல்லது நீர் வயிற்றில் அடைக்கப்பட்டு அதனால் இரைப்பை அதிகமாக விரிவடைந்த நிலையில் இருத்தல்

மது வகைகளால் இரைப்பை தூண்டப்படுதல்

பரியாந்திர தாபிதம்

விதான பரிபுப்பிச தாபிதம்

குடலில் அடைப்பு ஏற்படுதல்

வயிற்றில் செய்யப்பட்ட அறுவை சிகிச்சையின் பின் நிலை

இரைப்பை விரிவு

வயிற்றறைக் கட்டி அல்லது புற்று நேய்

போன்ற வயிற்றறை தொடர்பான காரணங்களால் விக்கல் ஏற்படலாம்.

***மார்பு***

- ❖ நெஞ்சுக் கூட்டில் ஏற்படும் தாபித நோய்கள்
- ❖ இதயம் பெரிதாக வளர்ச்சியடைந்த நிலை
- ❖ மத்தியஸ்தானக் கட்டிகள்
- ❖ பரிரீகத் தாபிதம், கண்டறையின் சுருக்கம், உணவுக் குழலில் ஏற்படும் கட்டிகள்

போன்ற மார்பு தொடர்பான காரணங்களால் விக்கல் ஏற்படலாம்.

***மூளை***

- ❖ மூளையின் மேல் சவ்வில் சய நோயால் ஏற்படும் தாபிதம்
- ❖ மூளைக் கட்டிகள்
- ❖ மூளை உறைத் தாபிதம்
- ❖ காக்கை வலிப்பு
- ❖ மூளைப் பாதிப்பு நோய்
- ❖ மூளைப் பகுதியின் இரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பு

ஆகிய நோய்களில் விக்கல் தோன்றும்.

**நச்சு நிலை**

- நீரடைப்பு நோய்
- அமில ஆதிக்க நோய்
- உடல் உறுப்புகளில் தாக்கப்பட்டப் பலவிதத் தொற்று நோய்களின் தீவிர நிலை
- மூச்சடைப்பு
- அதிக மது அருந்துதல்

ஆகியவைகளால் ஏற்படும் நச்சு நிலையும் விக்கலைப் பிறப்பிக்கும். இவற்றுடன் அதிகமான சிரிப்பு, அவசரமாக விழுங்குதல் போன்றவைகளாலும் விக்கல் தோன்றும்.

**முற்குறிகள்**

தொண்டை வறண்டு போதல், நாவறளல், வயிற்றில் ஏதோ உலாவுவது போன்ற தோற்றம், வாய் கைத்தல், நீர்வேட்கை, கண் சிவத்தல் என்னும் குறிகளைக் காட்டி விக்கல் எழும்.

**நோய் வகை**

சித்த மருத்துவ நூல்களில் விக்கல் நோயானது:

1. வளி விக்கல்
2. அழல் விக்கல்
3. ஐய விக்கல்
4. முத்தாது விக்கல்
5. செரியா விக்கல்

என்று ஐந்து வகையாகக் கூறப்பட்டுள்ளது. சில நூல்களில்:

1. அன்ன விக்கல் - உணவால் வருவது
2. சூத்ர விக்கல் - செரியாமையால் வருவது
3. யமன் விக்கல் - உணவு செரிக்கும்போது வருவது
4. மகா விக்கல் - கொடுமையாக வருவது
5. கம்பீர விக்கல் - உந்தியில் இருந்து மிகுந்த ஒலியுடன் வருவது

என்ற பெயர்களில் ஆன வகைப்பாடும் கூறப்பட்டுள்ளது. விக்கலைத் தோற்றுவிக்கும் பொருள், சூழல், இடம் ஆகியவற்றைக் கொண்டு இவ்வகைப்பாடு செய்யப்பட்டுள்ளது போல் தெரிகிறது. விக்கல் தோன்றி வெளிப்படுதலாகிய செயல்பாட்டிற்கு வளி, அழல், ஐயம் முதலானவைகளே ஆதாரமாக அமைவதாலும் இரண்டாவதாகக் கூறப்பட்ட அன்ன விக்கல் முதலானவை வளி, அழல் முதலிய வகைக்குள்ளேயே அடங்கிவிடும் ஆதலாலும், முற்கூறிய வகைப்பாடே சித்த மருத்துவ மரபில் பெரு வழக்கினதாகக் கொள்ளப்படுகின்றது. இனி அவற்றின் குறிகுணங்களைத் தனித்தனியே காணலாம்:

**1. வளி விக்கல்**

வளித் தாதுவைப் பெருக்கக் கூடிய செயலாகியப் பெரு மகிழ்ச்சியை திடீரெனக் கொள்ளல், வெயிலில் திரிதல், வறண்டு திரிந்த பின் நீர்ப் பருகல், கடுமையாக ஓடல் முதலியவைகளால் கைகால் உளைச்சலாகி மேல் நோக்குக்கால் (உதானவாயு) மிகுந்து உண்டான இந்நோயில், விக்கல் அடுத்தடுத்து உண்டாகும். கண் படபட என அடித்துக் கொள்ளும். உணவில் மிகுதியும் காரமான பொருளைச் சேர்ப்பதாலும் வரும்.

**2. அழல் விக்கல்**

மிகு பசி, இளைப்பு, கவலை எனும் இவைகளாலும், அழல் தாதுவைப் பெருக்கக் கூடிய உணவு வகைகளாலும் உண்டாகும். இதில் நாடி படபடத்தல், உடல் கன்றிப்போதல், உடலில் அனல் வீசுவது போன்ற தோற்றம், கொட்டாவி, அடிக்கடி சினம் உண்டாதல், அறிவு மங்கல், விக்கல் ஒலி நெஞ்சக்குழியிலிருந்து எழுவது போலத் தோன்றல் முதலிய குறிகுணங்களைத் தோற்றுவிக்கும்.

**3. ஐய விக்கல்**

ஐயக் குற்றத்தைப் பெருகச் செய்யும் உணவுச் செயல்களால் வயிற்றில் செரியாமையை உண்டாக்கி, மார்பில் கோழையைக் கூட்டி விக்கலைப் பிறப்பிக்கும். இதனில் மூக்கும் கண்ணும் வெளுத்துப் போவதும் அல்லாமல், விக்கல் எழும்போதெல்லாம், கண் நொந்து தெறித்து வெளியே விழுந்து விடுவது போன்ற ஒரு தோற்றத்தைத் தரும். கண்ணீர் வடியும். கண் கலங்கிக் காணும். உணவில் வெறுப்பு, விழுங்க முடியாமை, நெஞ்சுலர்தல் ஆகிய குறிகுணங்களையும் பெறும்.

### 4. முத்தாது விக்கல்

நெடுநாட்களாய்ச் சுரம் முதலிய நோய்களால் உடல் வன்மை குறைந்து, மூன்று குற்றங்களும் ஒன்று கூடிய நிலையில் இவ்விக்கல் நோய் பிறக்கும். இதில் காணும் விக்கல் உந்தியிலிருந்து எழுவது போன்று உந்தியை அதிரச் செய்து, இடைவிடாமல் அடுக்கடுக்காய் ஒன்றன்பின் ஒன்றாய் ஒலி எழும். அத்துடன் மார்பு நோதல், மூச்சுத் திணறல், ஆயாசம், உடல் ஓய்ச்சல் என்னும் குறிகளையும் காட்டும்.

### 5. செரியா விக்கல்

காரப் பொருள், செரியாப் பொருள், வறண்ட பொருள் என்னும் இவைகளைப் புசிப்பதால் இவ்விக்கல் பிறக்கும். விக்கல் எழும் முன்பே தொண்டை வறண்டு, குரலோசை குறைந்து, இருமல் உண்டாய்ப் பின்பு விக்கல் எழும். இவ்விக்கல் உண்ட உணவு செரிக்கும் மட்டும் நில்லாது.

### தீரும் தீராதவை

இவ்வைந்து விக்கல் நோய்களில் முன்னிரண்டும் எளிதில் தீரும். ஐய விக்கல் தகுந்த மருத்துவத்தில் சின்னாட்கள் சென்று தீரும். முத்தாது விக்கல் சாக்குறியைக் காட்ட வந்த நோய் ஆதலால், கொல்லுகின்ற தீராத நோய் என்று அறிக. அன்றியும் நீரினை அருக்கல், நீரினைப் பெருக்கல் என்னும் இவ்விரு வினை நோய்களிலும், நாள்பட்ட சுரநோய்களிலும், குன்மம் முதலிய வயிற்றில் பிறக்கும் நோய்களிலும் விக்கல் காணில் தீராவாம். மேலும் முப்பிணி (சன்னிநோய்) , ஊழி (வாந்திபேதி), மிகு கழிச்சல் (அதிசாரம்), நாட்பட்ட கழிச்சல் (கிராணி), இளைப்பு நோய் (க்ஷயம்) என்னும் இந்நோய்களில் விக்கல் பிறக்கின் கொல்லும்.

சில நோய்களில் விக்கலானது இளைப்பு, சுவாசம் ஆகிய குறிகுணங்களுடன் சேர்ந்து அசாத்தியக் குறிகுணங்களைக் காட்டும் எனச் சதக நாடி உணர்த்துகிறது. அவை: நீரிழிவு, மேகசூலை, சுரம், வீக்கம் சன்னி, வலிநோய், மாந்தம், கிராணி, அதிசாரம், வாதம், விடபாகம், வாயுத் திரட்சி, பாண்டு, சோபை, காமாலை, பெரும்பாடு, வாய்வு, இரத்தப்பித்தம் ஆகிய நோய்களாகும்.

விக்கல் நோயானது இளைப்பு, சுவாசம், வீக்கம், மயக்கம் ஆகிய குறிகுணங்களுடன், மேக நோயின் தோடக் குறிகுணங்களாகவும் தோன்றும் எனச் சதக நாடியும், கண்ணுசாமியம் என்னும் நூலும் உரைக்கின்றன.

மேக நோயில் நீரிழிவு ஆகாது. நீரிழிவு நோயில் வாதம் ஆகாது. வாதத்தில் வயிற்றுளைச்சல் ஆகாது. வயிற்றுளைச்சலில் வாய்வு கொழுத்தலாகாது. வாய்வில் விக்கல் ஆகாது. விக்கலில் இளைப்பும் சுவாசமும் வந்து மரணம் சம்பவிக்கும் எனக் கூறப்படுகிறது.

நீரிழிவு நோயில் பிளவையும், பிளவையில் தாகம், சுரம், மயக்கம், வியர்வை, கபம், விக்கல் ஆகிய நோய்கள் ஒன்றன்பின் ஒன்றாய் கிளைக்குமானாலும் நோயாளி சாவது உறுதி என அறியலாம்.

மாந்த நோயிலும் விக்கல் சாக்குறியைக் காட்டும். மாந்த நோயில் சுரமும், சுரத்தில் விடதோடம், வீக்கம், வயிறு பொருமல், கபம், இளைப்பு, சுவாசம், விக்கல் ஆகிய இவை ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடருமாகில் நோயாளி சாவார் என்பது திண்ணம்.

வாதக் குன்ம நோயில் விக்கலுடன் பேதி, வயிறு பொருமல், கபம், மயக்கம் ஆகியவை ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றின் மரணமாம்.

பித்தச் சோபையில் வாய்வும், வாய்வுடன் பாண்டு, வயிற்றுக் கடுப்பு, சீதம் விழல், கபம், மயக்கம், விக்கல், ஆகிய இவை ஒன்றாகத் தொடருமாயின் மரணம் நிச்சயம் என்பது சித்த மருத்துவர்களின் கணிப்பாகும்.

## விக்கல் நோயில் தோன்றும் முத்தாது வேறுபாடுகள்

உணவு முதலிய செயல்களால் ஐயம் மிகுந்து, வாயுக்களைத் தூண்டி எழச்செய்து அகட்டை அணுகி, உண்ட உணவைச் சரிவர செரியாதபடிச் செய்து, அன்னக் குழம்பைப் பரவவொட்டாமல் தடுத்து, மேல்நோக்குக் காலைத் தூண்டி விக்கலைப் பிறப்பிக்கும்.

ஐயநாடி, ஐயவாதநாடி ஆகியன இந்நோயில் தோன்றும். "சேத்துமத்தின் கோதலாது விக்கலெடாது" என்ற தேரன் கூற்றுக்கிணங்க ஐயக்குற்றததின் தொடர்பே இந்நோய்க்குக் காரணம் என அறியலாம். இது தவிர மேல் நோக்குக் காலான உதானன், நாகன் என்னும் வாயுக்கள் இரண்டும் வளர்ச்சி அடையும்.

## மருத்துவம்

இந்நோயில் தாதுக்களின் பாதிப்பால் நோய் ஏற்பட்டிருக்கும் நிலையில் பாதிக்கப்பட்ட தாதுக்களைத் தன்னிலைப்படுத்த வேண்டும். குற்றங்களைத் தன்னிலைப் படுத்த பேதி மருந்தான அகத்தியர் குழம்பை 1 முதல் 2 குன்றியளவு வழங்கலாம். நோய்க்கு நேர் மருத்துவமாகக் கீழ்க்கண்ட முறைகளைக் கையாளலாம்:

- ❖ குடிநீர் வகைகயில் மண்புழுக் கறுக்குக் குடிநீர் வழங்கலாம். மண்புழுவைச் சட்டியில் இட்டுக் கறுக்கி, அதில் 1/2 பலம் மிளகு கூட்டி வறுத்து, 1/2 படி நீர் விட்டு, 1/2 ஆழாக்காகக் காய்ச்சி வடித்துக் கொடுக்க நோய் போகும்.
- ❖ வரப்புகளில் உள்ள நண்டுவளை நீரைக் கொடுக்கலாம். அல்லது வரப்பு நண்டை இடித்துப் பிழிந்து சாறு 1 முதல் 2 உச்சிக்கரண்டி அளவில் எடுத்து ஒரு சிட்டிகை அளவு மிளகுப் பொடி கூட்டிக் கொடுக்கலாம்.
- ❖ தேங்காய்க் குடுமி, கம்பளம் ஆகிய இரண்டையும் கறுக்கி எடுத்த பொடி வகைக்கு பலம் 1, ஏலக்காய்த் தோல் , திப்பிலி வகைக்குப் பலம் 1/2 கூட்டிக் குடிநீராகக் கொடுக்க விக்கல் போம்.
- ❖ குளவியின் அரக்குக் கூட்டின் குடிநீர் கொடுக்கலாம்.
- ❖ கரும்பின் அடித்துண்டை இரண்டாகப் பிளந்து நடுவில் ஏலரிசியைப் பரப்பிக் கயிற்றால் கட்டிச் செம்மண் சீலை செய்து அடுப்பிலிட்டுச் சுட்டு நசுக்கிப் பிழிந்த சாற்றைக் கொடுக்கலாம்.
- ❖ சூரண வகைகளில் மயிலிறகாதி சூரணத்தைக் கொடுக்கலாம்.
- ❖ விளாம்பழ ஓட்டைச் சுட்டகரி, திப்பிலிச் சூரணம் இவற்றில் ஒன்றை 100 முதல் 200 மி. கிராம் தேனில் வழங்கலாம்.
- ❖ மூக்குத்தூள் மருந்தாகத் தும்பைச் சாற்றைத் துணியில் நனைத்து உலர்த்தி மூக்கிலிடலாம்.
- ❖ புளியைச் சுட்டு முகரலாம்.
- ❖ பற்ப வகைகளில் தங்கப் பற்பம் 1 முதல் 2 அரிசியெடை வழங்கலாம்.
- ❖ கஸ்தூரி கருப்பை 1 முதல் 2 குன்றி அளவு கருப்பஞ்சாற்றில் தரலாம்.
- ❖ சாதிசம்பீரக் குழம்பை நாக்கில் தடவினாலும், கண்டாவிழ்தம் உள்ளுக்குக் கொடுத்தாலும் கபம் நீங்கி விக்கல் நிற்கும்.
- ❖ பட்டுப்புழுவின் கூட்டைச் சுட்டு ஏலப்பொடி, சீரகப்பொடி, குங்கிலியப்பொடி, மயிலிறகுச் சாம்பல், தேங்காய் குடுமிக் கரி ஆகியவற்றில் சம எடை எடுத்து நீரில் தரலாம்.
- ❖ ஏலம், திப்பிலி இரண்டும் சம அளவு எடுத்துக் குடிநீர் செய்து தரலாம்.
- ❖ தாமரைக் கொட்டையைத் தேனில் இழைத்துச் சேர்ந்த மருந்தைத் தரலாம்.
- ❖ தூக்கம் கேடு அடையின் அபின், கஞ்சா சேர்ந்த மருந்து தரலாம்.

பிற நோய்களின் தொடர்பாக ஏற்படும் விக்கலுக்கு அம்முதல் நோய்க்கும் சேர்த்து மருத்துவம் செய்தல் அவசியம. சில தீவிர நோய்களில் விக்கல் சாக்குறியாகத் தோன்றும் நிலையில் நோயாளிக்குத் தேவையான தீவிர சிகிச்சை செய்தல் நலம் பயக்கும். அந்நிலைகளில் பாடாணங்களால் செய்யப்பட்ட கட்டு மாத்திரைகள், பைரவ மாத்திரைகள் முதலியன பலன் அளிக்கலாம்.

# 7

## உளைமாந்தை

***முன்னுரை***

குடல் இளைப்பு நோய், குடற்சயம் என்பன இதன் வேறு பெயர்கள். இந்நோயின் பெயர் உள் +ஐ+ மாந்தை என்னும் மூன்று சொற்கள் சேர்ந்து உளைமாந்தை என அமைந்தது. உள்-வயிற்றுள், ஐ -ஐயக்குற்றத்தில் ஏற்படும், மாந்தை-மாந்தம் என்று வரும் இது, ஐயக் குற்றத்தில் ஏற்படும், மாந்தம் எனப் பொருள்படும். இது ஐயக் குற்றத்தால் வயிற்றுள் மாந்தத்தை உண்டாக்கிப் பசித்தீயைக் கெடுக்கும். உண்ட உணவைச் செரிப்பிக்காமற் செய்து வயிறூதல், கழிச்சல், உடல் இளைத்துப் போதல், இருமலொடு கோழை கக்கல், நாள் பட்டும் தீராதிருத்தல் ஆகிய தன்மைகளைப் பெற்றிருத்தலால் இப்பெயர் பெற்றது போலும்.

"உனக்கு உளைமாந்தை வர" என ஒருவர் சினந்து பிரிதொருவருக்குச் சாபம் இடும் வழக்கம் உண்மையில் இந்நோயின் கொடுமையை அறியலாம்.

இதை இளைப்பு (க்ஷய) நோயின் பகுதியென யூகிமுனிவர் கருதுகின்றார்.

**நோய் வரும் வழி**

- ❖ நன்கு பசி எடுக்கையில் பேசாமலிருந்து அக்கினி மந்தித்த பின் உணவை உட்கொள்ளல்
- ❖ பகலில் உறங்கி இரவில் கண் விழித்து வேலை செய்தல்
- ❖ மாமிசத்தையே அதிகமாக உண்ணல்
- ❖ புணர்ச்சிக்குப் பின் மயங்கி விழுதல்
- ❖ நன்கு இரைக்கும்படி அதிக ஓட்டம் ஓடுதல்
- ❖ தானியங்களை அளவில் குறைத்துக் கொடுத்தல்
- ❖ உயிர்வதை செய்தல்

- ❖ பத்தினிப் பெண்களைக் கற்பழித்தல்
- ❖ கொலை
- ❖ களவு
- ❖ கட்குடி முதலியவைகளைச் செய்தல்
- ❖ பூசைக்கு ஊறு விளைவித்தல்
- ❖ கணவனிடமிருந்து மனைவியைப் பிரித்தல்

ஆகிய காரணங்களால் இந்நோய் வரும் என்று சித்த மருத்துவ நூல்கள் கூறுகின்றன.

### முற்குறிகள்

- ❖ தலைநோய்
- ❖ மூக்கில் நீர்ப்பாய்தல்
- ❖ தொண்டை கட்டல்
- ❖ சிணுக்கிருமல்

முதலிய முற்குறிகளைக் காட்டி இடைவிடாது இருமச் செய்யும். இவ்விருமல் எளிதில் தீராமல் நாட்பட்டு நிலைத்து விடுவதும் உண்டு. நிலைத்த நாட்களுக்கு ஏற்ப கோழை மிகுதியாக இழிதலும், அது கடினப்பட்டுத் தாங்கமுடியாத முடை நாற்றத்துடனும் சீழை ஒத்த நிறத்தோடும் வெளிப்படும்.

### நோய் வகை

உளைமாந்தை நோயானது உயிர்த் தாதுக்களின் அடிப்படையில் வளி உளைமாந்தை, அழல் உளைமாந்தை, ஐய உளைமாந்தை, முத்தாது உளைமாந்தை என நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றின் குறிகுணங்களைத் தனித்தனியே காணலாம்:

### 1. வளி உளைமாந்தை

இந்நோய் மார்பிலும், இரு விலாப் பக்கங்களிலும் நோயை உண்டாக்கி நினைவுமாறல், இருமல், வெளிக்குத் தோன்றாமல் சுரம் காய்தல், வயிற்றுள் கட்டி போல் திரண்டு காணல், கழிச்சலில் சீழ் கலந்திருத்தல் என்னும் குறிகுணங்களைக் காட்டும். உடலை நாளுக்கு நாள் மெலிவடையச் செய்யும். அழல், ஐயக் குற்றங்கள் இரண்டையும் தனக்குத் துணையாய்க்கொண்டு உணவில் வெறுப்பு, உணவு செரியாமை, கழிதல், கைகால் மெலிதல் ஆகிய குறிகுணங்களையும் பெறும்.

## 2. அழல் உளைமாந்தை

அடிவயிற்றினுள் தாங்கமுடியாத வலியைத் தந்து புண் போல் நோகும். கட்டிபோல் வீங்கும். பின்பு வயிறு நாளுக்குநாள் பெருத்து, குத்தலை உண்டாக்கும். அக்கட்டி உருண்டு திரண்டு, வயிறு கனத்துச் சுரம், இருமல் என்னும் இவைகளை வருவிக்கும். கட்டி முதிர்ந்து பழுத்து உடையுங்கால் வாந்தி, மயக்கம், முப்பிணி (சன்னி) என்னும் இவைகளைத் தோற்றுவிக்கும்.

## 3. ஐய உளைமாந்தை

இந்நோயில் உடல் நாளுக்கு நாள் மெலிவடைந்து, புண்போல் நொந்து, அடிக்கடி வாந்தியாகும். வாந்தியில் சீழ் கலந்து காணும். மனம் தளர்ந்து மயக்கம் உண்டாகும். உடல் நடுங்கும். உட்சுரம் காயும். உடல் வெளுத்தும் காணும்.

## 4. முத்தாது (தொந்த) உளைமாந்தை

உணவு உண்ணும் போது தொண்டையை அடைப்பது போல் நோதல், உணவு செல்லாமை, நெஞ்சில் குத்தல், மனச் சோர்வு, உடல் வன்மை குறைதல், மிகுந்த தூக்கம், உடல் முழுமையும் தினவு உண்டாதல் என்னும் குறிகளோடு, இருமிக் கக்கும் கோழை அளவில் மிகுந்தும் மிக்க நாற்றத்துடனும் இழியும்.

## தீரும் தீராதவை

முத்தாது உளைமாந்தை, ஐய உளைமாந்தை, வளி உளைமாந்தை ஆகிய இம்மூன்றும் எம்மருந்தாலும் தீராதெனவும், அழல் குற்றத்தால் வருவது பெரு மருந்துகளால் தீரும் எனவும் கூறப்பட்டுள்ளது.

## நாடி நாடை

உளைமாந்தையில் பித்த நாடியோடு கப நாடி கூடி நடக்கும் என்பது சித்தர்களின் துணிபு.

## மருத்துவ முறைகள்

சித்த மருத்துவ வழக்கப்படி இந்நோய்க்கும் வாந்தி, கழிச்சலுக்கான மருந்துகளைக் கொடுத்துத் திரிந்த தாதுக்களைத் தன்னிலைப்படுத்த வேண்டும். பின் உரிய மருத்துவமாகப் பின்வரும் மருந்துகளை முறைப்படி பயன்படுத்த வேண்டும்.

## சிவனார் வேம்பு எண்ணெய்

*சரக்கு*

சிவனார் வேம்பு
நிலக்குமிழம்வேர்
கொத்தான்
கோஷ்டம்
வேம்பாடம்பட்டை
சீரகம்
அதிமதுரம்
மிளகு

*செய்முறை*

இவைகளைச் சமம் எடுத்து (1 வராகன் எடை) இடித்து நல்லெண்ணெய் 1 சேருடன் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து இறக்கி வடிகட்டிக் கொள்ளவும். இதில் தினந்தோறும் 10 மிலி. உட்கொள்ள, 8 நாட்களிலோ அல்லது 10 நாட்களிலோ உளைமாந்தை நோய் தீரும்.

## குண்டலாதி எண்ணெய்

*சரக்கு*

சங்கம் வேர்
சாறணை சமூலம்
தூதுவளை
குமிழம்வேர்
சித்தாமல்லி
இண்டம்வேர்
சகதேவிவேர்
கோரைக்கிழங்கு
செவ்வல்லிக் கொடி
நற்சீரகம்

அதிமதுரம்
திப்பிலி
சதகுப்பை
இம்புராவேர்
ஆடாதோடை
கையாந்தகரை இலை
நிலப்பனைக்கிழங்கு
மாகாளிக்கிழங்கு
அமுக்கராக்கிழங்கு
ஓரிதழ்த் தாமரை
சீந்தில் கொடி
கொத்துமல்லி விதை
கற்கடகசிங்கி
நெல்லிமுள்ளி
கறுஞ்சீரகம்
வேம்பாடம்பட்டை

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 வராகன் எடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு நன்றாக இடித்துத் தண்ணீர் விட்டு அம்மியின் மேல் வைத்து அரைத்து, நல்லெண்ணெய் 3 சேருடன் குழப்பி வைக்கவும். மறுநாள் இதை அடுப்பின் மேலேற்றி நன்றாகக் கொதிக்கவைத்துப் பக்குவத்தில் இறக்கவும். இதை வடிகட்டிப் பத்திரப்படுத்தித் தினம் ஒரு தேக்கரண்டி நக்கி வரவும்.

**சாறணைத் தாளகச் சூரணம்**

*சரக்கும் செய்முறையும்*

சாறணைக்கிழங்கு (மலை நாட்டில் விளைந்த சரக்காக இருத்தல் நலம்) 35 கிராம் எடுத்துப் பசுவின் பாலில் ஊறவைத்து அடுப்பின் மேலேற்றி எரித்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும். இதனுடன் சுக்கு, கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த் தோல், திப்பிலி, சுத்தி செய்த தாளகம்

ஆகியவைகளையும் வகைக்கு 35 கிராம் எடுத்து இடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக் கொள்ளவும். இதில் ஒரு வெருகடி (மூவிரல் கொள்ளும்) அளவெடுத்துத் தேனுடன் குழைத்துச் சாப்பிட, உளைமாந்தை நிவர்த்தியாகும்.

**மிருகாங்க இரசம்**

*சரக்கு*

| | | |
|---|---|---|
| இரசப் பற்பம் | 40 | குன்றி |
| சுவர்ணப் பற்பம் | 40 | குன்றி |
| முத்து (சுத்தி செய்தது) | 80 | குன்றி |
| நெல்லிக்காய் கெந்தகம் | 80 | குன்றி |
| சங்குத்தூள் | 80 | குன்றி |
| பொரித்த வெங்காரம் | 20 | குன்றி |

*செய்முறை*

இந்தச் சரக்குகளை ஒரு சுத்தமான கல்வத்தில் இட்டு, கொடிவேலிவேர்க் குடிநீர் விட்டு 2 நாட்கள் நன்றாக இரவு பகல் முழுவதும் கை ஓயாமல் அரைத்தல் வேண்டும். இதை ஒரே உருண்டையாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

இரண்டு மரக்கால் திரவம் கொள்ளும் அளவுக்கு ஒரு பானையைக் கொண்டு வந்து அதில் 1 மரக்கால் உப்பு போடவும். அதன் மேல், மேலே சொல்லியபடி செய்யப்பட்ட உருண்டைய வைத்து அப்பானையின் கழுத்துவரை மேலும் உப்பைப் போட்டு அடுப்பின் மேலேற்றி 4 சாமம் (ஒரு பகல் முடிய) எரிக்கவும். தானாகவே இம்மருந்து ஆறிய பின்பெடுத்து ஒரு சுத்தமான கல்வத்தில் இட்டுப் பொடிசெய்து வைத்துக்கொள்ளவும். இதில் 4 குன்றியளவு எடுத்து 10 மிளகு, 10 திப்பிலி ஆகியவற்றைப் பொடித்த சூரணத்துடன் சேர்த்துத் தேனில் குழைத்து 40 நாட்கள் சாப்பிடவும்.

உளைமாந்தை தீரும். வியாதி பலமாக இருந்தால் இதையே மேலும் சில தினங்கள் உபயோகிக்கவும்.

**சிறுதேக்குக் குடிநீர்**

*சரக்கு*

சிறுதேக்கு
தேவதாரு

பெருங்குரும்பை

சிறுவழுதுணை வேர்

சீந்தில்கொடி

பொன்முசுட்டைவேர்

சுக்கு

ஆடாதோடை வேர்

கண்டங்கத்தரி வேர்

*செய்முறை*

ஆகிய சரக்குகளை வகைக்கு 2 வராகன் எடை வீதம் எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் இட்டு ஒன்றிரண்டாக இடித்து, சுத்த நீரில் 500 மிலி. விட்டு அடுப்பின் மேலேற்றி 200 மிலி. ஆகும் வரை வற்றவைத்து வடிகட்டிக்கொள்ளவும். இதனுடன் வறுத்த திப்பிலிச்சூரணம் 3 1/2 குன்றி போட்டுப் பருகவும்.

**சிறுதேக்குக் குடிநீர் (வேறு முறை)**

*சரக்கு*

சிறுதேக்கு

சுக்கு

திப்பிலி

திராய்

பொன்னாவாரை

*செய்முறை*

இவ்வைந்து சரக்குகளையும் வகைக்கு 9 காசெடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டுச் சுத்த நீர் 500 மிலி. விட்டு அடுப்பின் மேல் வைத்து 200 மிலி. ஆகும் வரை (எட்டிலொன்றாக) வற்றவைத்து இறுத்துத் தேன் விட்டுச் சாப்பிட உளைமாந்தை தீரும்.

*பத்தியம்*

பசுவின் பால், பசுவின் நெய், துவரம்பருப்பு, பீர்க்கம் பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு, பொன்னாங்காணிக் கீரை, சுறாமீன், உடும்பு, காடை, முயல்

முதலியவைகளின் மாமிசம், கோழி முட்டை இவைகளை வேண்டியமட்டும் சேர்த்துக் கொள்ளலாம்.

## முயல் நெய்

*சரக்கு*

முயல் கறி 16 பலம் எடுத்து நறுக்கி ஒரு ஈயம் பூசிய பாத்திரத்தில் இட்டு, 5 மரக்கால் சுத்த நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி நாலிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும்.

இதனுடன்:

| | |
|---|---|
| ஆடாதோடைச் சாறு | 1 மரக்கால் |
| பசுவின் பால் | 2 படி (5 சேர்) |
| பசுவின் நெய் | 2 படி (5 சேர்) |

இவைகளை ஒன்று கலந்து:

செவ்வியம்
கண்டத்திப்பிலி
சித்திரமூலம்
சிறுதேக்கு
கிராம்பு
பொரித்த இந்துப்பு
சீரகம்
மிளகு
ஏலக்காய்
சிற்றரத்தை
திப்பிலி
சுக்கு
கற்கடகசிங்கி
சடாமாஞ்சில்
கோஷ்டம்

வாலுளுவையரிசி

இலவங்கப்பட்டை

யானைத்திப்பிலி

ஓமம்

*செய்முறை*

ஆகிய சரக்குகளை வகைக்கு 2 வராகன் எடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துப் பசுவின் பால் விட்டு நன்றாக அரைத்துக் குடிநீர் சேர்த்து நெய்யுடனே குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து இறக்கவும். பின்பு இதனை வடிகட்டிக்கொண்டு தினம் 3 காசெடை வீதம் எடுத்து உட்கொள்ளவும்.

40 நாட்களுள் உளைமாந்தை தீரும்.

## முயல் நெய் (வேறு முறை)

*சரக்கு*

முயல் கறி 50 பலம் எடுத்துச் சிறுசிறு துண்டுகளாக வெட்டி, 5 மரக்கால் சுத்த நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி நன்றாக வேகவைக்கவும். பின்பு இதை ஒரு கம்பளியில் போட்டு மூட்டையாகக் கட்டி நீர் முழுவதும் வடியுமாறு செய்யவும்.

இதனுடன்:

சவுக்காரம்

தேவதாரம்

தூதுவளை

ஏலக்காய்

மிளகு

மரமஞ்சள் தோல்

நன்னாரி வேர்

ஆடாதோடை

விழலரிசி

சீரகம்

அதிமதுரம்

பொரித்த இந்துப்பு

கற்கடகசிங்கி

திப்பிலி

கோரைக்கிழங்கு

அமுக்கராக் கிழங்கு

கண்டங்கத்தரிவேர்

இம்புராமூலம்

அக்கிராகாரம்

*செய்முறை*

இவைகளை வகைக்கு $3^3/_4$ வராகன் எடை வீதம் எடுத்து ஆடாதோடையிலைச் சாறுவிட்டு நன்றாக அரைத்துச் சேர்த்துக் கொண்டு, பசுவின் நெய் 10 சேர் விட்டு ஒன்றாகக் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவத்தில் இறக்கவும். நன்றாக ஆறியபின் தேன் வேண்டிய அளவு விட்டுக் குழப்பித் தினந்தோறும் ஒரு எலுமிச்சங்காய் அளவு எடுத்து, 3 வேளையாகப் பகிர்ந்து சாப்பிடவும். நாளுக்கு நாள் உளைமாந்தை நோய் குறைவடையும்.

**வசந்தவாதி சூரணம்**

*சரக்கு*

பொரித்த இந்துப்பு

திப்பிலி

சிறுதேக்கு

தான்றிக்காய்த் தோல்

திராட்சைப் பழம்

கடுகு

கடுக்காய்ப்பூ

சுத்தி செய்த தாளகம்

இலுப்பைப்பூ

கடுக்காய்த் தோல்

பொரித்த வெங்காரம்

சுக்கு

நெல்லிமுள்ளி

கடுகுரோகணி

இவைகளை வகைக்கு 5 வராகன் எடை எடுத்துச் சூரணம் செய்துகொள்ளவும்.

வழுதுணையிலைச்சாறு

பிராயிலைச்சாறு

சங்கம் இலைச்சாறு

நிலக் கடம்பிலைச் சாறு

கையாந்தகரையிலைச் சாறு

சடைச்சிச்சாறு

பொரும்பிளிச்சாறு

தேட்கொடுக்குப் பூண்டுச்சாறு

*செய்முறை*

இவ்வகைச் சாறுகளைத் தனித்தனியே 6 படிக்குக் ($7\,{}^{1}/_{2}$ சேர்)குறையாமல் எடுத்து முன்சொன்ன சூரணத்தைப் போட்டுக் குழப்பி வெயிலில் வைக்கவும். சாறுகள் முழுவதும் வற்றியபின் தேங்காயெண்ணெய் விட்டுப் பிசறிக்கொள்ளவும். மறுநாள் மறுமுறை வெயிலில் வைத்துப் பானையில் பத்திரப்படுத்தவும்.

இச்சூரணத்தில் 20 குன்றி அளவெடுத்துத் தேன் விட்டுக் குழப்பிச் சாப்பிட்டுவர, உளைமாந்தை நோய் தீரும்.

## தாளேசுவரப் பற்ப மாத்திரை

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த பாதரசம்

சுத்தி செய்த நெல்லிக்காய் கெந்தகம்

சுத்தி செய்த தாளகம்

இவைகளில் வகைக்கு $2\,{}^{1}/_{2}$ வராகன் எடை எடுத்து முதலில் பாதரசத்தையும் கெந்தகத்தையும் கல்வத்தில் இட்டு அரைத்துக் கஜ்ஜலியாகச் செய்து, பின்பு தாளகத்தை இட்டு நன்றாக அரைக்கவும். அடுத்து

சுத்தி செய்த மனோசிலை 5 வராகன் எடை

தாமிரப் பற்பம் 5 வராகன் எடை

இவ்விரண்டையும் கூட்டி நொச்சி இலைச்சாறு விட்டு நான்கு நாட்கள் பகலிலும், இரவிலும் விடாமல் அரைத்து, 2 குன்றிமணி அளவுள்ள மாத்திரைகளாக உருட்டவும். மிளகு, திப்பிலி, ஆகியவற்றின் தூள் 1 வராகன் எடையும் ஒரு மாத்திரையும் எடுத்துத் தேனில் குழைத்துச் சாப்பிடவும். உளைமாந்தை நோய் தீரும்.

### குறிஞ்சாக் கற்கம்

*சரக்கும் செய்முறையும்*

வடக்குத் திசையை நோக்கிச் செல்லும் குறிஞ்சா வேருக்குத் திங்கட்கிழமை அன்று காப்புக்கட்டி, செவ்வாய்க்கிழமை வெட்டிக்கொண்டுவந்து இளநீரில் ஊறப்போடவும். மறுநாள் இதை எடுத்துத் தேங்காய்ப் பால் விட்டு விழுதாக அரைத்து, எலுமிச்சம் பழ அளவு சாப்பிடவும். வாந்தி நிற்கும். பேதி நன்றாக ஆகும். பேதி அதிகமானால் மோர் சாதம் சாப்பிடவும். பேதி நிற்கும்.

### வேங்கைப் பிட்டு

*சரக்கு*

வேங்கை மரப்பட்டை

குறுவை அரிசி மாவு

*செய்முறை*

இவ்விரண்டையும் சமமெடுத்துத் தண்ணீர் சிறிது விட்டு ஊற வைத்து இடித்துப் பிட்டாகச் சுடவும். பின்பு இதில் ஒரு பிடி எடுத்து நல்லெண்ணெயில் தோய்த்துச் சாப்பிடவும். உளைமாந்தை, புண் ஏற்படல், சீயொழுகல் முதலான பற்பல நோய்களும் தீரும்.

### பாவனக் கடுக்காய்ச் சூரணம்

*சரக்கு*

கடுக்காய்த்தோல் 2 பல் எடுத்து, அதனுடன் காடி 1 படி விட்டு ஊறவைக்கவும். மறுநாள் இதனுடன் 1 படி எலுமிச்சம் பழச்சாறு சேர்த்து வைக்கவும். மூன்றாவது நாளன்று இக்கலவையை வெயிலில் வைக்கவும். சாறுகள் ஆவியானபின் கடுக்காய்த்தூளை எடுத்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

பொன்முசுட்டை வேர்
கண்டங்கத்தரி வேர்
வேலிப்பருத்தி வேர்
நெல்லிமுள்ளி
சாதிக்காய்
கற்கடகசிங்கி
கிராம்பு
மஞ்சிட்டி
தூதுவளை வேர்
மிளகறணை வேர்
செங்கழுநீர்க் கிழங்கு
கோஷ்டம்
திப்பிலி
சிறுதேக்கு
பொரித்த இந்துப்பு

*செய்முறை*

முதலான சரக்குகளை வகைக்கு 3 $^{3}/_{4}$ வராகன் எடை வீதம் எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் இட்டு இடித்து வஸ்திரகாயம் செய்து கொள்ளவும். இதனுடன் முன் சொன்ன கடுக்காய்ச் சூரணத்தையும் ஒன்று கலந்து வேண்டிய அளவு தேன் கூட்டி வெயிலில் வைக்கவும். பின்பு இதில் ஒரு பாக்களவு எடுத்துத் தினந்தோறும் உட்கொள்ள, உளைமாந்தை தீரும்.

**தேற்றான் சூரணம்**

*சரக்கு*

| | |
|---|---|
| தேற்றான் கொட்டைச் சூரணம் | 8 பலம் |
| சுத்தி செய்த தாளகம் | 4 பலம் |
| சுத்தி செய்த துரிசு | 4 பலம் |

*செய்முறை*

ஆகியவைகளைக் கல்வத்தில் இட்டு நன்றாக அரைக்கவும். இதனை ஒரு வெருகடி (பூனையின் காலடி) அளவு எடுத்து வெந்நீருடன் சாப்பிடவும். உளைமாந்தை தீரும்.

*குறிப்பு*

இச்சூரணத்தை நிதானமாக உபயோகிக்கவும். அதிகம் சாப்பிட்டால் உணவு உண்பதில் வெறுப்பு உண்டாகும்.

## உளைமாந்தைக்கு மல்லி எண்ணெய்

*சரக்கு*

கொத்துமல்லி விதை
சிவனார் வேம்பு
அதிமதுரம்
கறுஞ்சீரகம்
மிளகு
நிலக்குமிழ் வேர்
கோஷ்டம்
வேம்பாடம்பட்டை
தூதுவளைச் சமூலம்

*செய்முறை*

இவைகளை வகைக்கு $3^3/_4$ வராகன் எடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துப் பசுவின் பால் விட்டு நன்றாக அரைத்து, நல்லெண்ணெய் 5 சேருடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும். தினந்தோறும் 1 வராகன் எடை அளவு அருந்தி வந்தால், 40 நாட்களுக்குள் உளைமாந்தை நோய் தீரும்.

## துடரி எண்ணெய்

*சரக்கு*

துடரிவேர் (இண்டம் வேர்)
முள்ளிவேர்

வேம்பாடம்பட்டை

நிலக்குமிழ் வேர்

பூலாவேர்

கடுக்காய்த்தோல்

தான்றித்தோல்

வேப்பம்பட்டை

வேப்பிலை

வேப்பம்பூ

வேப்பங்காய்

வேப்பம் வேர்

கோஷ்டம்

நெல்லிமுள்ளி

அதிமதுரம்

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு 3 வராகன் எடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து, நல்லெண்ணெய் 5 சேருடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கி வடிக்கவும். இந்த எண்ணெயில் 2 வராகன் எடை எடுத்துக் காலை வேளையில் பாலுடன் உட்கொள்ளவும்.

## கோஷ்ட எண்ணெய்

*சரக்கு*

பசுவின் பால் 16 படியுடன்

கோஷ்டம்

செவ்வியம்

சடாமாஞ்சில்

கற்கடகசிங்கி

விழலரிசி

சீரகம்

பொரித்த இந்துப்பு

யானைத்திப்பிலி

சிற்றரத்தை

திப்பிலி

வெட்பாலையரிசி

தான்றித்தோல்

கறுஞ்சீரகம்

கடுக்காய்த் தோல்

*செய்முறை*

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு வீதம் எடுத்துச் சூரணித்துப் பால் விட்டு நன்றாக அரைத்து, நல்லெண்ணெய் 5 சேருடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கி வடிக்கவும். இதில் 2 வராகன் எடை எடுத்து உட்கொள்ள இருமல், உளைமாந்தை, காசம் முதலிய நோய்கள் அகலும்.

**புண்ணுக்குப் பச்சிலை மருந்து**

*சரக்கு*

குன்றிமணி இலை

கொடிவேலி இலை

நிலக்குமிழ் இலை

சிற்றாமல்லி இலை

முசுட்டை இலை

வேலிப்பருத்தி இலை

பீலி இலை

*செய்முறை*

இவைகளின் விழுதைத் தனித்தனியே ஒரு சுண்டைக்காய் அளவு எடுத்துப் பசுவின் பாலுடன் குழப்பிப் பருகவும். உளைமாந்தை, சீழுடன் கூடிய புண்கள் ஆகியன தீரும்.

## நிலக்குமிழ் எண்ணெய்

*சரக்கு*

நிலக்குமிழ்
பூலாவேர்
வேப்பம்பூ
வேப்பம்பழம்
இண்டு
வேப்பம்பட்டை
வேப்பிலை
வேப்பங்காய்

இவைகள் வகைக்கு 5 வராகன் எடை.

கோஷ்டம்
கடுக்காய்த்தோல்
தான்றித்தோல்
முள்ளி
நெல்லி வற்றல்
அதிமதுரம்

*செய்முறை*

முதலான சரக்குகளையும் வகைக்கு 5 வராகன் எடை வீதம் எடுத்து எல்லாவற்றையும் சூரணித்து, நல்லெண்ணெய் 5 சேர் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக்கி இறக்கவும். இந்த எண்ணெயை உட்கொள்ள உளைமாந்தை தீரும்.

## குறிஞ்சியிலைக் களி

குறிஞ்சி இலையை ஒரு குத்தளவு எடுத்துக் குறுவையரிசி மாவுடன் பிசைந்து ஊறவைத்துக் கல்லுரலில் இட்டு அரைத்துக் களியாகக் கிண்டி நல்லெண்ணெய் சேர்த்துச் சாப்பிடவும். உளைமாந்தை, மேல் மூச்சுவாங்கல், உடம்புவலி ஆகியவைகள் தீரும்.

## நீர் வடிவ உளைமாந்தை நோய்க்கு மருந்து

நெஞ்சில் வலி, விலாப்புறங்களிலும் வலி, நெற்றியில் குத்துவலி, அடிவயிற்றில் வீக்கம், இருமல், மலச்சிக்கல் முதலானவை நீர் வடிவ அல்லது சலரூப உளைமாந்தையின் குறிகுணங்களாகத் தோன்றும். இதற்கு மருந்து வருமாறு:

*சரக்கு*

| | |
|---|---|
| சாதிக்காய் | 3 வராகன் எடை |
| சாதிப்பத்திரி | 1 1/2 வராகன் எடை |
| அதிவிடயம் | 2 வராகன் எடை |
| ஏலக்காய் | 1 3/4 வராகன் எடை |
| அதிமதுரம் | 2 வராகன் எடை |
| தண்ணீர் விட்டான் கிழங்கு | 5 வராகன் எடை |
| இந்துப்பு | 1 1/4 வராகன் எடை |
| கோரைக் கிழங்கு | 1 பலம் |
| பொன்னாங்காணிவேர் | 1/2 பலம் |
| சிறுகீரைவேர் | 1/2 பலம் |
| சிற்றாமுட்டிவேர் | 1/2 பலம் |
| நன்னாரி வேர் | 1/4 பலம் |
| பேராமுட்டி வேர் | 1/4 பலம் |

*செய்முறை*

இவைகளைக் கல்லுரலில் இடித்துப் பசுவின் பால் விட்டு ஊறவைத்து, அம்மியில் வைத்து நன்றாக அரைக்கவும். இதனை ஒரு படி பசுவின் பாலுடன் குழப்பிச் சந்தன விழுது 1/2 பலமும், கனிந்த வாழைப்பழம் 10ம் சேர்க்கவும். பின்பு,

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | 2 படியும் |
| பசுவின் நெய் | 3 படியும் |

சேர்த்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவத்தில் இறக்கவும். இதனுடன் புனுகு 3 வராகன் எடை கட்டிக்கொள்ளவும்.

இம்மருந்தில் 3 வராகன் எடையளவு எடுத்துத் தினம் 2 வேளை வீதம் 19 நாட்களுக்குச் சாப்பிடவும். உளைமாந்தை நோய் தீரும்.

*பத்தியம்*

உப்பு, புளிப்பு முதலான சுவையுள்ள பதார்த்தங்களை நீக்கிவிடவும்.

**நெய்**

*சரக்கு*

பசுவின் நெய்
பசுவின் பால்
இளநீர்

இவைகள் வகைக்கு 1 படி.

சீந்தில் கிழங்கு
முசுமுசுக்கை வேர்
வெள்ளரிப்பழம்
கறுநெய்தல் கிழங்கு

இவைகள் வகைக்கு 1 பலம்.

செங்கழுநீர்க்கிழங்கு 6 பலம்.
ஏலக்காய்
கோஷ்டம்
பேரீச்சம்பழம்
சீரகம்
கிராம்பு
திராட்சைப்பழம்

இவைகள் வகைக்கு 2 பலம்.

சிறுகீரை வேர்
பொன்னாங்காணி வேர்
தாமரையிலையினுட்சுருள்
நன்னாரிவேர்

இவைகள் வகைக்கு 3 பலம்.

சண்பகப்பூ
முல்லை வேர்

இவைகள் வகைக்கு $^1/_2$ பலம்.

*செய்முறை*

இவைகள் எல்லாவற்றையும் சிறுசிறு துண்டுகளாக்கி வெயிலில் உலர்த்திச் சூரணம் செய்துகொள்ளவும். கருங்காலி மரம் வைரமாக எடுத்து இழைப்புளியால் மெல்லியதாக இழைத்துக்கொண்டு, 4 படி சுத்தநீர் விட்டு ஊறவைத்து மறுநாள் நன்றாக அதை இடித்துப் பிழிந்து கொள்ளவும். அதனை அடுப்பின் மேலேற்றி 2 படியாகும்வரை வற்றக் காய்ச்சவும். மறுநாள் அதனுடன் முன் சொல்லிய தூளைப்போட்டு அன்று முழுவதும் ஊறவைத்துப் பசுவின் நெய், பால், இளநீர் ஆகியவைகளையும் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் வடித்து இறக்கவும். இந்நெய்யை நெல்லினுள் 15 நாட்களுக்குக் குறையாமல் புதைத்துவைக்கவும். பின் இதனை இருபொழுதும் கொடுத்துவர உளைமாந்தை தீரும்.

*பத்தியம்*

பசுவின் பால், பசுவின் நெய், உப்பு முதலானவைகளை வேண்டிய அளவு கூட்டவும்.

# 8

# கப நோய்களின் பொது மருத்துவம்

**முன்னுரை**

சித்த மருத்துவ நூல்களில் ஐயம் (கபம்) தொடர்பான நோய்களுக்கான மருந்து வகைகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. குடிநீர், எண்ணெய், நெய், இலேகியம், சூரணம், பற்பம், செந்தூரம், மாத்திரை, மெழுகு, வடகம், புகை, நசியம், தைலம், கருப்பு, மணப்பாகு, அடை, பற்று எனப் பல்வேறு வகைகளிலும் ஏராளமான மருந்துகள் ஐய நோய்களுக்குரியனவாகப் பரிந்துரைக்கப்பட்டுள்ளன. மருந்துத் தட்டுப்பாடின்றி, ஒன்றில்லாவிட்டால் மற்றொன்று என்று எளிதில் தேர்வு செய்துகொள்ளும் வகையில் மிகுதியான மருந்து வகைகளையும் மருந்துப் பொருட்களையும் தொகுத்தும் வகுத்தும கூறி இருத்தலைச் சித்த மருத்துவத்தின் நீண்ட காலப் பயில்வும், பயிற்சியும் சாத்தியமாக்கியுள்ளன. இனி கப நோய்கள், இளைப்பு, இருமல், (பீனிசம் உட்பட) இரைப்பு, விக்கல், உளைமாந்தை முதலிய ஐயம் தொடர்பான நோய்களுக்கான மருத்துவ முறைகளைக் காணலாம்.

## குடிநீர் வகைகள்

### 1. சிறுகத்தரி வேராதிக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

சிறுகத்தரி வேர், ஆடாதோடை இலை, சங்கம் இலை, சீந்தில் கொடி, சிறுதேக்கு, சுக்கு, பேராம்பல் இலை, தேட்கொடுக்கு இலை இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து இடித்துப் பானையில் போட்டு, 2 படி தண்ணீர் விட்டு, அடுப்பின் மேலேற்றி, ஒரு உழக்காகும் வரை வற்றக் காய்ச்சவும்.

*பயன்பாடு*

இக் குடிநீரை வடிகட்டித் தேனும் திப்பிலிச் சூரணமும் சேர்த்துச் சாப்பிட்டுவரச் சயம், காசம் ஆகியன தீரும்.

## 2. நீர்முள்ளியாதிக் குடிநீர்

*சரக்கு*

| | |
|---|---|
| நீர்முள்ளிச்சமூலம் | 1 பிடி |
| கையாந்தகரை | 1 பிடி |
| ஆடாதோடை இலை | 1 பிடி |
| செம்முள்ளி வேர் | $^1/_2$ பிடி |
| முருக்கிலை (முள் முருக்கு) | $^1/_2$ பிடி |
| சுக்கு | 1 பிடி |
| கடுக்காய்த் தோல் | 1 பிடி |

*செய்முறை*

இவைகளை ஒன்று சேர்த்து இடித்து 4 படி தண்ணீர் விட்டு, அடுப்பின் மேலேற்றி, 2 படியாகும்வரை காய்ச்சவும்.

*பயன்பாடு*

இக்குடிநீரை வேறொரு சட்டியில் ஊற்றிவைத்துச் சூடான பதத்தில் நாளொன்றுக்கு 3 காசெடை வீதம் எடுத்து அதனுடன் திப்பிலித்தூள் போட்டு அதிகாலையில் உட்கொள்ளவும். இருமல் தீரும்.

## 3. தூதுவளையாதிக் குடிநீர்

*சரக்கு*

தூதுவளை வேர்
பெருமருந்து வேர்
அமுக்கராக் கிழங்கு
கண்டங்கத்தரி வேர்
சீந்தில் கிழங்கு
சாதிக்காய்

*செய்முறை*

இவைகளைச் சரி எடை எடுத்து, ஒன்றிரண்டாக இடித்து, 1 பங்கு நீர் விட்டு எட்டிலொன்றாகக் காய்ச்சிக் குடிநீர் செய்யவும்.

*பயன்பாடு*

3 நாளைக்குச் சாப்பிடவும். பக்கமந்தாரகாசம் தீரும்.

## 4. கண்டங்கத்தரியாதிக் குடிநீர்

*சரக்கு*

கண்டங்கத்தரி வேர்
தான்றிக்காய்த் தோல்
நெல்லிமுள்ளி
சுக்கு
பேய்ப் புடல்
கடுக்காய்த்தோல்
முசுமுசுக்கை

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு 1 பலம் எடுத்து ஒன்றிரண்டாக இடித்து, நீர்விட்டு எட்டிலொன்றாகக் காய்த்துக் குடிநீராக வடித்துச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இரைப்பு நோய் குணமாகும்.

## 5. ஆடாதோடைக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடை இலை மூன்று அல்லது நான்கு எடுத்துக் குறுக அறிந்து, தேன் விட்டு வதக்கி ஏலக்காய், வால் மிளகு ஆகியவற்றில் வகைக்குக் கால் வராகன் எடை, கடுக்காய்த் தோல், கடுகுரோகணி, தாளிசப் பத்திரி ஆகியவற்றில் வகைக்குக் கால் பலம் இவைகளை ஒன்றிரண்டாய் நசுக்கிச் சேர்த்து, விதிப்படி குடிநீர் செய்யவும்.

*பயன்பாடு*

காலை, மாலை இரு வேளையும் கால் முதல் அரை ஆழாக்கு வீதம் தர, நீர்க்கட்டு, மலச்சிக்கல், சுரம், இருமல் முதலியவைகள் நீங்கும்.

## 6. ஆடாதோடைக் குடிநீர் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடை இலை இரண்டு அல்லது மூன்று எடுத்துச் சிறுக அறிந்து தேன் விட்டு வதக்கி, அதிமதுரம், தாளிசப்பத்திரி, அரிசித்திப்பிலி ஆகியவற்றில் வகைக்கு அரை வராகன் எடை தட்டிச் சேர்த்து, விதிப்படி குடிநீரிடவுடம்.

*பயன்பாடு*

காலை மாலை இரு வேளையும் கால் முதல் அரை ஆழாக்கு வீதம் கொடுக்க இருமல், காசம், சுவாசம், பசியின்மை முதலியன தீரும்.

## 7. ஆடாதோடைக் குடிநீர் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடை இலை ஒரு பிடி எடுத்துக் கொண்டு சிறுக அரிந்து, 1 படி சுத்த நீர் விட்டு அதனுடன்

திப்பிலி, சுக்கு, மிளகு, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல் ஆகிய சரக்குகளை ஒன்றிரண்டாக இடித்து, ஒரு துணியில் முடிந்து போட்டு அடுப்பின் மேல் ஏற்றி, உழக்காகும் வரை சுண்டக் காய்ச்சவும். ஒரு பீங்கான் பாத்திரத்தில் இக் குடிநீரை இறுத்து, முடிந்த பொட்டணத்தைப் பிரித்து அம்மியின் மேல் வைத்து அரைத்து, அக் குடிநீரில் கலந்துகொள்ளவும்.

*பயன்பாடு*

தேன் 1 வராகன் எடை விட்டு, அதிகாலையில் குடிநீரைக் குடிக்கவும். எல்லாவிதமான இருமலும் தீரும்.

## 8. முசுமுசுக்கைக் குடிநீர்

*சரக்கும் செய்முயும்*

முசுமுசுக்கைச் சமூலத்தில் 10 பலம் எடுத்துச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கித் தண்ணீர் 3 மரக்கால் விட்டு, அடுப்பின் மேலேற்றி 6 படியாகும் வரை சுண்டக் காய்ச்சவும்.

*பயன்பாடு*

அக் குடிநீரில் 2 படி வீதம் எடுத்து, 1/2 பலம் சர்க்கரை போட்டு ஒரு நாளில் சாப்பிடவும். அப்போதைக்கப்போது தண்ணீர் சாப்பிடுவதற்குப் பதில் இக் குடிநீரைச் சாப்பிடவும். இருமல் குணமாகும்.

## 9. வேர்க்கொம்புக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

சுக்கு 2 தூறு எடுத்து, அதன் மேல் தோலைச் சீவி நன்றாக நசுக்கி ஒரு பாத்திரத்தில் இட்டு, 1 படி நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி, ஒரு ஆழாக்காக வற்றக் காய்ச்சவும். திப்பிலி 4 (எண்ணிக்கையில்) எடுத்து நன்றாகக் கறுக்கும் வரை வறுத்துப் பொடி செய்யவும்.

*பயன்பாடு*

அப்பொடியை முன் சொன்ன குடிநீருடன் சேர்த்து 3 நாட்களுக்குக் காலை, மாலை வேளைகளில் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல், ஈளை முதலியன தீரும்.

## 10. கொத்துமல்லியாதிக் குடிநீர்

*சரக்கு*

கொத்துமல்லி விதை
கோரைக் கிழங்கு
நன்னாரி வேர்
இம்புரா வேர்
கற்கடகசிங்கி
சிறுநாகப்பூ
தூதுவளை வேர்

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 பலம் எடுத்து, நன்றாக உலர்த்திக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். பின்பு இச்சூரணத்தை 5 பங்குகளாகச்

செய்து ஒரு பங்கை எடுத்து, அதனுடன் 1 படி சுத்த நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி அரைக்கால் படியாகச் சுண்டக் காய்ச்சவும்.

*பயன்பாடு*

இக்குடிநீரை இறுத்துத் தினம் 6 வேளை உட்கொள்ளவும். இம்மாதிரியே மற்ற பங்குகளையும் குடிநீரிட்டுப் பருகவும்.

*பத்தியம்*

பொரித்த மிளகு ரசம், தூதுவளங்காய் வறுவல் முதலியவைகளைக் கூட்டிக் கொள்ளவும். இருமல் நீங்கிச் சுகம் உண்டாகும்.

### 11. அத்திசுரக் குடிநீர்

*சரக்கு*

சீந்தில் கொடி
முத்தக்காசு
சுக்கு
வெட்பாலையரிசி
பேய்ப்புடல்
பற்பாடகம்
கடுகுரோகணி

இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு.

*செய்முறை*

மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் நன்றாய் இடித்து ஒரு பழகிய மட்பாண்டத்தில் போட்டுக் கால் படித் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்து, அரைக்கால்படி அளவிற்குச் சுண்டிவரும் சமயம் வடித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகச் செய்து, நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுக்கவும். இப்படித் தினம் மூன்று வேளையாகச் சில தினம் கொடுத்து வருதல் வேண்டும்.

*தீரும் நோய்*

அத்திசுரம், நீடித்த மாலைசுரம்.

*பத்தியம்*

எளிதில் சீரணிக்கக்கூடிய அன்னம்.

## 12. இரத்தக் கக்கலுக்குக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

அவல் அரக்கை ஒரு பலம் எடை எடுத்து ஒரு பழகிய சட்டியில் போட்டு, கால் படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்து எரித்து, அரக்குக் கறுத்தவுடன் திப்பிலி, சீரகம், கிராம்பு ஆகியவற்றில் வகைக்குக் கால் வராகன் எடையாகப் பொடித்துப் போட்டு, அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தக் கியாழத்தை மூன்று பாகமாகப் பங்கிட்டு, நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வரவேண்டும்.

*தீரும் நோய்*

இரத்தம் கக்கல், வாந்தி முதலியன குணமாகும்.

## 13. சுவாசகாசத்திற்குக் குடிநீர்

*சரக்கு*

கறுங்காஞ்சொறி வேர்
மிளகரணை வேர்
பிரண்டை வேர்
ஆடாதோடை வேர்
கண்டங்கத்தரி வேர்
முள்காரை வேர்
விழுதி வேர்
கறுஞ்சீரகம்

இவைகள் வகைக்கு ஒரு வராகன் எடை.

*செய்முறை*

மேற் கூறப்பட்ட எட்டு சரக்குகளையும் நன்கு இடித்து ஒரு புதுச் சட்டியில் போட்டுக் கால் படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வீசம்படி அளவாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தக் கியாழத்தில் வேளைக்கு ஒரு அவுன்சு வீதம் நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை கொடுத்து வரவேண்டும். இவ்வாறு மூன்று நாள், ஒன்பது வேளை கொடுப்பதற்குள் மிகுந்த குணத்தைக் கொடுக்கும்.

*தீரும் நோய்*

சுவாசகாசம், இருமல் குணமாகும்.

*பத்தியம்*

சீதளப் பண்டம் நீக்கி, இச்சாபத்தியமாக, அன்னம் கொள்வது சாலச் சிறந்தது.

*குறிப்பு*

இந்தக் கியாழத்தைக் கொடுப்பதற்குக் கால் மணி நேரத்திற்கு முன் ஒவ்வொரு தடவையும் ஒரு குன்றியெடை சிங்கி பற்பத்துடன் அரை குன்றி பவளப்பற்பம் கூட்டித் தேனில் மத்தித்துக் கொடுத்து வருதல் அதிக நன்மையைத் தரும்.

## 14. சீதள இருமலுக்குக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

முசுமுசுக்கை இலை, வேப்பிலை, புழுங்கலரிசி ஆகியவற்றில் வகைக்கு ஒரு கைப்பிடி அளவு எடுத்து ஒரு புதிய சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரித்துக் கறுகின சமயம், மத்துகொண்டு கடைந்து சாம்பலாக்கி அதனில் சுக்கு,சிற்றரத்தை, மிளகு முதலியவைகளில் வகைக்கு ஒரு வராகனெடையாகப் பொடி செய்து போட்டுக் கால் படித் தண்ணீர் விட்டு, அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தக் கியாழத்தில் வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் மூன்று வேளை உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சீதளம் சம்பந்தமான இருமல் குணமாகும்.

*பத்தியம்*

ஐயத்தை விருத்தி செய்யக்கூடிய பண்டங்களைத் தள்ளி, இச்சாபத்தியமாக, அன்னம் கொள்ள வேண்டும்.

## 15. சீதள இருமலுக்குக் குடிநீர் (வேறு முறை)

**சரக்கு**

அறுகங்கட்டை
தூதுவளை
பிரண்டை
சுக்கு
இம்புராவேர்
மிளகு
சங்கம் வேர்
கடுக்காய்
ஆதண்டம் வேர்
ஆடாதோடை வேர்

இவைகள் வகைக்கு அரை பலம்.

*செய்முறை*

மேற் கூறப்பட்ட சரக்குளை எல்லாம் ஒருமிக்க இடித்து ஒரு பழகிய புதுச் சட்டியில் போட்டு அரை படித் தண்ணீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்து, அரைக்கால் படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தக் கியாழத்தில் வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் தினம் 5 வேளை கொடுக்கவும். இப்படி மூன்று நாள் கொடுத்தல் நன்று.

*தீரும் நோய்*

சீதளம் சம்பந்தமான இருமல் குணமாகும்.

*பத்தியம்*

முன் முறையில் கூறப்பட்டதேயாகும்.

## 16. வறட்சி இருமல் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

அதிமதுரம், கொட்டை நீக்கிய பேரீச்சங்காய், சிற்றரத்தை, சுக்கு இவைகளை வகைக்கு ஒரு பலம் வீதம் நன்கு இடித்து, நான்கு பாகமாகப் பங்கிட்டு வைத்துக்கொள்ளவும். வேண்டும் போது ஒரு பாகத்தைச் சீலையில் தளர்ச்சியாகக் கிழிகட்டி ஒரு பழகிய புதுச் சட்டியில் போட்டு, அரைக்கால் படி பசுவின் பாலையும் அரைக்கால் படித் தண்ணீரையும் விட்டு அடுப்பிலேற்றி எரித்துத் தண்ணீர் சுண்டிப் பால் இருக்கும் அளவிற்குக் கீழிறக்கி ஆறவிட்டு, முடிச்சை நீக்கிவிட்டுப் போதிய அளவு சீனாக்கற்கண்டுத் தூள் போட்டுக் கலக்கி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தக் கியாழத்தை ஒரே தடவையாகக் காலையில் கொடுக்கவும். இப்படியே மாலையிலும் ஒரு வேளை கொடுக்கவும். இவ்வாறு இரண்டு மூன்று நாள் உட்கொள்வது அவசியமாகும்.

*தீரும் நோய்*

உஷ்ணத்தினால் புகைந்து புகைந்து வரும்படியான வறட்டு இருமலைக் குணப்படுத்தும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 17. இரத்தக் காசத்திற்குக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

சூரத்துக்கடுக்காய், காட்டாத்திப்பூ, திராட்சை, மாசிக்காய் வகைக்கு கழஞ்சு 1 வீதம் நறுக்கி ஒரு பழகிய புதுச் சட்டியில் போட்டுக் கால் படி நீர் விட்டு, அரைக்கால் படியாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

பின்பு எருமைச் சாணத்தை மெல்லிய சீலையில் பிழிந்து எடுத்த நீரோடு, உயர்ந்த பன்னீரைச் சமமாகக் கலந்து முன் காய்ச்சிய குடிநீருடன் ஒரு அவுன்ஸ் (சற்றேறக் குறைய 3/4 பலம்) வீதம், தினம் 3 வேளை, 3 நாள் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

எவ்வளவு சிரமத்திற்கு உள்ளாக்கின இரத்த வாந்தி இருமலாயினும் குணமாகும்.

## 18. ஊறலவல் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

கொட்டைப்பாசி இலையை இடித்துப் பிழிந்த சாற்றில், அவல் 1 படி போட்டு 30 நாழிகை (1/2 நாள்) ஊறவைக்கவும்.

பின்பு அவலை வெயிலில் உலர்த்தி எடுத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

காலை வேளையில் 1 ஆழாக்கு எடுத்துச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

வாயிலிருந்து இரத்தம் விழுதல் நிற்கும்.

## 19. சோம்புக் குடிநீர்

*சரக்கும் செய்முறையும்*

2 சேர் சோம்பை உடைத்து நீரில் கலந்து இரு தினம் ஊறிய பின், வாலைப் பானையில் இட்டு வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

அரைக்கால் முதல் கால் ஆழாக்கு வீதம் உட்கொள்ள வயிற்றுவலி, அசீரணம், வயிற்றுப்புசம், சுவாசம், இருமல், அதிதும்மல், பீனிசம், சுரம் முதலியவைகள் நீங்கும்.

## எண்ணெய்கள்

### 1. தூதுவளை எண்ணெய்

*சரக்கும் செய்முறையும்*

தூதுவளை, கோரைக்கிழங்கு, சங்கு, துளசி, புலிதுடக்கி, கழற்சியிலை, இம்புராவேர் ஆகியவைகளைச் சமூலமாக வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து, ஒன்றிரண்டாக வெட்டி ஒரு பானையில் இட்டு, தண்ணீர் ஒரு நாழி விட்டு, தூதுவளம் பழத்தையும் 1 பலம் சேர்த்து அரைத்துக் குழப்பி, நல்லெண்ணெய் 1 நாழியும் விட்டு, இந்துப்பு, பூதகரப்பான்பட்டை, திப்பிலி இவைகளையும் அரைத்துக் குழப்பிப் பக்குவமாக எரித்து வடிக்கவும்.

*பயன்பாடு*

இதைச் சாப்பிட்டுவர, இருமலும் காசமும் தீரும்.

### 2. தேவதாளி எண்ணெய்

*சரக்கும் செய்முறையும்*

தேவதாளி சமூலம், கையாந்தகரை சமூலம், வாழைக் கிழங்கு, அவுரி சமூலம் இவைகளின் சாற்றைத் தனித்தனியே 1 சேர் எடுத்து, சுத்தமான நல்லெண்ணெய் 4 சேரும் விட்டு ஒன்றாகக் கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்த எண்ணெயைத் தினம் காசளவு எடுத்துக் காலை வேளையில் சாப்பிட இருமல், ஈளை, இரைப்பு முதலியன குணமாகும்.

### 3. சாரணைக் கிழங்கு எண்ணெய்

*சரக்கு*

சாறணைக் கிழங்கு
சீந்தில் கொடி
பிரமி
குப்பைமேனி
தண்ணீர் விட்டான் கிழங்கு

ஆடாதோடை

தூதுவளை

அமுக்காரக் கிழங்கு

இச்சரக்குகளை வகைக்கு 1 பலம் எடுத்துக் கல்லுரலில் இடித்து ஒரு பாத்திரத்தில் போட்டு, 6 படி நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி நன்றாகக் கொதிக்க வைத்து, 4 படியாகச் செய்து வடிகட்டிக் கொள்ளவும். குடிநீருடன் சுத்தமான எள்ளெண்ணெய் 2 படி விட்டு

சுக்கு

சீரகம்

திப்பிலி

கடுக்காய்ப்பூ

மிளகு

பூண்டு

கிராம்பு

இந்துப்பு

கடுகுரோகணி

*செய்முறை*

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு ( $1\,^1/_3$ தோலா) வீதம் எடுத்துச் சூரணித்துக் குடிநீர் கலந்த எண்ணெயுடன் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பதத்தில் வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்த எண்ணெயை ஒரு துட்டெடைத் தினம் உட்கொள்ள காசநோய்கள் தீரும்.

### 4. கண்டங்கத்தரியாதி எண்ணெய்

*சரக்கு*

கண்டங்கத்தரி

முருங்கைப்பட்டை

சுக்கு

திப்பிலி

மிளகு

இந்துப்பு

நேர்வாள வேர்

வசம்பு

துளசி

*செய்முறை*

இம்மருந்து வகைகளைச் சமம் எடுத்துக்கொண்டு அம்மியில் இட்டுத் தண்ணீர் விட்டரைத்து, மருந்துச் சரக்குகளுக்கு நான்கு பங்கு எண்ணெய் விட்டு, அடுப்பின் மேலேற்றிப் பதமாக எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இதனை நசியம் செய்துவரப் பீனிசம், துர்வாசனை முதலியவைகள் தீரும்.

### 5. கையாந்தகரை எண்ணெய்

*சரக்கு*

சிற்றாமணக்கு வேர்

சிற்றாமுட்டி வேர்

நீர்முள்ளி சமூலம்

நன்னாரி வேர்

தகரை விதை

சுக்கு

வாய்விளங்கம்

கொத்துமல்லி

கோஷ்டம்

சிற்றரத்தை

இந்துப்பு

அதிமதுரம்

இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு (1 1/4 வராகனெடை) வீதம் எடுத்து

கையாந்தகரைச் சாறு 1 மரக்கால்

பசுவின் பால் 1 படி

பசுவின் நெய் 1 படி

*செய்முறை*

இவற்றை எடுத்துக்கொண்டு கையாந்தகரைச் சாறு விட்டு முதலில் சொல்லப்பட்ட சரக்குகளை அரைத்து விழுதாக்கி, ஒன்று கலந்து அடுப்பின் மீதேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இது ஆறியபின் வேண்டும்போது வெந்நீரில் எண்ணெயை உருகவைத்து மூக்கில் நசியம் இடவும். இதனால் சிரோவாய்வு, பீனிசம், பலவிதக் கண்ணோய்கள், தலையிலுள்ள நஞ்சுகள் முதலியன தீரும்.

**6. கையாந்தகரை எண்ணெய் (வேறு முறை)**

*சரக்கு*

நல்லெண்ணெய் $^3/_4$ படி

பசுவின் பால் 2 படி

பொன்னாங்கண்ணிச் சாறு

சிறுகீரைச் சாறு

கையாந்தகரைச் சாறு

இவை மூன்றும் சேர்ந்து $^1/_2$ படி. இவைகளுடன்

நெல்லிப்பருப்பு

கஸ்தூரி மஞ்சள்

சந்தனம்

வெட்டிவேர்

சின்ன லவங்கப்பட்டை

மிளகு

செண்பகப்பூ

விலாமிச்சம் வேர்

கறுஞ்சீரகம்

செங்கந்தாரிப்பட்டை

*செய்முறை*

இச்சரக்குகள் பதினொன்றிலும் வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்துச் சூரணம் செய்து எண்ணெயில் குழப்பி, அடுப்பிலேற்றிப் பதமாக வடித்துக்கொண்டு, கோரோசனை 2 காசெடை சூரணித்துப் போடவும்.

*பயன்பாடு*

தலையில் தேய்த்து முழுகிவரப் பீனிசம் தீரும்.

## 7. கையாந்தகரை எண்ணெய் (வேறு முறை)

*செய்முறை*

கையாந்தகரைச் சாறு
ஈரவெங்காயச் சாறு
முள்ளிப்பழச் சாறு
நாய்த்துளசிச் சாறு
பசுமஞ்சள் சாறு
நார்த்தம்பழச் சாறு
இஞ்சிச் சாறு
நெருஞ்சிச் சாறு
துளசிச் சாறு

இச் சாறு வகைகள் வகைக்கு - 1/4 சேர்.

நல்லெண்ணெய் - 4 சேர்

இவை எல்லாவற்றையும் ஒன்று கலந்து அடுப்பின் மேல் வைத்து எரித்துப் பதமாக வரும்பொழுது

| | |
|---|---|
| திப்பிலி | 1 பலம் |
| செங்கழுநீர்க் கிழங்கு | 1 பலம் |
| கோஷ்டம் | 1பலம் |

*செய்முறை*

இவற்றைத் தூளாக்கி எண்ணெயில் போட்டுப் பதமாக எரித்து வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்த எண்ணெயில் தலை முழுகிவரப் பீனிசம், மூக்கிலிருந்து நீர் வருதல், தும்மல் ஆகியன தீரும்.

*பத்தியம்*

புளிப்பு, கைப்புப் பதார்த்தங்களை நீக்கவும். புகையிலையையும் நீக்கவும்.

## 8. துளசி எண்ணெய்

*சரக்கு*

| | |
|---|---|
| துளசிச் சாறு | 4 படி |
| சீந்திற்கொடிச் சாறு | 1 உழக்கு |
| சிறுவழுதலைப் பழச் சாறு | 1 உழக்கு |
| பூண்டின் சாறு | 1 உழக்கு |

இந்நான்கு வகைச் சாறுகளையும் ஒன்று கலந்து

| | |
|---|---|
| குங்கிலியம் | 4 பலம் |
| சுக்கு | 1 பலம் |
| திப்பிலி | 1 பலம் |
| மிளகு | 1 பலம் |

*செய்முறை*

இவைகளை மேற்படிச் சாறு விட்டரைத்து எல்லாவற்றோடும் ஆமணக்கெண்ணெய் ஒரு நாழி கூட்டிக் கலந்து அடுப்பின் மீதேற்றி எரித்துப் பதத்தில் வடிக்கவும். இதனை மூக்கில் நசியமிடவும்:

*தீரும் நோய்*

மயக்கம், மூக்கிலிருந்து சீழ் வருதல், இரத்தம் வீழல் முதலியவை தீரும்.

## 9. முக்கூட்டெண்ணெய்

*சரக்கு*

| | |
|---|---|
| இலுப்பையெண்ணெய் | 1 நாழி |
| சிற்றாமணக்கெண்ணெய் | 1 நாழி |
| எள்ளெண்ணெய் | 1 நாழி |

| | |
|---|---|
| நொச்சிச்சாறு | 1 நாழி |
| சாறணைச்சாறு | 1 நாழி |
| திராயின்சாறு | 1 நாழி |
| உத்தாமணிச்சாறு | 1 நாழி |

இச்சாறு வகைகளையும், எண்ணெய் வகைகளையும் ஒன்று கூட்டி

அவுரி

முடக்கொத்தான்

கசகசா

சிறுகுறிஞ்சான்

கறுநொச்சி

சிலுசிலுப்பை

சங்கு

வில்வம்

திராய்

குதிரைவாலி (முதியார் கூந்தல்)

சாறணை

நிலக்குமிழ்

நத்தைச்சூரி

புங்கு

உத்தாமணி

குன்றி

ஈசுவரமூலி (பெருமருந்து)

இம்மூலிகைகளின் கொழுந்து வகைக்கு ஒரு கழஞ்சு (11/4 வராகன் எடை) எடுத்து இதனுடன்

சதகுப்பை

சிற்றரத்தை

வெளிச்சைப்பிசின்

பூண்டு

மஞ்சள்

தேவதாரம்

சாதிக்காய்

பெருங்குரும்பை

இலவங்கப்பத்திரி

ஏலக்காய்

கறுஞ்சீரகம்

வசம்பு

சுக்கு

திப்பிலி

கிராம்பு

மிளகு

*செய்முறை*

இக்கடைச் சரக்கு வகைகளையும் வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்துப் பச்சிலைகளுடனே ஒன்று கூட்டிப் பால் விட்டு அரைத்துச் சாறு கூட்டிய எண்ணெய் வகையுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக வடிக்கவும்.

*பயன்பாடு*

இதனைச் சிரசில் தேய்த்து மூன்று நாளைக்கு மூழ்கவும். மறு மூன்று நாள் இதை நசியம் செய்யவும் (மூக்கிலிடவும்).

*தீரும் நோய்*

இதில் தினசரி குளிக்க நாட்பட்ட மஞ்சக் காய்ச்சல், காதடைப்பு, தலை நோய்கள், கடலின் அலை ஓசை போன்ற காதில் இரைச்சல் முதலிய பற்பல நோய்கள் தீரும்.

## 10. முக்கூட்டெண்ணெய் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| நல்லெண்ணெய் · | 1 நாழி |
| ஆமணக்கெண்ணெய் | 1 " |
| பசுவின் நெய் | 1 " |

*செய்முறை*

இவைகளுடன் 1 நாழி மிளகுத் தூளைக் குழப்பிச் சூரியபுடமாக வைத்து எடுக்கவும்.

*பயன்பாடு*

இதனால் தலை முழுகிவரவும்.

*தீரும் நோய்*

எல்லாவகைப் பீனிசங்களும் தீரும்.

## 11. பொன்னாங்கண்ணி எண்ணெய்

*சரக்கு*

| | |
|---|---|
| ஆமணக்கெண்ணெய் | 1 படி |
| இளநீர் | 1 " |
| பசுவின் பால் | 1 " |
| பொன்னாங்கண்ணிச் சாறு | கால்படி |
| நெல்லிக்காய்ச் சாறு | " |

இவைகளை ஒன்று கலந்து,

ஏலக்காய்
துளசி வேர்
தூதுவளை வேர்
திப்பிலி
சீரகம்
சுக்கு
விஷ்ணுகிராந்திவேர்
கோரோசனை
கடுக்காய்த்தோல்
அதிமதுரம்

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து இடித்துச் சூரணித்து, இளநீர் விட்டு நன்றாக அரைத்துச் சாறு கூட்டிய எண்ணெயுடன் கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவப்படுத்தி இறக்கவும்.

*பயன்பாடு*

இரவில் ஆகாரம் சாப்பிட்ட பின்னர் இந்த எண்ணெயில் ஒரு தேக்கரண்டி உட்கொண்டு உறங்கவும். காலையில் ஒரு தடவை பேதியாகும்.

*தீரும் நோய்*

சயரோகம், இருமல், காய்ச்சல் தீரும்.

*பத்தியம்*

எருமை மோர், பூசணிக்காய் இவைகளை நீக்கிப் பசுவின் நெய், பால் கத்தரிப் பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு இவைகளை உட்கொள்ளவும்.

## 12. எலியால் எண்ணெய்

*சரக்கு*

| | |
|---|---|
| காட்டாமணக்கு | 20 பலம் |
| பேய்ப்பீர்க்கு | 10 " |
| அப்பைக்கோவைக் கிழங்கு | 10 " |
| சாறணை வேர் | 50 " |
| நிலக்குரா | 20 " |
| பிராய் | 10 " |
| அமுக்கராக் கிழங்கு | 10 " |
| அழிஞ்சில் சமூலம் | 10 " |
| சிறுகுறட்டை | 10 " |
| மூக்கிறட்டை | 50 " |

இவைகளை நறுக்கி ஒன்றிரண்டாக இடித்து ஒரு பெரும் பானையில் இட்டு, 8 மரக்கால் சுத்த நீர் விட்டு ஒரு நாள் ஊற வைத்து அடுப்பின் மேலேற்றி நான்கிலொன்றாகும் வரை வற்றவைக்கவும்.

இக்குடிநீருடன்

அதிமதுரம்
கற்கடகசிங்கி
சிறுதேக்கு
பூதகரப்பான்பட்டை
குக்கில்
சீரகம்
கிராம்பு
கோஷ்டம்
சுக்கு
திப்பிலி
மிளகு
ஏலக்காய்
இலவங்கப்பத்திரி
வெருகங்கிழங்கு
சேங்கொட்டை
பொன்னரிதாரம்

*செய்முறை*

இவைகளை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்துக் குடிநீர் விட்டரைத்துச் சுத்தமான நல்லெண்ணெய் 4 படி விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து மெழுகு பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்த எண்ணெயில் கொஞ்சம் தேன் விட்டு வேளைக்கு 2 வராகன் எடை அளவு எடுத்து உட்கொள்ளவும். சயரோகம் தீரும்.

## 13. மஞ்சள் எண்ணெய்

***சரக்கு***

| | |
|---|---|
| பசுமஞ்சள் சாறு | 1 படி |
| குறிஞ்சாச் சாறு | 1 " |

விளக்கெண்ணெய் 1 படி
வெட்பாலை அரிசி 1/2 பலம்
வாலுளுவை அரிசி 1/2 பலம்

*செய்முறை*

வெட்பாலை அரிசி, வாலுளுவை அரிசி இரண்டையும் நீர் விட்டரைத்துச் சாறு, எண்ணெய்க் கலவையுடன் கலந்து காய்ச்சிய பின், வெந்தயத்தூள் 1 பலம் போட்டு வடிகட்டிக் கொள்ள வேண்டும்.

*பயன்பாடு*

இதனை அளவாக அருந்த, மலக்கட்டு நீங்கும். உடலில் பூசிப் பிடித்துவிட எலும்பைப் பற்றிய உட்காய்ச்சல் நீங்கும். உடல் வன்மை பெறும்.

## 14. எலுமிச்சம் பழ எண்ணெய்

*சரக்கு*

பச்சை மஞ்சள் சாறு
எலுமிச்சம் பழச் சாறு

வகைக்கு 1 உழக்கு.

எள்நெய் -1 படி.

*செய்முறை*

இவற்றை ஒன்று கலந்து காய்ச்சிப் பதத்தில் வடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

*பயன்பாடு*

தலையில் தேய்த்து முழுகிவர பீனிசங்கள் தீரும்.

# நெய் வகைகள்

## 1. சிறுகத்தரியாதி நெய்

*சரக்கு*

சிறுகத்தரி, கையாந்தகரை, பிரமி, சீந்தில் தண்டு இவைகளின் சாறு வகைக்கு ஒரு நாழி. பசுவின் நெய் ஒரு நாழி.

*செய்முறை*

இவைகளை ஒன்று கலந்து அடுப்பின்மேல் வைத்து எரித்து நெய் பதத்தில் இறக்கி வடிக்கட்டிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேண்டும்பொழுது 1/2 தோலா வீதம் காலையிலும் மாலையிலுமாகச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல், காசம், சுவாசம் ஆயிவைகள் தீரும்.

## 2. ஆடாதோடையாதி நெய்

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடையைச் சமூலமாக 48 பலம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்து ஒரு பாத்திரத்தில் இட்டு, 2 மரக்கால் நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி 4 படியாகும் வரை வற்றக் காய்ச்சவும். அதனுடன் பசுவின் நெய் 4 படியும் பசுவின் பால் 4 படியும் எடுத்துக் கொள்ளவும்.

சிற்றரத்தை, அமுக்காரக் கிழங்கு, சிறுதேக்கு, திப்பிலி, கிராம்பு, அதிமதுரம், தேவதாரம், மஞ்சள், சீரகம், கோரோசனை, சுக்கு, சிறுகத்தரி, கோரைக்கிழங்கு, விழலரிசி, முந்திரிப்பழம், சர்க்கரை ஆகியவைகளை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்துக் கல் உரலில் இடித்து மேலே சொன்ன குடிநீருடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரிக்கவும்.

*பயன்பாடு*

நெய்யைப் பதத்தில் இறக்கி வடித்துக் காலையிலும் மாலையிலும் 1/2 தோலா எடை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

காசம், சுவாசம் முதலியன குணமாகும்.

### 3. ஆடாதோடையாதி நெய் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| பசுவின் நெய் | 1 படி |
| கரிசலாங்கண்ணிச் சாறு | $^{1}/_{8}$ " |
| முள்ளியிலைச்சாறு | $^{1}/_{8}$ " |
| கறுநொச்சிச்சாறு | $^{1}/_{8}$ " |
| ஆடாதோடையிலைச்சாறு | $^{1}/_{8}$ " |
| சீந்தில் கொடிச்சாறு | $^{1}/_{8}$ " |
| சாறணைச்சாறு | $^{1}/_{8}$ " |
| கண்டங்கத்தரிச்சாறு | $^{1}/_{8}$ " |
| பிரண்டைச்சாறு | $^{1}/_{8}$ " |

*செய்முறை*

இவைகளை ஒன்று கலந்து, அடுப்பின் மேலேற்றிப் பதமாக வடித்து இறக்கவும். இதனுடன் பருமனான தூதுவளை வேர்ப்பட்டை, சங்கம் வேர்ப்பட்டை இவைகள் வகைக்கு $^{3}/_{4}$ பலமும், சீனி $^{1}/_{8}$பலமும் எடுத்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

உள்ளங்கை கொள்ளுமட்டும் ($^{1}/_{8}$ அணா அளவு) மேலே சொன்ன நெய்யுடன் குழைத்துச் சாப்பிடவும்) ஐய நோய்கள் குணமாகும்.

### 4. ஆடாதோடையாதி நெய் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடை இலை, வேர், கொம்பு முதலியவைகளைச் சமூலமாக எடுத்துச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி 120 பலம் எடுத்துக் கல் உரலில் இட்டு இடித்து, 8 மரக்கால் தண்ணீர் விட்டு 5 நாள் முழுதும் ஊறவைக்கவும். பின்பு இதை அடுப்பின் மேலேற்றி நாலிலொன்றாய்க் காய்ச்சவும். பசுவின் பால் ஒரு மரக்காலும், பசுவின் நெய் 4 படியும் விட்டு, மேற்படி குடிநீரையும் ஒன்று கலந்து

அமுக்கராக்கிழங்கு
ஆடாதோடை வேர்
முக்காவேளை வேர்
திப்பிலி
திரிகடுகு
சிற்றரத்தை
பேரீச்சம்பழம்
விழலரிசி
மரமஞ்சள்
காகோலி
தேவதாரம்
சிவதை வேர்
சந்தனத்தூள்
கறிமுள்ளி வேர்
வட்டத்திருப்பி
சுழலாவாரை
கண்டங்கத்தரி வேர்
முந்திரிகைப்பழம்
சிறுதேக்கு
ஏலக்காய்
வெட்டிவேர்
கிராம்பு
கற்கடகசிங்கி
சீரகாகோலி
இந்துப்பு
இலவங்கப்பட்டை
இடமியம்

இவைகளை வகைக்கு 4 கழஞ்சு வீதம் எடுத்து, இடித்து ஊறவைத்து அம்மியில் இட்டு அரைத்துக் குடிநீர் கூட்டிய நெய்யுடனே குழம்பி, அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

தினம் $^1/_2$ தோலா வீதம் காலை நேரங்களில் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல், ஈளை, நெஞ்செரிவு, உடம்பு உலர்தல், பித்தம், விடக்காய்ச்சல் முதலியவகைள் குணமாகும்.

## 5. ஆடாதோடை நெய் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடைச் சாறு 1 மரக்கால், பசுவின் நெய் 2 படி, பசுவின் பால் 4 படி.

இவைகளை ஒன்று கலந்து

திப்பிலி, கண்டில் வெண்ணெய், இந்துப்பு, சீரகம், யானைத்திப்பிலி, சடாமாஞ்சில், அமுக்கராக்கிழங்கு, செவ்வியம், மரமஞ்சள், பெருங்குறும்பை, கற்கடகசிங்கி, விழலரிசி, தேவதாரம், கறுஞ்சீரகம்.

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து மேற்படி ஏதேனும் ஒரு சாறு விட்டு நன்றாக அரைத்துச் சாறுகூட்டிய நெய்யுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் ஒரு வராகன் எடையளவு எடுத்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சயம், இருமல் தீரும்.

## 6. ஆடாதோடை நெய் (வேறு முறை)

*சரக்கு*

ஆடாதோடைச் சமூலம் 24 பலம் எடுத்துச் சிறுசிறு துண்டுகளாக வெட்டி, 2 மரக்கால் சுத்த நீருடன் இடித்துப் போட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துச் சின்னபடி 1 படியாகும் மட்டும் சுண்டச் செய்யவும். ஆடாதோடையிலைச்சாறு சின்னபடி ஒன்று எடுத்துக்கொள்ளவும்.

சுக்கு
தான்றித்தோல்
விழலரிசி
சிறுதேக்கு
திப்பிலி
இந்துப்பு
ஞாழல்
மிளகு
கொடிவேலிவேர்
மஞ்சள்
கடுக்காய்த்தோல்
திராட்சைப்பழம்
கற்கடகசிங்கி
நெல்லிவற்றல்
கோரைக்கிழங்கு

*செய்முறை*

இவைகளை வகைக்கு $^{1}/_{4}$ வராகன் எடை அளவு எடுத்து மேற்கூறிய குடிநீர் விட்டு அரைத்துச் சாறு கலந்து பசுவின் நெய் 1 படியும் சேர்த்து அடுப்பின் மேலேற்றிச் சிறு தீயால் எரிக்கவும். மறுநாள் இந்நெய்யைப் பதமாக்கி இறக்கி வடிக்கட்டிக் கொண்டு நன்றாக ஆறியபின் சுத்தமான தேன் ஒரு உழக்கும் விட்டுக் கலந்துகொள்ளவும்.

*பயன்பாடு*

இந்நெய்யைத் தினம் ஒரு வராகன் எடை அளவு எடுத்து உட்கொள்ள வும்.

*தீரும் நோய்*

சயம், காசம், பித்தம் முதலான நோய்கள் தீரும்.

## 7. ஆடாதோடை நெய் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஆடாதோடை வேர், கீழ்க்காய் நெல்லி வேர், காட்டுமல்லி வேர், வேளை வேர், குப்பை மேனி வேர், வேலிப்பருத்தி வேர், வழுதலை வேர், நத்தைசூரி வேர், மருட் கிழங்கு, கோவைச்சமூலம், வசம்பு, பூண்டு, கஸ்தூரி மஞ்சள், நல்ல பாம்பு கண்டம் ஆகியவைகளில் வகைக்கு 3 வராகன் எடை எடுத்து அம்மியில் வைத்து நன்றாக அரைத்து ஒரு பாத்திரத்தில் நெய் படி ஒன்று ஊற்றி, அதில் அரைத்ததைக் கலந்து, அதனுடன் எள் நெய் 1 படி, ஆமணக்கு நெய் 1 படி சேர்த்து அடுப்பிலிட்டுக் காய்ச்சி, காயும் பொழுது கறுங்குங்கிலியம் 2 காசெடையும், 5 எலுமிச்சம்பழச் சாறும் சேர்த்துப் பக்குவத்தில் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

உள்ளுக்குக் காசெடை கொண்டு, மேலுக்குத் துவாலை போட, ஐயநோய்களும், நாட்பட்ட சுரமும் தீரும்.

## 8. ஆடாதோடை நெய் (வேறு முறை)

*சரக்கு*

அரிசித்திப்பிலி
சித்திரமூலம் வேர்
சுக்கு
சத்திச்சாரம்
யானைத்திப்பிலி
இந்துப்பு
எவச்சாரம்

இவைகள் வகைக்குக் கழஞ்சு-1.

| | |
|---|---|
| ஆடாதோடைச் சாறு | 1 படி |
| ஆவின் பால் | 1 " |
| ஆவின் நெய் | 1 " |

*செய்முறை*

மேற்கூறப்பட்ட முதல் ஏழு சரக்குகளைச் சிறிது இடித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின் பால் விட்டு நெகிழ அரைத்து வழித்து ஒரு நெய்ப் பாண்டத்தில் போட்டுப் பசுவின் பாலையும் ஆடாதோடைச் சாற்றையும் விட்டுக் கலக்கி உறவான சமயம், பசுவின் நெய் கூட்டி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு ஒரு தேக்கரண்டி வீதம் காலை, மாலை இரு பொழுதும் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

நெஞ்சு வலி, கபச்சிக்கலால் உண்டான இரைப்பு, சுவாசகாசம், பித்த பாண்டு, உள்மூலம், வெளிமூலம் , பழைய சுரம், அக்கினிமந்தம் முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

புளி தள்ளி, இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 9. தசமூல நெய்

*சரக்கும் செய்முறையும்*

பெருவாகை, திரிகடுகு, வில்வம், பாதிரி, கண்டங்கத்தரி, பெருங்குமிழ், நெருஞ்சி, சிறுவழுதுணை, பெருமல்லி, சிறுமல்லி ஆகிய சரக்குகளில் 4 மரக்கால் தண்ணீர் விட்டு 4 படியாகச் சுண்டக்காய்ச்சி

கோஷ்டம், திரிகடுகு, ஏலக்காய், இந்துப்பு, திரிபலை, ஓமம், குரோசாணி ஓமம், கிராம்பு, வாலுளுவையரிசி.

*செய்முறை*

இவைகள் வகைக்கு $1^1/_2$ கழஞ்சு ($1^1/_4$ வராகன் எடை) எடுத்துத் தூள் செய்து பசுவின் பால் விட்டு அரைத்து, நெய் விட்டுக் குழப்பி, அடுப்பின் மேலேற்றி 3 நாளைக்குச் சிறுகச் சிறுக எரிக்கவும். நான்காவது தினத்தில் பக்குவப்படுத்தி இறக்கி வடிக்கவும்.

*பயன்பாடு*

வேளைக்கு இரு காசளவு வீதம் இந்நெய்யை உட்கொள்ள மார்பில் வலி, மூச்சுத் திணறல், நெஞ்சுக்கட்டு, குன்மம், கிராணி, காசம், சுவாசம், முதலியவைகள் தீரும். இந்நெய்யுடன் ஆனந்தபைரவம் ஒரு குன்றுமணி எடை சேர்த்துக் கொடுக்கவும். மருந்தின் வீரியம் மிகும்.

## 10. கரிசாலை நெய்

*சரக்கு*

தூதுவளை, கரிசலாங்கண்ணி, ஆடாதோடை, சங்கம் இலை, சுழலாவாரை ஆகியவற்றின் சாறுகள் வகைக்கு ஒரு படி.

பசுவின் நெய் - $^1/_2$ படி. எள்ளெண்ணெய் - 1/2 படி.

இவைகளை ஒன்று கலந்து, கடுக்காய் 100 எண்ணிக்கையில் எடுத்துக் கொட்டை நீக்கித் தூள் செய்து, சாறு கலந்து நெய்யுடன் போட்டு, வெல்லம் 20 பலமும் போட்டு ஒன்றாகக் கலந்து,

சுக்கு, வாய்விளங்கம், வெள்ளைக்கடுகு, கொடிவேலி வேர், சிறுதேக்கு, திப்பிலி, செவ்வியம், பெருங்காயம், மிளகு, அதிவிடயம், சீரகம், பொன்முசுட்டை வேர், கடுகுரோகணி, சுழலாவாரை வேர், பெருங்குறும்பை, குங்கிலியம், ஏலக்காய், ஓமம், திப்பிலி மூலம், காட்டு மிளகு.

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 1/4 வராகன் எடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து அதனுடன் கலந்து, சுத்தி செய்த இரும்புத்தூள் $^1/_2$ பலமும் போட்டு அடுப்பின் மேலேற்றி மந்தாக்கினியால் எரிக்கவும். இதைக் குழம்பு பக்குவத்தில் இறக்கி ஒரு நாளைக்கு ஆறவைக்கவும். பின்பு இதை ஒரு பாண்டத்தில் இட்டு 15 நாளைக்கு நெற்குவியற்குள் புதைத்து வைக்கவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு கொட்டைப்பாக்கு அளவு எடுத்துச் சாப்பிட ஈளை, காசம், சுவாசம், இருமல் ஆகியவைகள் தீரும்.

*பத்தியம்*

கசப்புப் பதார்த்தங்களையும், புளிப்புப் பதார்த்தங்களையும் நீக்கவும். பசுவின் பால், வெள்ளாட்டுப் பால், பசுவின் நெய், துவரம்பருப்பு, புடலங்காய்,

கௌதாரி இறைச்சி, காடை இறைச்சி, முருங்கைப் பிஞ்சு ஆகியவைகளைக் கூட்டிக்கொள்ளவும்.

## 11. அத்திப்பட்டையாதி நெய்

*சரக்கும் செய்முறையும்*

அத்திப்பட்டை, ஆலம்பட்டை, அரசம்பட்டை, இத்திப்பட்டை ஆகியவைகளை நன்றாக முற்றியதாகவும், சிவப்பாகவும் பார்த்து வகைக்கு ஒரு பலம் வீதம் கொண்டுவந்து, நன்றாகப் பஞ்சு போல் இடித்து, 4 மரக்கால் நீர் விட்டு, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு, அதனுடன் வெள்ளெருக்குச் சாறு 2 படியும், சோற்றுக் கற்றாழைச் சாறு 2 படியும், பசுவின் நெய் 2 படியும் விட்டு ஒன்று கலந்து,

அரசமொட்டு, ஆலமொட்டு, அத்திமொட்டு, சந்தனத்தூள், அதிமதுரம், கோஷ்டம், இலுப்பைப்பூ, கிராம்பு, நெய்தல் கிழங்கு, நன்னாரி வேர், அமுக்கராக் கிழங்கு, பூலாங் கிழங்கு, சண்பக மொட்டு, செங்கழுநீர்க் கிழங்கு, பச்சிலை, இலவங்கப்பத்திரி, பேரீச்சம்பழம், ஏலக்காய், தாமரை இலைச்சுருள், வெள்ளருகம் வேர், நாணல் தாது, சிறுநாகப்பூ.

இச்சரக்குகள் வகைக்கு 1 1/4 வராகன் எடை வீதம் எடுத்துப் பால் விட்டு அரைத்துச் சாறு கலந்த நெய்யுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றி, சிறு தீயாக 4 நாள் எரிக்கவும். 5-ஆவது தினத்தில் இதைப் பக்குவப்படுத்தி இறக்கவும்.

*பயன்பாடு*

நோயின் பலத்தை அறிந்து தினம் 2 வேளை ஒரு தேக்கரண்டி வீதம் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

உடம்பு உலர்ந்து போதல், எலும்புருக்கி, இருமல், ஈளை, நெஞ்சில் சளி, கோழை, முதலிய நோய்கள் தீரும்.

## 12. பூசணி நெய்

*சரக்கும் செய்முறையும்*

பூசணிக்காய்ச் சாறு -1 குறுணி, பசுவின் நெய்-2 படி. இவைகளை ஒன்றுகலந்து ஏலக்காய், கரிப்பாலைவேர், கிராம்பு, இந்துப்பு, சுக்கு, விலாமிச்சம் வேர், அதிமதுரம், விழலரிசி, சிறு நாகப்பூ, பச்சிலை இச்சரக்குகள் வகைக்கு 2

கழஞ்சு ( $3\,{}^{3}/_{4}$ வராகன் எடை) எடுத்துப் பூசணிக்காய்ச் சாறு விட்டு நன்றாக அரைத்து, சாறு குழம்பிய நெய்யுடன் சேர்த்து, 4 தினங்களுக்கு ஊறவைத்து, ஐந்தாம் தினத்தில் இம்மருந்தை அடுப்பின் மேலேற்றி, எரித்துப் பக்குவமாகப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இதை வடிகட்டி 4 பலம் சர்க்கரை கூட்டிக்கொண்டு தினமொன்றுக்கு 3 கழஞ்சு வீதம் பாலுடன் சாப்பிட்டு வரவும். ஐய நோய்கள் தீரும்.

### 13. பூசணி நெய் (வேறு முறை)

*சரக்கு*

பூசணிக் காய்ச் சாறு 8 படி (1 மரக்கால்)

பசுவின் நெய் 1 படி

இவ்விரண்டையும் ஒன்றுசேர்த்து அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைத்து நாலிலொன்றானபின், பசுவின் பால் படி 1 விட்டு மறுபடியும் காய்ச்சவும். இம்மருந்து கொதிக்கையில்,

காகோலி
அதிமதுரம்
சிற்றரத்தை
யானைத்திப்பிலி
கண்டத்திப்பிலி
திப்பிலி
கோரைக்கிழங்கு
சுக்கு
கொடிவேலி வேர்
பற்பாடகம்
சிறுதேக்கு

*செய்முறை*

ஆகிய சரக்குகள் வகைக்கு $^{1}/_{2}$ பலம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து அதனுடன் சேர்த்துக் காய்ச்சவும். நன்கு பதமாக்கி இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் $^1/_4$ பலம் எடுத்துப் பசுவின் பாலுடன் உட்கொள்ள ஐய நோய்கள் குணமாகும். 40 நாட்கள் வரை உபயோகிக்கவும். சுரம், பித்தம் முதலானவைகளுக்கு நல்லது.

## 14. தூதுவளை வேர் நெய்

*சரக்கும் செய்முறையும்*

தூதுவளை வேரிலுள்ள மேல் தோலை உரித்துக் காய வைத்து இடித்துச் சூரணம் செய்து எடுத்த தூள் ஒரு சிறங்கையுடன்

கடுக்காய்த் தூள், மிளகுப் பொடி, மஞ்சள் தூள்

ஆகியவற்றுள் வகைக்குக் காலேயரைக்கால் சிறங்கை வீதம் எடுத்துப் பசுவின் நெய் 1 சேரில் குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பக்குவப்படுத்திக் கிளரி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இதை வடிகட்டாமல் கடுகுடன் உபயோகிக்கவும். இருமல் முதலானவை குணமாகும்.

## 15. தூதுவளையாதி நெய்

*சரக்கும் செய்முறையும்*

தூதுவளை, கையாந்தகரை, ஆடாதோடையிலை ஆகியவைகளைத் தனித்தனியாக எடுத்துப் பிழிந்த சாறு வகைக்கு 4 படி எடுத்துப் பசுவின் நெய் 1 படியுடன் கலந்து கொள்ளவும்.

பூசணிப்பூ, ஈத்தின்னி வெளவால், மிளகு, வசம்பு, கருஞ்சீரகம், திப்பிலி

இச்சரக்குகள் வகைக்கு ஒரு கழஞ்சு ($1^1/_4$ வராகன் எடை).

சுக்கு 2 கழஞ்சு.

இவைகளை ஒன்று சேர்த்துப் பால் விட்டு அரைத்துச் சாறு கூட்டிய நெய்யுடன் கலந்து, அடுப்பின் மேலேற்றி நன்றாக எரித்துப் பதத்தில் வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யைத் தினந்தோறும் காலையில் சாப்பிட்டுவர ஈளை, இருமல், முதலியவை தீரும்.

## 16. தூதுவளையாதி நெய் (வேறு முறை)

*சரக்கு*

தூதுவளை வேர்
நொச்சி
இம்புராவேர்
பொரும்பிலி
பிரமி
குப்பைமேனி
பொடுதலை
கையாந்தகரை
சங்கு
தேள்கொடுக்கு
சாரடை
செம்முள்ளி
வேலிப்பருத்தி
செருப்படை
ஆடாதோடை
பிரண்டை
செம்பை

ஆக இப்பதினேழு வகை இலைகளின் சாறும் வகைக்கு $^1/_2$ சேர்.

பசுவின் நெய் 2 சேர்
பசுவின் பால் 4 சேர்

இவைகளை ஒன்றுகலந்து கொண்டு

பெருமருந்து வேர்
கொடிவேலிவேர்
திப்பிலி
இந்துப்பு
யானைத்திப்பிலி

கிராம்பு

நெல்லிவற்றல்

கடுக்காய்த் தோல்

சிறுமூலம்

சதகுப்பை

சுத்தி செய்த மனோசிலை

சுக்கு

அமுக்கராக்கிழங்கு

வட்டத்திருப்பி வேர்

விழலரிசி

பெருங்காயம்

சாதிக்காய்

தான்றிக்காய்த் தோல்

கற்கடக சிங்கி

சுத்தி செய்த தாளகம்

சிறுதேக்கு

தேவதாரு

மிளகு

கறுஞ்சீரகம்

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு $1\,{}^{1}/_{4}$ வராகன் எடை வீதம் எடுத்து ஏதேனும் ஒரு சாறு விட்டு அரைத்து, சாறு கலந்த நெய்யுடன் குழப்பி, அடுப்பின் மேல் வைத்துப் பக்குவமாக எரித்துப் பதத்தில் வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் 4 வராகன் எடை வீதம் தினம் ஒரு வேளை சாப்பிட ஐய நோய்கள் தீரும்.

## 17. தூதுவளை நெய் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| தூதுவளைப் பழச் சாறு | 1 படி |
| தூதுவளை இலைச் சாறு | 1 " |
| பசுவின் நெய் | 1 " |

இவைகளை ஒன்று கலந்து

கண்டத்திப்பிலி

கடுகுரோகணி

சீரகம்

மிளகு

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து இடித்துப் பொடி செய்து சாறு கலந்த நெய்யுடனே குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் தினம் 1/2 பலம் உட்கொள்ளச் சயரோகம் தீரும்.

## 18. தூதுவளை நெய் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஊர்ப்பன்றி மாமிசத்தைப் புளி இட்டுக் கறியாகச் சமைத்து 8 நாட்கள் சாப்பிட்டு, தேற்றாங்கொட்டையை அரைத்து எலுமிச்சங்காய் அளவு எடுத்துக் கடுகுரோகணி 1/4 வராகன் எடையும், சிவப்பு வாழைப்பழம் ஒன்றும் சேர்த்துப் பிசைந்து 3 நாட்களுக்குச் சாப்பிடவும்.

பின்னர்

| | |
|---|---|
| தூதுவளையிலைச் சாறு | 1 ஆழாக்கு |
| சுத்தமான தேன் | 1 " |
| கடுகுரோகணி | $^{1}/_{4}$ வராகன் எடை |

ஆகியவற்றைச் சேர்த்து மற்றும் 3 நாட்களுக்குத் தினம் 2 வேளைகள் உட்கொள்ளவும்.

ஒரு சட்டியில் தூதுவளம்பழம் 1 படி போட்டுப் பசுவின் பால் 1 படி, தூதுவளையிலைச் சாறு 1 படி, பசுவின் நெய் 1 படி இவற்றை ஒன்று கலந்து

திப்பிலிமூலம்

கடுகுரோகணி

திப்பிலித்தூள்

கறுஞ்சீரகம்

மிளகு

இவைகள் வகைக்கு 1 பலம் எடுத்து இடித்துப்போட்டு, சர்க்கரை 5 பலம் சேர்த்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்த நெய்யில் ஒரு எலுமிச்சம் பழ அளவு எடுத்து நாள்தோறும் 2 வேளை சாப்பிட்டுவர இருமல், ஈளை, சயம், உடல் இளைப்பு முதலானவை தீரும்.

*பத்தியம்*

உப்பு, புளிப்புச் சுவையுள்ள பண்டங்கள் ஆகாது. முருங்கைப் பிஞ்சு, திருக்கைக் கருவாடு, சுறாக்கருவாடு, இளங்கீரை முதலியவைகளை உட்கொள்ளலாம்.

## 19. தூதுவளை நெய் (வேறு முறை)

*சரக்கு*

தூதுவளை 25 பலம், முள்ளி, கண்டங்கத்தரி, காஞ்சொறி, ஆடாதோடை, மிளகு, திப்பிலி, கடுக்காய், சிறுகாஞ்சொறி இவை வகைக்கு 4 பலம். இவைகளை இடித்து ஒரு பாண்டத்தில் சேர்த்து நீர் 2 தூணி விட்டு 1/16 ஆகக் குறுக்கி வடித்து ஒரு பாண்டத்தில் சேர்த்து, அதில்

ஆவின் நெய் 2 படி

ஆவின் பால் 2 "

திரிகடுகு

திரிபலை

தாளிசம்

கோஷ்டம்

அக்கிராகாரம்

வாய்விளங்கம்

சீரகம்

ஓமம்

வால்மிளகு

சிற்றரத்தை

பேரரத்தை

ஏலம்

கிராம்பு

சாதிக்காய்

சாதிப்பத்திரி

இவை வகைக்கு 3 $^{3}/_{4}$ வராகன் எடை

*செய்முறை*

இவைகளை எல்லாம் ஆவின் பால் விட்டுக் கற்கமாக அரைத்து மேற்படியில் கரைத்து அடுப்பிலிட்டுக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

1 கரண்டி வீதம் காலையில் மாத்திரம் ஒரு மண்டலம் கொண்டால் சயம், ஈளை, இருமல், காசம், மேகம், உட்டிண நோய், இரைப்பு, ஐயவாய்வு, குண்டலவாய்வு ஆகியவைகள் தீரும்.

## 20. தூதுவளை நெய் (வேறு முறை)

*சரக்கு*

| | | |
|---|---|---|
| 1. | தூதுவளைச் சமூலம் | 20 பலம் |
| | கறிமுள்ளி வேர் | 10 பலம் |
| | கண்டங்கத்தரி வேர் | 10 பலம் |
| 2. | கடுக்காய் | |
| | தான்றிக்காய் | |

மிளகு
கோஷ்டம்
சித்திரமூலம்
சிறுநாகப்பூ
நெல்லிவற்றல்
சுக்கு
திப்பிலி
தாளிசப்பத்திரி
நன்னாரி வேர்

இவைகள் வகைக்கு பலம் 1.

முசுமுசுக்கை வேர்
கண்டங்கத்தரி விதை

இவைகள் வகைக்கு பலம் $^1/_2$.

3. ஆவின் நெய் 1 படி
ஆவின் பால் 1 "
இஞ்சிச் சாறு $^1/_2$ "

*செய்முறை*

முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட மூன்று சரக்குகளையும் பஞ்சு போல் நசுக்கி ஒரு பெரிய பாண்டத்தில் போட்டு 8 படி தண்ணீர் விட்டு அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாக எரித்து, ஒரு படி அளவிற்குச் சுண்டின சமயம் வடிகட்டிக் குடிநீர் செய்து கொள்ளவும்.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளை இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்துப் பசுவின்பல் விட்டு நெகிழ அரைத்து வழித்து எடுத்துக் கொள்ளவும். அப்பால் ஒரு நெய்ப் பாண்டத்தில் முன் சித்தப்படுத்திய குடிநீரைப் போட்டுக் கலக்கி, மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட திரவங்களை விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமாகக் காய்ச்சிக் கீழிறக்கித் தேன் படி அரைக்கால், சீனி சர்க்கரை பலம்-1 போட்டுக் கலக்கி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1-2 தேக்கரண்டி அளவு தினம் இரு வேளை கொடுத்து வருக.

தீரும் நோய்

ஈளை, இருமல், காசம், சுவாசம், உப்புசம், இரத்தகாசம் முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

சீதளப் பண்டங்களை நீக்கி, இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

**21. தூதுவளை நெய் (வேறு முறை)**

*சரக்கு*

தூதுவளைவேர்
கறுந்துளசி வேர்
இம்பூரா வேர்
மணத்தக்காளி வேர்
முசுமுசுக்கை வேர்
மிளகரணை வேர்
சிறுகீரை வேர்
ஆடாதோடை வேர்
அமுக்கராக் கிழங்கு வேர்

இவைகள் வகைக்குப் பலம்-1.

*செய்முறை*

இவைகளை இடித்துப் பாண்டத்தில் இட்டு, 5 படி நீர் விட்டு, 1/2 படியாகக் காய்ச்சி நன்றாய்ப் பிசைந்து வடிகட்டி, அதனுடன் 1/2 வீசை பசுவின் நெய் விட்டுப் பதமுறக் காய்ச்சி வடித்து, அந்நெய் சூடாக இருக்கும்போதே நன்கு பொடிசெய்த இரண்டரை பலம் கற்கண்டைப் போட்டுக் கலக்கி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் இரு வேளை ஒரு கரண்டியேனும் துட்டெடையேனும் உண்டுவரவும்.

*தீரும் நோய்*

ஐய நோய்கள், கை கால் எரிச்சல், புகைந்துக் கோழையின்றி வரும் இருமல், ஈளை, காசம் முதலியன குணப்படும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 22. திப்பிலி நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| திப்பிலி | 2 பலம் |
| கடுகுரோகணி | 1 ஆழாக்கு |
| மிளகு | 1 ஆழாக்கு |
| வெளுத்த பிசின் | 1 பலம் |

*செய்முறை*

இவைகளை எடுத்துச் சூரணித்துப் பசுவின் நெய் 1 படி கலந்து, அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் ஒரு சிறு கரண்டி அளவு எடுத்துக் காலை வேளையில் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல், ஈளை, கிருமிகள், கோழை, சளி, வாயு முதலிய பற்பல நோய்கள் தீரும்.

## 23. திப்பிலி நெய் (வேறு முறை)

*சரக்கு*

திப்பிலி
சீரகம்
வில்வ வேர்
அதிவிடயம்
பேராமல்லி
நன்னாரி வேர்
கடுகுரோகணி
வெட்பாலை அரிசி

சுக்கு

நெல்லி முள்ளி

சந்தனம்

கீழாநெல்லி வேர்

திராட்சைப் பழம்

விலாமிச்சம் வேர்

*செய்முறை*

இவைகள் வகைக்கு 6 கழஞ்சு (40 குன்றி) எடுத்து ஒன்றிரண்டாக இடித்துத் தண்ணீர் விட்டு நன்றாக ஊறவைத்துப் பின்பு அம்மியின் மேல் வைத்து அரைத்துப்

பசுவின் பால் 2 படியும்

பசுவின் நெய் 2 படியும்

விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும். இதை நன்றாக வடிகட்டிக் கொண்டு ஒரு பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வியாதியின் பலத்தை அறிந்துகொண்டு, தினம் அதிகாலையில் 1/4 முதல் $^1/_2$ தோலா வரை கொடுக்கவும். இவ்வாறு 4 அல்லது 5 நாட்களுக்கு உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சுரத்துடன் கூடிய காசம் தீரும்.

## 24. திப்பிலி நெய் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

அரிசித் திப்பிலி 8 பலம் எடுத்து ஒரு பாத்திரத்தில் இட்டு, அதனுடன் 10 மடங்கு சுத்த நீர் விட்டு நாலிலொன்றாகும் வரை வற்றக் காய்ச்சவும். இதற்குச் சமனெடை பசுவின் நெய் விட்டு மறுபடியும் காய்ச்சிப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இதனை வடிகட்டித் தினம் 5 வராகன் எடை வீதம் உள்ளுக்குக் கொடுக்கக் காசநோய்கள், கபநோய்கள் முதலானவை தீரும். இந்நெய்க்கு நாராயண நெய் என்ற பெயரும் உண்டு.

## 25. திப்பிலியாதி நெய் (வேறு முறை)

*மூலிகைச் சரக்கு*

முள்ளி
குமிழ்வேர்
சிற்றாமுட்டி
கண்டங்கத்தரி
சிறுகாஞ்சொரி
சிறு நெருஞ்சில்
வில்வம்
தூதுவளை
ஆடாதோடை
துளசி
பாதிரி வேர்

வகைக்கு 4 பலம்.

நீர் 1 தூணி சேர்த்துக் குடிநீராகக் காய்ச்சி 1 குறுணியாக வற்ற வைத்து வடிகட்டிக் கொள்ள வேண்டும்.

நெய், பால், தேங்காய்ப் பால் வகைக்கு 1 குறுணி.

*கற்கச் சரக்கு*

திப்பிலி
ஏலரிசி
கற்கடகசிங்கி
அதிவிடையம்
அதிமதுரம்
செவ்வியம்
சடாமாஞ்சில்
பேரரத்தை
இலவங்கம்
இலவங்கப்பத்திரி

சிறுதேக்கு
திப்பிலி மூலம்
சீரகம்
கறுஞ்சீரகம்
சுக்கு
மிளகு
திப்பிலி
கஸ்தூரி மஞ்சள்
கடுக்காய்
நெல்லிக்காய்
தான்றிக்காய்

வகைக்கு 1 பலம்.

சர்க்கரை 1 படி
தேன் 1 படி

*செய்முறை*

கற்கச் சரக்குகளைப் பால் விட்டு அரைத்துக் குடிநீர், நெய், தேன், பால், சர்க்கரை இவற்றுடன் கலந்து எரித்து வடித்து வைத்துப் பயன்படுத்த வேண்டும்.

*தீரும் நோய்*

சயம், சுவையின்மை, என்பைப் பற்றிய சுரம் ஆகியன தீரும்.

## 26. திப்பிலி நெய் (வேறு முறை)

*சரக்கு*

திப்பிலி
வெட்பாலை அரிசி
வில்வ வேர்
கடுக்காய்
நெல்லிவற்றல்
விலாமிச்சம் வேர்

சண்பகப்பூ

கடுகுரோகணி

கீழ்க்காய்நெல்லி

வேப்பம் பட்டை

தான்றிக்காய்

ஆடாதோடை

திராட்சைப் பழம்

அதிவிடையம்

இவைகள் வகைக்கு 1 வராகன் எடை.

*செய்முறை*

மேற்கூறப்பட்ட சரக்குகளை இடித்து மசித்து, அம்மிக்கல்லில் வைத்துத் தண்ணீர் தெளித்து நெகிழ அரைத்து ஒரு நெய்ப் பாண்டத்தில் போட்டு, கால்படி தண்ணீர் விட்டுக் கலக்கி எல்லாம் உறவானபின், 1/4 படி பசுவின் நெய் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்த நெய்யில் வேளைக்கு 1-2 தேக்கரண்டி வீதம் தினம் இரு வேளை கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சுரம், விக்கல், தேக உளைச்சல், அரோசகம், தலைநோய் ஆகியவைகள் தீரும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 27. கடுகாதி நெய்

*சரக்கு*

கடுகு

சிற்றாமுட்டி

பேராமுட்டி

வெளிச்சைப் பிசின்

சாதிப்பத்திரி

வெள்ளை வெங்காயம்

மிளகு

கறுஞ்சீரகம்

சிறுகாஞ்சொரி வேர்

*செய்முறை*

இந்த ஒன்பது சரக்குகளையும் சரி எடை எடுத்து, தூதுவளைச் சாறு விட்டு அரைத்து, 1 படி பசுவின் நெய்யுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் ஒரு கரண்டி (வராகன் எடை) வீதம் காலையிலும் மாலையிலுமாக இரு வேளை உட்கொண்டு, இதன் கடுகில் 3 கழஞ்சுகள் வீதம் உட்கொள்ள ஐயநோய்கள் தீரும்.

## 28. ஆலம் விழுது நெய்

ஆலம் விழுதுடன் விடத்தேரை வேரின் பட்டையையும் கூட்டிச் சிறிது நெய் கலந்து நன்றாக அரைத்து, மூக்கில் நசியம் இடவும். பூச்சிகள் செத்துவிழும். தினவும் நிற்கும்.

## 29. கறுநொச்சி நெய்

*சரக்கு*

கஸ்தூரி மஞ்சள்

பூலாங்கிழங்கு

கறுஞ்சீரகம்

மிளகு

திப்பிலி

ஓமம்

பச்சிலை

வால்மிளகு

தாளிசப்பத்திரி

கோரோசனை

சுக்கு

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்குக் கால் பலம் எடுத்துத் தண்ணீர் விட்டு அரைத்துக் குங்குமப்பூ 1 பணவெடை ($^{1}/_{10}$ வராகன் எடை) போட்டு, கறுநொச்சிக் கொழுந்தை அரைத்த விழுதொரு எலுமிச்சங் காய் அளவு எடுத்து, பசுவின் நெய் 2 சேரில் குழப்பி அடுப்பின் மேல் ஏற்றிப் பதமாக எரித்து வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யை நசியம் இடப் பீனிசங்கள், நீர்ப்பாய்ச்சல், மண்டைச்சூலை, காதிரைச்சல், தும்மல், கண் நோய்கள், கரப்பான், வீக்கம், கபத்தினாலுண்டான பிடரி வலி முதலியவை தீரும்.

## 30. சரபேந்திர நெய்

*சரக்கு*

சிற்றாமணக்கு வேர்

சிற்றாமுட்டி வேர்

நீர்முள்ளிச் சமூலம்

நன்னாரி வேர்

தகரை விதை

சுக்கு

வாய்விளங்கம்

கொத்துமல்லி

கோஷ்டம்

சிற்றரத்தை

இந்துப்பு

அதிமதுரம்

இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு ( $1^{1}/_{4}$ வராகன் எடை) வீதம் எடுத்து

கையாந்தகரைச் சாறு 1 மரக்கால்

பசுவின் பால் 1 படி

பசுவின் நெய் 1 படி

*செய்முறை*

இவற்றை எடுத்துக்கொண்டு, கையாந்தகரைச் சாறுவிட்டு முதலில் சொல்லப்பட்ட சரக்குகளை அரைத்து விழுதாக்கி, ஒன்றுகலந்து, அடுப்பின் மீதேற்றி எரித்துப் பதத்தில் நெய்யை இறக்கவும்.

*பயன்பாடு*

இது ஆறியபின், வேண்டும்போது வெந்நீரில் உருகவைத்து, மூக்கில் நசியம் இடவும்.

*தீரும் நோய்*

இதனால் சிரோவாய்வு, பீனிசம், பலவிதக் கண்ணோய்கள் தீரும்.

## 31. சீந்தில் நெய்

*சரக்கு*

சீந்தில் கொடி
தூதுவளை
சிவனார்வேம்பு
நிலவேம்பு
நிலப்பனங்கிழங்கு
பொன்னாங்கண்ணி
நிலக்குமிழ்வேர்
சகதேவி (நெய்ச் சிட்டி)
தாமரைக் கிழங்கு
சிற்றாமல்லி
பேராமல்லி
கோரைக் கிழங்கு

*செய்முறை*

இவைகளைச் சமமெடுத்துப் பசுவின் பால் ஒரு உழக்கு விட்டு நன்றாக ஊறவைத்து அடுப்பின் மேல் வைத்து $^{2}/_{5}$ பங்கு ஆகும் வரை நன்கு வேகவைத்துப்

பிழிந்து குடிநீர் செய்து கொள்ளவும். இதனுடன் பசுவின் நெய், நல்லெண்ணெய், வேப்பம்பட்டைச் சாறு ஆகியவற்றில் வகைக்கு 1 நாழி கூட்டிக்கொள்ளவும்.

சுக்கு
மிளகு
திப்பிலி
கோஷ்டம்
ஏலம்
அதிமதுரம்
வசம்பு
பூண்டு
கற்கடகசிங்கி
நெல்லிவற்றல்
கறுவேல்
கிராம்பு
சாதிப்பத்திரி
கிளியூரம்பட்டை
கண்டில் வெண்ணெய்
ஓமம்
பச்சிலை
கச்சோலம்
சீரகம்
கறுஞ்சீரகம்
கொத்துமல்லி
குக்கில்
சடாமாஞ்சில்
சிற்றரத்தை
கடுகுரோகணி
சாதிப்பத்திரி

இவைகளைச் சமமாக எடுத்துப் பால் விட்டு அரைத்து மேற் சொன்ன நெய், எண்ணெய் இவைகளுடன் குழப்பிப் பதமாக எரித்து இறக்கவும்.

*தீரும் நோய்*

இந்நெய்யைத் துட்டளவு சாப்பிட்டுவரப் பீனிசம், (மூக்கடைப்பு) தீரும்.

## 32. வல்லாரை நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| வல்லாரைச் சாறு | 4 படி |
| சீதேவிச் செங்கழுநீர்ச் சாறு | 1 " |
| பசுவின் நெய் | 1 " |
| கரிப்பாலைச் சாறு | 1 " |
| பசுவின் பால் | 2 " |
| இளநீர் | 2 " |

இவைகளை ஒன்று கலந்து

அவுரி
குன்றிவேர்
கோஷ்டம்
அதிமதுரம்
செங்கழுநீர்க் கிழங்கு

*செய்முறை*

இவைகள் வகைக்கு 5 வராகன் எடை எடுத்து இடித்துச் சூரணித்துப் பசுவின் பால் விட்டு அரைத்துக்கொண்டு, சாறு கூட்டிய நெய்யுடன் குழப்பிக்கொள்ளவும். இதனைச் சிறுகச் சிறுக 3 நாட்கள் கொதிக்கவைத்து, 4-ஆவது நாளன்று பக்குவப்படுத்தி இறக்கவும். பின்பு நெய்யை வடிகட்டி அத்துடன் கட்டிக்கற்பூரம், கோரோசனை ஆகியவைகளைத் தனித்தனியே 5 வராகன் எடை எடுத்துச் சூரணித்துப் போட்டு, ஒரு சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் $1^{1}/_{4}$ வராகன் எடை அளவு எடுத்துக் காலை வேளையில் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இருமல், கபம், வயிற்றில் எரிச்சல், நாக்கு உலர்தல், அலரி, எட்டி முதலான நஞ்சுகள் முதலிய பற்பல நோய்கள் தீரும். இது மிகவும் நல்ல முறையாகும்.

## 33. நெல்லிக்காய் நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| நெல்லிக்காய்ச் சாறு | 4 சேர் |
| தேவதாளிச் சாறு | 4 " |
| பசுவின் பால் | 2 படி |
| பசுவின் நெய் | 1 " |

*செய்முறை*

இவைகளை ஒன்று கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் 2 வராகன் எடை எடுத்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சயரோகம் தீரும். மலடிகளுக்கும் குழந்தைகள் உண்டாகும்.

## 34. அமுக்கராக் கிழங்காதி நெய்

*சரக்கு*

அமுக்கராக் கிழங்கு 100 பலம் இடித்து அதனுடன்
சங்கம் வேர்
சாறணைக் கிழங்கு
நெருஞ்சி
வில்வ வேர்
பேராமல்லிவேர்
முன்னை வேர்
சிறுவழுதுணை வேர்
சீந்தில் விழுது

செவ்வியம்
சுத்திசெய்த சிவதை வேர்
மிளகரணை
பெருங்குமிழ்வேர்
சிற்றாமல்லிவேர்
பெருவாகைவேர்
பாதிரிவேர்
செந்நெல்
தண்ணீர்விட்டான் கிழங்கு

*செய்முறை*

இவகைளை வகைக்கு 10 பலம் எடுத்துக் கல்லுரலில் விட்டு ஒன்றிரண்டாக இடித்து 8 மரக்கால் சுத்த நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி, 1 மரக்கால் ஆகும் வரை வற்றக் காய்ச்சவும். குடிநீரை வடிகட்டி அதனுடன் பசுவின் நெய் 4 படி (5 சேர்) சேர்க்கவும்.

தாழை
அதிமதுரம்
குங்குமப்பூ
சிற்றரத்தை
தேவதாரு
காட்டு மிளகு
கடுகுரோகணி
சமுத்திராப்பச்சை
சந்தனத்தூள்
இலவங்கப்பட்டை
மரமஞ்சள் தோல்
கற்பூரம்
சுக்கு
மிளகு

தான்றித்தோல்

வெங்காரம்

தேட்கொடுக்கு வேர்

சூரிய பத்திரி

கொடிவேலிவேர்

வெட்பாலை அரிசி

தகரைவிதை

விழலரிசி

எவச்சாரம்

அகிற்கட்டை

சத்திச்சாரம்

கஸ்தூரிமஞ்சள்

திப்பிலி மூலம்

திப்பிலி

கடுக்காய்த்தோல்

நெல்லிமுள்ளி

இந்துப்பு

இச்சரக்குகளை வகைக்கு 4 வராகன் எடை வீதம் எடுத்துச் சூரணித்து மேற்படி குடிநீர் விட்டு நன்றாக அரைத்து, குடிநீர் கூட்டிய நெய்யுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி 4 நாட்கள் மந்தாக்கினியாய் எரிக்கவும். 5-ஆவது தினத்தன்று நெய்யைப் பக்குவப்படுத்தி இறக்கி வடிகட்டிக்கொள்ளவும். இந் நெய்யுடன் திப்பிலிச் சூரணம் 8 பலம், காந்தப் பற்பம், தாமிரப் பற்பம் இவைகள் வகைக்கு 2 பலமும் சேர்த்துக் கொள்ளவும். பின்பு தேன் 2 1/2 சேர் விட்டுக் குழப்பி ஒரு பழகிய பானையில் இட்டு நன்றாக மூடி 1 மாதம் வரை நெல்லிற்குள் புதைத்துவைக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யை இரண்டு வராகன் எடை அளவு தினமும் உட்கொண்டால், ஐய நோய்கள் தணியும்.

## 35. நிலப்பனை நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| நிலப்பனைக் கிழங்குச் சாறு | 1 படி |
| பூசணிக்காய்ச் சாறு | 1 " |
| வெள்ளாட்டுப் பால் | 2 " |
| இளநீர் | 2 " |
| கருப்பஞ் சாறு | 2 " |
| ஆடாதோடைச் சாறு | 2 " |
| நெல்லிக்காய்ச் சாறு | 2 " |
| தண்ணீர்விட்டான் கிழங்குச் சாறு | 2 " |
| பசுவின் நெய் | 6 " |

இவைகளை ஒன்றுகலந்து

பேரீச்சம்பழம்
சந்தனத்தூள்
தக்கோலம்
கோரைக் கிழங்கு
சீரகம்
கொத்துமல்லி விதை
தாமரைவளையம்
அதிவிடையம்
மாதுளம்பிஞ்சு
கச்சோலம்
கடுகுரோகணி
ஓமம்

*செய்முறை*

ஆகிய சரக்குகள் வகைக்கு $1^1/_4$ வராகன் எடை எடுத்துச் சூரணித்துச் சாறுகள் கூட்டிய நெய்யில் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய் ஆறியவுடன் தேன் 2 படி விட்டுக் குழப்பிக் காலை வேளைகளில் 3 வராகன் எடை அருந்திவரவும்.

*தீரும் நோய்*

சயம், இரத்தப் பித்தம், காமாலை முதலியவைகள் நீங்கும்.

## 36. நெல்லிக்காய்ச் சாறாதி நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| நெல்லிக்காய்ச் சாறு | $^1/_2$ படி |
| சீந்தில் சர்க்கரை | 1 உழக்கு |
| சீதேவிச் செங்கழுநீர்ச் சாறு | 1 படி |
| ஆவாரையிலைச் சாறு | 1 " |
| பசுவின் பால் | 1 உழக்கு |
| தாய்ப் பால் | 1 படி |
| கையாந்தகரைச் சாறு | 1 " |

இவைகளை ஒன்று கூட்டிக் கொள்ளவும்.

நீர்ப்பூலா வேர்
சிறுகீரை வேர்
இலாமிச்சை வேர்
தண்ணீர்விட்டான் கிழங்கு
எழுத்தாணிப்பூண்டு
கோஷ்டம்
சண்பகப்பூ
கோரோசனை
மான்கொம்பு
அதிமதுரம்
பொன்னாங்காணி வேர்
வெட்டிவேர்

சிற்றாமணக்கு வேர்
நிலப்பனைக் கிழங்கு
ஏலக்காய்
கிராம்பு
சீரகம்
செஞ்சந்தனம்
நாகப்பூ

இவைகள் வகைக்கு $^1/_2$ பலம்.

*செய்முறை*

மேற்கூறிய சரக்குகளைச் சிறுசிறு துண்டுகளாக்கிப் பசுவின் பால் விட்டு ஊறவைத்து நன்றாக அரைத்து, முன் சொல்லிய சாறுகளுடன் கூட்டி, நல்லெண்ணெய் 10 சேர் விட்டு அடுப்பின் மேலேற்றிப் பதத்தில் வடித்து இறக்கவும். மறுநாள்

பச்சைக் கற்பூரம்
சமுத்திராப்பச்சை

இவ்விரண்டையும் வகைக்கு 1 வராகன் எடை எடுத்துத் துணியிலிட்டு முடிச்சாக்கி, எண்ணெயுடன் சேர்த்துக் கசக்கிப் பிழியவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் தலை முழுகிவர, சயரோகம் முதலான பற்பல நோய்கள் தீரும்.

*பத்தியம்*

பூசணிக்காய், புளி, மோர் நீக்கிவிடவும்.

### 37. புளியாரைச் சாறாதி நெய்

*சரக்கு*

புளியாரைச் சாறு
கீழாநெல்லிச் சாறு
பூசணிக்காய்
நெல்லிக்காய்

பேயன்வாழை

தண்ணீர்விட்டான் கிழங்கு

இவைகளை இடித்துப் பிழிந்த சாறு வகைகள் தனித் தனியே 1 படி (1 $^{1}/_{4}$ சேர்).

| | |
|---|---|
| இளநீர் | 1 படி |
| பசுவின் பால் | 1 " |

இதனுடன்

குமிழக் கிழங்கு

நிலப்பனைக் கிழங்கு

சிற்றாமுட்டி வேர்

வில்வ வேர்

இலவம் பிசின்

பூவினப்புல்லுருவி

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு ஒன்றிரண்டாக இடித்து, 4 மரக்கால் சுத்த நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றக் காய்ச்சவும். சாறு வகைகளுடன் இக் குடிநீரைச் சேர்த்துப் பசுவின் நெய் 1 படிவிட்டு

ஏலக்காய்

அதிமதுரம்

இலுப்பைப்பூ

நீர்ச்சுண்டி

திராட்சைப்பழம்

பூமிச்சர்க்கரைக் கிழங்கு

பேரீச்சம்பழம்

கூகைநீறு

சுக்கு

இலவங்கப்பத்திரி

அமுக்கராக் கிழங்கு

நாயுருவி விதை

கிராம்பு

இவைகள் வகைக்கு $2^{1}/_{2}$ வராகன் எடையும்

சுக்கு, திப்பிலி

இவை வகைக்கு 2 பலம் வீதம் எடுத்துச் சூரணித்துக் கொண்டு, சாறு கூட்டிய நெய்யுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து வடிக்கவும். இந்நெய்யுடன் சர்க்கரையும், தேனும் வேண்டிய அளவு சேர்த்துக் கொள்ளவும். இதனை ஒரு பழகிய பாண்டத்தில் வைத்து மூடி, நெற்குவியற்குள் 2 வாரம்வரை புதைத்து வைக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் 3 கழஞ்சு அளவு எடுத்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

பாண்டுநோய், அதிசாரம், சன்னி, பித்தம், காமாலை, மயக்கம் ஆகியவைகள் தீரும். பெண் மலட்டிற்கு இம்மருந்தைச் சாப்பிட மகப்பேறு உண்டாகும். ஆண்கள் இதனை உட்கொண்டுவரத் தாது விருத்தி உண்டாகும்.

**38. சங்கங்குப்பி வேராதி நெய்**

*சரக்கு*

சங்கங்குப்பி வேர்

சாறணை

வில்வம்

சிற்றாமல்லி வேர்

பெருவாகை

சிறுவழுதுணைவேர்

சீந்தில் தண்டு

செவ்வியம்

உளுந்து

பிரண்டை

முன்னை

பாதிரிவேர்
சுத்தி செய்த சிவதைவேர்
பேராமல்லிவேர்
பெருங்குமிழ்வேர்
நெருஞ்சில் வேர்
கண்டங்கத்தரி
செந்நெல்
தண்ணீர்விட்டான் கிழங்கு

*செய்முறை*

இவைகளை வகைக்கு 10 பலம் வீதம் எடுத்து நறுக்கிக் கல்லுரலில் இட்டு நன்றாக இடித்து 8 மரக்கால் நீர் விட்டு அடுப்பின் மேலற்றி, 1 மரக்கால் குடிநீர் ஆகும் வரை வற்றவைத்து வேறொரு பாத்திரத்தில் வடிகட்டவும். இதனுடன் 4 படி நெய் விட்டு,

அதிமதுரம்
சுக்கு
திப்பிலி
தேட்கொடுக்குப் பூண்டு
நெல்லிவற்றல்
வெட்பாலை அரிசி
மரமஞ்சள் தோல்
சத்திச்சாரம்
தேவதாரம்
கண்டத்திப்பிலி
அகில் கட்டை
கோஷ்டம்
கற்பூரம்
கஸ்தூரி மஞ்சள்
விழலரிசி

கடுகுரோகணி

மிளகு

எருக்கிலை

கடுக்காய்த் தோல்

தான்றித் தோல்

மஞ்சள்

சிற்றரத்தை

எவச்சாரம்

தகரம்

தாழை விழுது

சந்தனத்தூள்

குங்குமப்பூ

சமுத்திராப்பச்சை

இலவங்கப்பட்டை

உப்பு

இவைகளை வகைக்கு 4 வராகன் எடை வீதம் எடுத்துச் சூரணித்து முன்சொன்ன நெய்க்கலவையுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி 5 நாட்கள் வரை சிறு கொதியிட்டு எரித்து, 6-ஆவது நாளன்று பக்குவப்படுத்தவும்.

இதனுடன்

காந்தப்பற்பம் 1 பலம்

தாமிரப்பற்பம் 1 பலம்

திப்பிலிச்சூரணம் 8 பலம்

சேர்த்துக் குழப்பிக்கொள்ளவும். பின்பு சுத்தமான தேன் 2 படியும் கூட்டி ஒரு புதுப் பாத்திரத்தில் வைத்து நன்றாக மூடி நெற்குவியலுள் வைத்து விடவும். ஒரு மாதம் சென்ற பின்னர் இதனை எடுக்கவும்.

*பயன்பாடு*

2 வராகன் எடை அளவு காலை நேரத்தில் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

பீலிகை, இரத்தப் பித்தம், சூலை, சுவாசம், அரோசகம், கபநோய் முதலானவை தீரும்.

## 39. *முயல் நெய்*

*சரக்கு*

1. காலும் தலையும் தோலும் குடலும் போக்கிய முயல் மாமிசம் எலும்பு உட்பட ஒரு வீசை எடுத்துக் கல்லுரலில் போட்டு எலும்பு நொறுங்க இடித்து ஒரு மட்பாண்டத்தில் போட்டு 12 படி நீர் விட்டு, 2 படியாகச் சுண்டக்காய்ச்சி வடித்துக்கொள்ளவும்.

2. பெருங்குமிழை

   முன்னை

   வாகை

   கண்டங்கத்தரி

   சிற்றாமுட்டி

   பேராமுட்டி

   வில்வ வேர்

   நெருஞ்சி வேர்

   பாப்பாரமுள்ளி

   தூதுவளை

   அமுக்கராக்கிழங்கு

   சங்கம் வேர்

   திப்பிலி

   மிளகு

   மஞ்சள்

   தேவதாரு

   பேரரத்தை

   தாளிசப் பத்திரி

ஆகப் பதினெண் சரக்கையும் பஞ்சுபோல் இடித்து 16 படி நீர் விட்டு இரண்டு படியாகச் சுண்டக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

3. திப்பிலி
மோடி
சுக்கு
கற்கடகசிங்கி
சித்திரமூலம்
சிறுதேக்கு
குரோசாணி ஓமம்
செவ்வியம்
கறுஞ்சீரகம்
சீரகம்
கடுகுரோகணி
மிளகு
கோஷ்டம்
இந்துப்பு
வாலுளுவை அரிசி
திராட்சை
ஏலம்
அதிவிடயம்
சிற்றரத்தை
யானைத் திப்பிலி

வகைக்குச் சூரணம் பலம் 1/4 எடுத்து அம்மியில் இட்டு, வெள்ளாட்டுப் பாலால் நன்றாய் அரைத்து, இரண்டு படி வெள்ளாட்டுப் பாலில் கலக்கி வைத்துக் கொள்ளவும்.

4. ஆடாதோடைச் சாறு படி-4, ஆவின் நெய் படி-2.

*செய்முறை*

இங்ஙனம் நான்கு அங்கங்களிலும் முடிக்கப்பெற்றவைகளை ஒருமிக்கச் சேர்த்துப் பெரும் பாண்டத்தில் விட்டு வெயிலில் 3 நாள் வைத்துப் பதமாகக் காய்ச்சி வடிக்கவும்.

*பயன்பாடு*

தினம் இரு நேரம் 1 கழஞ்சு நெய்யுடன். $^1/_2$ கழஞ்சு நல்ல தேனைக் கூட்டி, வறுத்த திப்பிலிச் சூரணம் சிறிது சேர்த்து மத்தித்துச் சாப்பிடவும்,

*தீரும் நோய்*

கப சம்பந்தமான சயம், காசம், ஈளை முதலிய நோய்கள் யாவும் குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்திய விதியைக் கவனிப்பதுடன் முயல், கவுதாரி, உள்ளான், உப்புக்கண்டம் முதலியவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம்.

## 40. முயல் நெய் (வேறு முறை)

*சரக்கு*

ஆண் முயல் ஒன்றும், பெண் முயல் ஒன்றும் கொண்டு வந்து தலை, கால், குடல் இவைகளை நீக்கிவிட்டு அப்படியே சிறுசிறு துண்டுகளாக நறுக்கி இடித்து ஒரு பானையில் போட்டு, 4 மரக்கால் சுத்த நீர் விட்டு ஒரு மரக்காலாகும் வரை வற்றக் காய்ச்சவும். பின்பு மாமிசத்தைத் துணியில் வைத்து நன்றாகப் பிழிந்து வைத்துக் கொண்டு அக் குடிநீருடன்

பசுவின் பால் 1 படி

பசுவின் நெய் 1 படியும்

கலந்து கொள்ளவும்.

சிறுவழுதுணை வேர்

ஆடாதோடை வேர்

இம்புராச் சமூலம்

தூதுவளை வேர்

சிற்றாமுட்டி

*செய்முறை*

முதலான சரக்குகளை வகைக்கு 30 பலமாக எடுத்துக் கொண்டு இடித்து, 8 மரக்கால் சுத்த நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி, 2 மரக்காலாகச் சுண்டவைக்கவும். இக்குடிநீரையும் மாமிசக் குடிநீருடன் சேர்த்துக் கொள்ளவும். பின்பு

மரமஞ்சள், கிராம்பு, கற்கடகசிங்சி, தேவதாரு, விழலரிசி, ஆடாதோடை வேர், வெட்பாலை அரிசி, குக்கில், யானைத்திப்பிலி, தூதுவளைவேர், சதகுப்பை, வெளிச்சைப்பிசின், சிறுதேக்கு, வேங்கைவைரம் இவைகள் வகைக்கு 5 வராகன் எடை.

சுக்கு

திப்பிலி

மிளகு

இந்துப்பு

இவைகள் வகைக்கு 1 பலம்.

சாதிக்காய் 10 (எண்ணிக்கையில்).

கடுக்காய்த் தோல்

தான்றிக்காய்

நெல்லிக்காய்

வகைக்கு 30 பலமும் எடுத்து எல்லாவற்றையும் கல்லுரலில் இட்டு இடித்து ஆடாதோடைச் சாறு விட்டு நன்றாக அரைத்து, முன்கூட்டிய நெய்யுடன் சேர்த்துப் பசுவின் பால் 2 மரக்கால் விட்டு அடுப்பின் மேலேற்றி, எரித்துப் பதத்தில் வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் 3 கழஞ்சு அளவு எடுத்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

ஈளை, இருமல் முதலானவை தீரும். இந்நெய்யை உட்கொள்ளுவதற்கு முன் பேதிக்குச் சாப்பிடுதல் வேண்டும்.

## 41. கண்டங்கத்தரி வேராதி நெய்

*சரக்கு*

கண்டங்கத்தரி வேர்

கையாந்தகரை

சுழலாவாரை

ஆடாதோடை வேர்

இவைகள் வகைக்கு $1\ ^1/_4$ வராகன் எடை.

முருங்கை வேர்

கொடி வேலி வேர்

இவ்விரண்டும் வகைக்கு 5 வராகன் எடை.

*செய்முறை*

இவைகளை ஒன்றிரண்டாக இடித்து 8 மடங்கு நீர் விட்டு, ஒரு படியாகும்வரை வற்றவைக்கவும். இதனுடன் நெய் ஒரு படியும் சேர்த்து அதனுடன்

சவுக்காரம்

திப்பிலி

இந்துப்பு

பெருங்காயம்

வாலுளுவையரிசி

ஓமம்

யானைத்திப்பிலி

சீரகம்

பிஞ்சுக்கடுக்காய்

செவ்வியம்

கறுஞ்சீரகம்

இவைகளை வகைக்கு $2\ ^1/_2$ வராகன் எடை அளவு எடுத்துச் சூரணித்துப் போட்டு ஒன்று கலந்து அடுப்பின் மேலேற்றி ஒரே சீராக எரித்துப் பதத்தில் வடிக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யில் தினந்தோறும் $3\ ^3/_4$ வராகன் எடை அளவு எடுத்துக் காலையில் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

மேல்முச்சு, இளைப்பு, சத்திகுன்மம், சயம், இருமல் இவைகள் தீரும்.

## 42. நெய் வாழைப்பழம்

பசுவின் நெய் ஒரு படியுடன் மொந்தன் வாழைப்பழம் மூன்றைத் தோலுரித்துப் போட்டு ஒரு நாள் முழுதும் ஊறவைத்து, மறுநாள் வாழைப்பழத்தைத் தின்றுவிட்டு, அந்நெய்யைக் கழுத்துக்குக் கீழே உடம்பில் நன்றாகப் பூசவும். இவ்வாறு 3 நாட்கள் செய்ய சயமும் வறட்சியும் போகும்.

## 43. நெல்லியாதி நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| பசுவின் நெய் | 1 படி |
| நெல்லிக்காய்ச் சாறு | $^1/_2$ " |
| பாலைப்பழச் சாறு | $^1/_2$ " |
| நாரத்தைப் பழச் சாறு | $^1/_2$ " |
| யானை நெருஞ்சிச் சாறு | $^1/_2$ " |
| ஓரிலைத் தாமரைச் சாறு | $^1/_2$ " |
| பழம்பாசிச் சாறு | $^1/_2$ " |

இவைகளை ஒன்று கலந்து கொண்டு, இவற்றுடன்

சீரகம்

சாதிக்காய்

இவ்விரண்டும் வகைக்கு 2 பலம்

| | |
|---|---|
| சிற்றரத்தை | $^1/_8$ பலம் |
| கோஷ்டம் | $^1/_4$ " |
| செங்கழுநீர் | $^1/_4$ " |
| வெட்பாலையரிசி | $^1/_4$ " |
| கடுகுரோகணி | $^1/_4$ " |
| திப்பிலி | $^1/_4$ " |
| தூதுவளம்பழம் | 1 சிறங்கை |

*செய்முறை*

இவைகளை ஒன்றிரண்டாக இடித்து இளநீர் 5 சேருடன் குழப்பி, பசுவின் பால் 4 படியும், சிற்றாமணக்கெண்ணெய் ஒரு படியும் சேர்த்துக் கலந்து சூரியபுடம்

இடவும். ஐந்தாறு நாட்கள் சென்ற பின்னர் இதை அடுப்பின் மேலேற்றிச் சிறுகச் சிறுகக் கொதிக்க வைத்து, நெய் வெளியே தெளிந்து வரும் பதம்கண்டு மேலிருந்து இறக்கி வடி கட்டிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்த நெய்யில் ஒரு சிறு கரண்டி அளவு எடுத்துத் தினம் 2 வேளை உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

7 நாட்களுக்குள் கை, கால், உடம்பு எரிச்சல், வறட்சி, மயக்கம் முதலானவைகள் தீரும்.

*பத்தியம்*

உப்பு, புளி, கசப்பு முதலான சுவையுள்ள பதார்த்தங்களை நீக்கி, பசுவின் நெய், பால் இவைகளைக் கூட்டவும்.

### 44. துளசி நெய்

*சரக்கு*

துளசிச் சாறு
செம்முள்ளிச் சாறு
தூதுவளைச் சாறு
ஆடாதோடைச் சாறு
செருப்படைச் சாறு
பொடுதலைச் சாறு
கையாந்தகரைச் சாறு
பொன்னாவாரைச் சாறு
முருங்கிலைச் சாறு

இவைகள் வகைக்கு 2 படி வீதம் எடுத்துப் பசுவின் நெய் 1 படியும் (5 சேர்) விட்டு ஒன்றாகக் குழப்பிக் கொண்டு

கோஷ்டம்
கற்கடகசிங்கி
கார்போகவரிசி

செவ்வியம்

சங்கம் வேர்

தான்றித் தோல்

திப்பிலி

ஓமம்

இந்துப்பு

தூதுவளை வேர்

வாலுளுவையரிசி

பூலாங் கிழங்கு

அமுக்கராக் கிழங்கு

ஏலக்காய்

இம்புராவேர்

வசம்பு

நன்னாரி வேர்

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 1/4 வராகன் எடை வீதம் எடுத்து ஒன்றிரண்டாக இடித்து, ஆட்டுப்பால் விட்டு நன்றாக அரைத்துச் சாறு கூட்டிய நெய்யுடன் ஒன்று கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்து மெழுகு பதத்தில் இறக்கவும். இதனை வடிகட்டிப் பழகிய மட்பாண்டத்தில் பத்திரப்படுத்தி, வேண்டும்போது 1 $^{1}/_{4}$ வராகன் எடை நெய்யுடனே சிறுது தேன் விட்டு ஒன்று கலந்து சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல், சயரோகம், காசம் முதலான நோய்கள் தீரும்.

## 45. பிரம்ம நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| பசுவின் நெய் | 16 பலம் |
| பிரமிச்சாறு | 16 " |
| சுக்கு | |
| மிளகு | |

நெல்லி வற்றல்

மஞ்சள்

கடுக்காய்த்தோல்

தான்றித்தோல்

சீரகம்

இந்துப்பு

*செய்முறை*

இவைகள் வகைக்கு 1/2 பலம் வீதம் எடுத்து இடித்துச் சூரணம் செய்து மேலே சொல்லிய சாறு கூட்டிய நெய்யுடனே குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துச் சாறு வகை சுண்டியபின் இறக்கவும்.

*பயன்பாடு*

ஒரு எலுமிச்சை அளவு எடுத்துப் பாலுடன் உட்கொள்ளவும். வீரிய விருத்தி உண்டாகும்.

## 46. வாசாதி நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| ஆடாதோடைச் சமூலம் | 24 பலம் |
| தண்ணீர் | 1 பதக்கு |

சேர்த்துக் குடிநீராகக் காய்ச்சி எட்டில் ஒன்றாகக் குறுக்கி வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும். இத்துடன்

நெய்

சுக்கு

திப்பிலி

செவ்வியம்

சடாமாஞ்சில்

தேவதாரு

கடுக்காய்

நெல்லிக்காய்

தான்றிக்காய்

நெருஞ்சி
மஞ்சள்
முந்திரிகை
இந்துப்பு
முத்தக்காசு
விழலரிசி
கறுஞ்சீரகம்
சீரகம்
அசுவகந்தி
கொடிவேலி வேர்
கற்கடகசிங்கி
கோஷ்டம்
வெங்காரம்
பறங்கிச் சக்கை

வகைக்கு 3 கழஞ்சு.

*செய்முறை*

கடைச் சரக்குகளைச் சூரணித்துக் கலந்து காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

மூலம், சயம்.

## 47. சம்பகணமந்தக நெய்

*சரக்கு*

சீதேவிச் செங்கழுநீர்
முசுமுசுக்கை
கண்டங்கத்தரி
சிறுவழுதுணை
சிறுமல்லி

பெருமல்லி

நெருஞ்சி

வில்வம்

பெருங்குமிழ்

தழுதாழை

பாதிரி

வாகை

ஆகியவற்றின் சாறு வகைக்கு 1 குறுணி.

நெய் 1 "

பால் 1 "

இளநீர் 4 படி

தண்ணீர்விட்டான் நீர் 4 "

வெட்டிவேர்

விலாமிச்சை வேர்

இலுப்பைப்பூ

ஏலக்காய்

அதிமதுரம்

கோஷ்டம்

இலவங்கம்

இலவங்கப் பத்திரி

பேரீட்சை

முந்திரிகை

சந்தனம்

நெல்லிக்காய்

பற்பாடகம்

ஆகியவை வகைக்கு 1 பலம்.

*செய்முறை*

வெட்டிவேர் முதலிய கற்கச் சரக்குகளைப் பாலில் கற்கமாக அரைத்துக்கொண்டு, சாறு மற்றும் நெய் வகைகளுடன் கலந்து எரித்துப் பதத்தில் வடித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

வெப்பு, காமாலை, சோபை, பித்தப்பாண்டு, மகோதரம், உள்மாந்தம், மலக்கட்டு, ஐய நோய்கள் தீரும்.

## 48. அசுவகந்தாதி நெய்

*மூலிகைச் சரக்கு*

அசுவகந்தி, பேராமல்லி வேர், சிற்றாமல்லி வேர், நன்னாரி, தண்ணீர்விட்டான், பேராமுட்டி, நெருஞ்சி வேர் வகைக்கு 1 பலம். தண்ணீர் 8 படி.

வேர்களை ஒன்றிரண்டாக இடித்து நீருடன் கலந்து எரித்து எட்டிலொன்றாகச் சுண்டக் காய்ச்சி வைத்துக்கொள்ள வேண்டும்.

பால், நெய், வகைக்கு 4 படி.

*கற்கச் சரக்கு*

கொத்துமல்லி
சிறுதேக்கு
கச்சோலம்
செவ்வல்லி
சுக்கு
மிளகு
திப்பிலி
சடாமாஞ்சில்
வாய்விளங்கம்
ஏலம்
இலவங்கப்பட்டை
இலவங்கப்பத்திரி
சிறுநாகப்பூ

சரளதேவதாரு

கடுகுரோகணி

இவைகள் வகைக்கு 1 பலம்.

*செய்முறை*

இவற்றை இடித்துச் சூரணித்துப் பின் பால் விட்டுக் கற்கமாக அரைத்து ஏனைய குடிநீர், நெய், பால் இவற்றுடன் கலந்து காய்ச்சி, வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

சுரங்கள், விடப்பாண்டு, சீதச்சுரம், காசம், மேலிளைப்பு, விடச்சுரம், சுவாசம் ஆகியவை நீங்கும்.

**49. வல்லாரை நெய்**

*சரக்கு*

100 பலம் வல்லாரை இலையை ஒரு மண் சட்டியில் போட்டு, 8 படி நீர் ஊற்றி அடுப்பில் இட்டு எரித்து, எட்டில் ஒன்றாகக் குறுக்கி வடித்து, அதில் ஆவின் நெய் ஒரு படி ஊற்றி, பின்

சுக்கு

ஏலம்

கலைக்கொம்பு

சாதிக்காய்

தாளிசம்

சாதிப்பத்திரி

கோஷ்டம்

விலாமிச்சம் வேர்

வெட்டிவேர்

சீரகம்

தான்றிக்காய்

தக்கோலம்

சந்தனம்

வெங்காரம்

வில்வம்

அக்கிராகாரம்

கொத்துமல்லி விதை

கடுகுரோகணி

வகைக்கு 1 வராகன் எடை.

*செய்முறை*

இவைகளைப் பொடித்து ஒரு படிப் பசும்பால் விட்டு அரைத்து மேற்படி வல்லாரைக் குடிநீர், நெய் சேர்த்துக் கலந்து ஒரு பாத்திரத்தில் இட்டு அடுப்பேற்றி சிறு தீயில் எரித்து வடித்து ஒரு பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

பொட்டுக்கரண்டி அளவு இரு வேளை உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

தொந்த மாந்தம், போர் மாந்தம், மேகம், காசம், நாட்பட்ட ஈளை, இரைப்பு, மூலகணம், உட்சுரம், வாந்தி இருமல், சுவாசம், சுரம் ஆகியவை தீரும்.

*குறிப்பு*

கலைக்கொம்பைவிட பற்பத்தைச் சேர்ப்பதே சிறப்புடையது.

## 50. சேங்கொட்டை நெய்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தித்த சேங்கொட்டை

ஐந்து பலத்தைச் சிறு துண்டுகளாக வெட்டி, உட்பருப்பை நீக்கி, ஒரு படி பசுவின் பாலை மூன்று பங்காக்கி ஒரு பங்கில், கொட்டை இட்டுக் காய்ச்சி எடுத்து, மற்ற இரு பங்கிலும் தனித்தனியே இவ்விதம் காய்ச்சி, காய்ச்சி எடுத்தப் பாலுக்குச் சம எடை பசுவின் நெய் சேர்த்து, நெய் பதம் வரும்வரை காய்ச்சவும்.

*பயன்பாடு*

காசெடை வீதம் காலை மாலை இருவேளை கொடுத்துவரவும்.

*தீரும் நோய்*

தோல் சம்பந்தமான பற்பல நோய்களும், காசம், சுவாசம், சயம் முதலியவைகளும் நீங்கி, உடல் பலமடையும்.

*பத்தியம்*

புளியை நீக்குதல் வேண்டும்.

## 51. ஏலாதி நெய்

*சரக்கு*

1. அத்திமரப்பட்டை
அரசமரப்பட்டை
ஆலமரப்பட்டை
இத்திமரப்பட்டை

வகைக்குப் பலம் -20.

2. அதிமதுரம்
சந்தனம்
தாமரை வளையம்
வெள்ளறுகு வேர்
சிறுநாகப்பூ
இலவங்கப்பத்திரி
நாணல்
அல்லிக்கிழங்கு
அரசமரக்குச்சி
ஏலம்
கோஷ்டம்
இலுப்பைப்பூ
செங்கழுநீர்க் கிழங்கு
பேரீச்சங்காய்
சண்பகப்பூ

கிச்சிலிக் கிழங்கு
நன்னாரி வேர்
அசுவகந்தி
ஆலங்குச்சி

வகைக்குச் சமம்.

| | | |
|---|---|---|
| 3. | தாழைவிழுதுச் சாறு | 2 படி |
| | வெள்ளறுகுச்சாறு | 2 " |
| | பசுவின் நெய் | 2 " |

*செய்முறை*

முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட நான்கு பட்டைகளை 50-வருடத்திற்கு மேற்பட்ட மரமாகப் பார்த்துச் செவ்வேரிய பட்டையாக எடுத்துப் பஞ்சுபோல் நசுக்கிப் பெரிய மட்பாண்டத்தில் போட்டு 16 படித் தண்ணீர் விட்டு, அடுப்பிலேற்றிச் சிறுக எரித்து இரண்டு படி அளவிற்குச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ளவும். இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட பத்தொன்பது சரக்குகளையும் சிறிது இடித்துப் பசுவின் பால் விட்டு மெழுகுபதமாக அரைத்து வழித்து எடுத்து, மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்டச் சாறுகளுடன் கலந்து, பாண்டத்தில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாகத் தினம் 2-3 மணிநேரம் எரித்து, நான்காவது நாள் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்த ஏலாதி நெய்யை வேளைக்கு 1-2 தேக்கரண்டி அளவு தினம் இரு வேளை கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

ஈளை, எலும்புருக்கி, பித்தவறட்சி, காசம், உளைமாந்தை ஆகியன தீரும்.

*பத்தியம்*

புளி தள்ளி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 52. சதாவரி நெய்

*சரக்கு*

தண்ணீர்விட்டான் கிழங்குச் சாறு 1 சேர்

| | | |
|---|---|---|
| பசுவின் நெய் | 1 | சேர் |
| பசுவின் பால் | 10 | " |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | $^1/_4$ | " |

*செய்முறை*

முதலில் தண்ணீர்விட்டான் கிழங்கை அம்மிக்கல்லில் வைத்து மெழுகு போல் அரைத்து வழித்து ஒரு நெய்ப் பாண்டத்தில் போட்டு, மிகுதியுள்ள திரவங்களை விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு இந்த நெய்யை 2-3 தேக்கரண்டி அளவு காலை, மாலை இரு பொழுது கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

நீர்க்கடுப்பு,நீர்ச்சுருக்கு, எலும்புருக்கி, மேகசுரம், கை, கால் எரிவு நீங்கும். தேக பலம், தாதுவிருத்தி உண்டாகும்.

## 53. கண்டங்காரி நெய்

*சரக்கு (1)*

| | | |
|---|---|---|
| கண்டங்கத்தரி சமூலம் | 32 | பலம் |
| வில்வ வேர் | 1 | " |
| அமுக்கராக் கிழங்கு | 1 | " |
| ஆடாதோடை வேர் | 1 | " |
| சங்கம் வேர் | 1 | " |
| சிறுவழுதுணை வேர் | 1 | " |
| பேய்ப்புடல் | 1 | " |

*சரக்கு(2)*

தாளிசப் பத்திரி

மிளகு

செவ்வியம்

இவைகள் வகைக்கு கழஞ்சு 3.

ஏலம்

இலவங்கப்பத்திரி

இலவங்கப்பட்டை

திப்பிலி

விலாமிச்சம் வேர்

சிறுநாகப்பூ

சடாமாஞ்சில்

கற்கடகசிங்கி

இவைகள் வகைக்குக் கழஞ்சு -1.

*சரக்கு (3)*

| | |
|---|---|
| ஆவின் பால் | 1 படி |
| ஆவின் நெய் | 1 " |
| கல்யாணப் பூசணிச் சாறு | 1 " |

*செய்முறை*

முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளை நன்கு இடித்து ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு 16 படி தண்ணீர் விட்டு அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாக எரித்து 2 படி அளவிற்குச் சுண்டின சமயம் வடிகட்டி வைத்துக் கொள்ளவும். இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளை இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லில் வைத்து ஆவின் பால் விட்டு மெழுகு போல் அரைத்து ஒரு நெய்ப் பாண்டத்தில் போட்டு முன் சித்தப்படுத்திய கியாழத்தை விட்டுக் கரைத்து, மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட திரவங்களைக் கூட்டி அடுப்பில் ஏற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடிகட்டி அதில் திப்பிலியையும் பேரீச்சங்காயையும் வகைக்கு மூன்று கழஞ்சு வீதம் இடித்துப் பொடிசெய்து போட்டு வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்த நெய்யை வேளைக்கு 2 அல்லது 3 தேக்கரண்டி அளவு தினம் 2 வேளை கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

உளைமாந்தை, சுவாசகாசம், ஈளை, இருமல், சயம் முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 54. தாய்ப் பால் நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| பொன்னாங்காணி வேர் | 2 கழஞ்சு |
| வெள்ளரி வித்து | 2 " |
| பூசணிவித்து | 2 " |
| நெல்லி வற்றல் | 2 " |
| அதிமதுரம் | 2 " |
| தாய்ப்பால் | 2 " |
| ஆவின் நெய் | 1 படி |

*செய்முறை*

மேற்கூறப்பட்ட சரக்குகளைத் தாய்ப் பால் விட்டு நெகிழ அரைத்து, ஒரு நெய்ப் பாண்டத்தில் போட்டு, ஆவின் நெய்யை விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக்கொள்ளவும்.

*தீரும் நோய்*

உட்சூடு, தேகமெலிவு, எலும்புருக்கி, கணச்சூடு, பிரமேகம், வெட்டை முதலியவைகள் குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 55. கறிப்புலவு நெய்

அதிகமாகச் செலவிட்டுச் செய்யும் கறிப்புலவிலிருந்து பிழிந்தெடுத்த நெய்யைச் சுமார் 1-பலம் சேகரித்து வைத்துக்கொண்டு நாசித் துவாரங்களின் வழியாய் 2,3 துளிகள் தினம் இரு வேளை விட்டுக்கொண்டுவர, 20 நாட்களில் எத்தகையப் பீனிச நோயும் குணமாகும். மேலும் மேக சம்பந்தத்தாலான நாசி விரணங்களையும் குணப்படுத்தும். மகம்மதியர் பண்டிகை காலங்களில் செய்யும்போது அவர்கள் மூலமாக நெய் பெறுவது எளிதும் நல்லதுமாகும்.

## 56. சம்பு நெய்

*சரக்கு*

25 பலம் நாவற்பட்டையைச் சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சுபோல் இடித்து, 4 படி நீர் விட்டு, அரைப்படியாகச் சுண்டக்காய்ச்சி வடித்த குடிநீர், ஏலம், இலவங்கப்பட்டை, கற்கடகசிங்கி, காட்டாத்திப்பூ, காய்ச்சுக்கட்டி, மரமஞ்சள், சீரகம், சிறுநாகப்பூ, அதிமதுரம், கோஷ்டம், விளாம்பிசின் இவைகளின் சூரணம் வகைக்குப் பலம் $^1/_2$. அபினி பலம் $^1/_4$.

*செய்முறை*

இங்கு கூறப்பட்ட கற்கங்களைக் குடிநீரில் நெகிழ அரைத்து, மிகுதியுள்ள குடிநீரால் கரைத்துப் பசுவின் நெய் 1/2 படி சேர்த்துப் பதமுறக் காய்ச்சிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு அரை அல்லது ஒரு கரண்டி அளவாகக் காலை மாலை கற்கத்துடன் உட்கொண்டுவர பெரும்பாடு, எலும்புருக்கி, மதுமேகம், நீரிழிவு முதலியன குணப்படும்.

## 57. கல்யாண நெய்

*சரக்கு*

பேய்த் தும்மட்டிக்காய் (வரித்தும்மட்டிக்காய்)
கடுக்காய்
தான்றிக்காய்
நெல்லிவற்றல்
சுரைக்காய்
தேவதாரு
வாலுளுவை
மூவிலைத்தாமரை
பூனைக்காய்ஞ்சொறி
மரமஞ்சள்
கறிமஞ்சள்

சிறு நன்னாரி
பெரு நன்னாரி (மாவிலிங்கக் கிழங்கு)
ஓமம்
நீரோற்பலம்
ஏலம்
மஞ்சிட்டி
வாளம்
குமட்டி மாதுளம் பழம்
நாகேசுரம்
வாய்விளங்கம்
ஓரிலைத் தாமரை
கோஷ்டம்
சந்தனம்
தாமரை
தாளிசப்பத்திரி
கண்டங்கத்தரி
உலர்ந்த மல்லிகைப்பூ

வகைக்குப் பலம் காலே வீசம்.

*செய்முறை*

இவைகள் அனைத்தையும் இடித்து நான்கு படி நீரில் போட்டு, $^1/_2$ படியாகக் காய்ச்சிப் பிசைந்து வடித்த பின்னர், 1 படி பசுவின் நெய் சேர்த்துப் பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் ஒரு வேளை காலையில் 1 கரண்டி விகிதம் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

அபசுமாரம், சுரம், சுவாசகாசம், பித்தப்பைத்தியம், சயம், மூத்திரக் கிரிச்சரம் முதலிய பிணிகள் குணப்படும். இதனை ஆண், பெண் இருதிறத்தாரும் உட்கொள்ளின் மலடு நீங்கி மகப்பேறு உண்டாகும்.

## 58. சத்திச்சாறணை நெய்

*சரக்கும் செய்முறையும்*

நிழலில் உலர்த்திய சத்திச்சாறணை மூலிகை சமூலம் பலம் 100. இதனை 4 மரக்கால் தண்ணீர் விட்டு, நான்கு படியாகக் காய்ச்சி வடித்து, அதனுடன் ஒரு படி பசுவின் நெய் சேர்த்துச் சிறு தீயில் எரித்துக் கொதிக்கும் தறுவாயில், நிலவேம்பு, சுத்திசெய்த கஞ்சா, சுக்கு, உலர்ந்த சத்திச்சாறணை, தேவதாரு இவைகளின் சூரணத்தில் தனித்தனி இரண்டு பலம் போட்டுப் பதமாகக் காய்ச்சி இறக்கவும்.

*பயன்பாடு*

இதனைத் தேகக் கூறுக்குத் தக்கவாறு $^1/_2$ அல்லது 1 கரண்டி காலை, மாலை உட்கொள்ளின் காசம், சுவாசகாசம், வீக்கம், சுரம் முதலியன குணப்படும்.

## 59. திராட்சாதி நெய்

*சரக்கு*

கொடிமுந்திரிப் பழம் வீசை-1, இலுப்பை வேர்ப்பட்டை பலம்-8, திப்பிலி பலம்-2, இவைகளை ஒரு மரக்கால் நீரில் போட்டுச் சிறு தீயில் எரித்து, ஒரு படியாகச் சுண்டக் காய்ச்சி, அதனுடன் 4 படி பாலும் 1 படி நெய்யும் சேர்த்துப் பதமுறக் காய்ச்சி ஆறினபின், எட்டு பலம் சர்க்கரை கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் இரு நேரம் இதனைக் கலக்கி ஒரு கரண்டி விகிதம் உண்டுவரின் தேக துர்ப்பலம், வாதப் பித்தச் சுரங்கள், சுவாசம், அம்மை, பெரும்பாடு, இரத்தப் பித்தம் முதலிய நோய்கள் தீர்ந்து பலம் உண்டாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 60. வியாக்கிரி நெய்

*சரக்கு*

| | |
|---|---|
| கண்டங்கத்தரி சமூலரசம் | 1 படி |
| நெய் | 1 " |

கற்கடகசிங்கி

சித்திரமூலம்

புஷ்கரமூலம்

கடுக்காய்

தான்றிக்காய்

நெல்லிவற்றல்

சாறணைவேர்

கரிசலாங்கண்ணி

வகைக்குப் பலம் $^{1}/_{2}$.

*செய்முறை*

கண்டங்கத்தரிச் சாற்றையும், நெய்யையும் ஒருமிக்கக் கலந்து அதனில் கடைச்சரக்குகளைச் சூரணம் செய்து போட்டு, நீர் சுண்டக் காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு ஒரு கரண்டி விகிதம் தினம் இருவேளை உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

காசம், குன்மம், மகோதரம் முதலிய கடும்பிணிகள் தீரும். குழந்தைகளுக்கு உண்டாகும் கக்குவான் இருமலுக்கு இது சாலச் சிறந்தது.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 61. பஞ்சதிக்க நெய்

*சரக்கு*

1. வேப்பம்பட்டை
   சீந்தில் கொடி
   ஆடாதோடைச் சமூலம்
   பேய்ப்புடல்
   கண்டங்கத்தரி

வகைக்குப் பலம் 10.

2. சிற்றரத்தை
வாய்விளங்கம்
தேவதாரு
யானைத்திப்பிலி
எவாச்சாரம்
சுக்கு
மரமஞ்சள்
அதிமதுரம்
செவ்வியம்
கோஷ்டம்
மிளகு
வெட்பாலையரிசி
ஓமம்
சித்திரமூலம் வேர்ப் பட்டை
கடுகுரோகணி
தாமரைக் கிழங்கு
வசம்பு
மோடி
மஞ்சிட்டி
அதிவிடயம்
சிவதை வேர்
குரோசாணி ஓமம்

இவைகள் வகைக்கு வராகன் எடை $^{1}/_{2}$

மகிசாட்சிகுங்கிலியம் பலம் 5.

*செய்முறை*

முதல் அங்கத்தில் கூறப்பட்டவைகளை ஒன்றிரண்டாய் இடித்து, ஒரு மட்பாண்டத்தில் போட்டு, எண் மடங்கு நீர் விட்டு, ஒரு பாகமாகக் காய்ச்சி வடித்து

அதனில் அரைப்படி ஆவின் நெய்யை விட்டு, இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட சரக்குகளைப் பால் விட்டு நெகிழ அரைத்துக் கலக்கி நெய் பதமுறக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இதனை வேளைக்குக் கால் பலம் விகிதம் தினம் இரு நேரம் காலை, மாலை, ஒரு மண்டலம் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

நரம்பு, என்புமச்சை, தாது சம்பந்தப்பட்ட வாயு முதலியன குணப்படும். தவிர குட்டம், நரம்புகளில் உண்டான ஆறாத விரணம், கண்டமாலை, பவுத்திரம், குன்மம், மூலம், சயம், வீக்கம், பீனிசம், இருமல், மார்புத் துடிப்பு முதலிய பல பிணிகளையும் குணப்படுத்தும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 62. கூழ்பாண்ட நெய்

*சரக்கு*

| | | |
|---|---|---|
| 1. | ஆவின் நெய் | 1 படி |
| | கலியாணப் பூசணிக் காய்ச் சாறு | 1 " |
| | நெல்லிக்காய்ச் சாறு | $^1/_2$ " |
| | தென்னம் பூச்சாறு | $^1/_2$ " |
| | நெல்லிக்காய்ச் சாறு | $^1/_2$ " |
| | செந்தாழை விழுதுச்சாறு | $^1/_4$ " |
| | கற்றாழைச்சாறு | 1 " |
| | செவ்விளநீர் | $^1/_4$ " |
| | பொன்னாங்காணிச் சாறு | $^1/_4$ " |
| 2. | திரிகடுகு | |
| | நிலப்பனங்கிழங்கு | |
| | சதாவரிக் கிழங்கு | |
| | கமுகம்பூ | |

தென்னம்பூ

அதிமதுரம்

வகைக்குப் பலம் $^1/_2$.

*செய்முறை*

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட கற்கங்களை முதல் அங்கத்தில் கூறப்பட்ட ஏதேனும் ஒரு சாற்றில் நெகிழ அரைத்து ஒரு பாண்டத்தில் போட்டு முதல் அங்கத்தில் குறிப்பிட்டவைகளை எல்லாம் சேர்த்துக் கலக்கிப் பதமாகக் காய்ச்சி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இதனை வேளைக்குக் கரண்டி வீதம் தினம் இருவேளை உண்டுவர மேகப் பிரமியம், நீர்க்குத்து எரிவு, அத்தி வெட்டை, எலும்புருக்கி, தாதுநட்டம் முதலியவைகள் குணமாகும்.

## 63. சுவாசகாச நெய்

ஒரு பழகிய குடுவையில் அடியில் குழித்தைலம் இறக்கும் பொருட்டு 4,5 துவாரம் செய்து கொள்ளவும். 60 அல்லது 80 வெள்ளெருக்கன் பழுப்பு இலைகளைக் கொண்டுவந்து, அதனிரு பக்கங்களிலும் பசு நெய்யைத் தடவி வைத்துக் கொள்ளவும். பின்பு பிரமத்தண்டு வேர் பலம் 2 1/2 கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கி, அவைகளையும் பசுவின் நெய்யில் புரட்டி, முன் சித்தப்படுத்திய குடுவையில் இலையும் வேருமாக அடுக்கடுக்காய்ப் போட்டு வாய்க்கு அகல்மூடிச் சீலை செய்து, குழித்தைலம் இறக்கி, அதிலிருக்கும் செப்பு நீரை அப்புறப்படுத்தி, வேளைக்கு 30 முதல் 60 துளி கற்கண்டுச் சூரணத்தில் பிசறி உண்ணவும். இவ்வாறு 15 நாட்கள் கொள்ள சுவாசகாசம் குணமாகும். பத்தியம் இல்லை.

## 64. சுவாசகாச நெய் (வேறு முறை)

*சரக்கு*

சங்கம் வேர்

பேராம்பல் வேர்

நெல்லிமுள்ளி

சிறுசாறணை வேர்

ஆடாதோடை வேர்

நொச்சி வேர்

கடுக்காய்த் தோல்

மிளகரணை வேர்

தான்றிக்காய் வேர்

மஞ்சள்

இவைகள் வகைக்கு 3 பலம்.

பெருவாகை

முன்னை

பெருங்குமிழ்

வில்வம்

பெருமல்லி

சிறுமல்லி

நெருஞ்சில்

கண்டங்கத்தரி வேர்

பாதிரி

சிறுவழுதலை வேர்

இவ்வகைகளின் வேர் தனித்தனியே 2 பலம்.

மாவிலிங்கம் வேர்

கொடிவேலி வேர்

மூக்கிரட்டை வேர்

ஆயில்ய மரப்பட்டை

செம்முள்ளி வேர்

விழுதி வேர்

நாவல் வேர்

தண்ணீர்விட்டான் கிழங்கு

தழுதாழை வேர்

புங்கு வேர்

ஆதண்டம் வேர்

புன்னை வேர்

ஆயில்ய மரப்பட்டை

இச்சரக்குகளைத் தனித்தனியே 50 பலமும், ஆடாதோடையிலை 32 பலமும் எடுத்து எல்லாவற்றையும் இடித்து 8 மரக்கால் நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி இரு மரக்காலாகும் வரை வற்றக் காய்ச்சவும். பின்பு வடிகட்டிப் பசுவின் நெய் 4 படி விட்டு,

திப்பிலி மூலம்

கற்கடக சிங்கி

ஏலக்காய்

தான்றித்தோல்

வாலுளுவையரிசி

இலவங்கப்பத்திரி

கொடிவேலி வேர்

புன்னை மரப்பட்டை

சீரகம்

சிற்றரத்தை

கற்பூரம்

சிறுதேக்கு

கடுகுரோகணி

கறுஞ்சீரகம்

கோஷ்டம்

முந்திரிகைப்பழம் (திராட்சை)

குடசப்பாலை அரிசி

செவ்வியம்

கடுக்காய்த்தோல்

இந்துப்பு

திப்பிலி

நெல்லிவற்றல்

ஓமம்

கிராம்பு

மிளகு

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு 2 வராகன் எடை வீதம் எடுத்து இடித்து 8 மடங்கு நீர் விட்டு அடுப்பின் மேலேற்றி, எட்டிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் குடிநீர் செய்து நெய்யுடனே ஊற்றிப் பக்குவமாக எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இந்நெய்யைச் சாப்பிட்டுவர இரத்தப்பித்தம், காசம், இரைப்பு, ஐயக்கோளாறுகளால் ஏற்பட்ட ஈளை, இருமல் முதலிய நோய்கள் தீரும்.

## இலேகிய வகைகள்

### 1. *திப்பிலி இலேகியம்*

*சரக்கு*

| | |
|---|---|
| திப்பிலி | 10 பலம் |
| மிளகு | 5 " |
| சுக்கு | 5 " |
| சீரகம் | |
| கறுஞ்சீரகம் | |
| ஓமம் | |
| குரோசாணி ஓமம் | |
| சிற்றரத்தை | |
| பேரரத்தை | |
| கடுக்காய் | |
| நெல்லிக்காய் | |
| தான்றிக்காய் | |
| இலவங்கம் | |
| இலவங்கப்பத்திரி | |

தாளிசப்பத்திரி

கொடிவேலி வேர்ப்பட்டை

ஏலம்

இலவங்கப்பட்டை

இவை வகைக்கு ஒரு பலம்.

*செய்முறை*

இவைகளை இளவறுப்பாக வறுத்துப் பொடித்து வடிகட்டி, வந்த எடைக்குச் சமன் சீனி சேர்த்துக் கலந்து தேன் விட்டுப் பிசைந்து பீங்கானில் பதனம் செய்யவும்.

*பயன்பாடு*

இத்துடன் அளவுப்படி தாம்பிரச் செந்தூரம் சேர்த்துக் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

காசம், மந்தார காசம், சயம், இருமல், இளைப்பு, கக்கல், சேத்துமம் ஆகியவைகள் ஒரு மண்டலத்தில் தீரும்.

## 2. திப்பிலி இலேகியம் (வேறு முறை)

*சரக்கு*

திப்பிலி 4 பலம்

ஏலக்காய்

கிராம்பு

இலவங்கப்பட்டை

இலவங்கப்பத்திரி

இவைகள் வகைக்கு 1 தொடி.

மிளகு

சுக்கு

ஓமம்

கொத்துமல்லி

கண்டத்திப்பிலி

தாளிசப்பத்திரி

தக்கோலம்

சதகுப்பை

சிறுதேக்கு

வாய்விளங்கம்

சீரகம்

இவைகள் வகைக்கு 1 $^{1}/_{2}$ பலம்.

கையாந்தகரைத் தூள், சர்க்கரை இவை வகைக்கு 2 தொடி.

*செய்முறை*

இச்சரக்குகள் அனைத்தையும் வெயிலில் உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்துத் துணியினால் நுண்துகள்களானப் பொடியாகச் சலித்து எடுத்துக் கொள்ளவும். இதனுடன் சுத்தத் தேன் 1/4 படி சேர்த்துக் குழப்பி, சுத்தமான அயப்பற்பம் 1/2 பலமும் கலந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இம்மருந்தைக் கழற்சி அளவு தினம் 2 வேளை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

பலவீனம், காசம், பாண்டு, மந்தம் முதலிய நோய்கள் நீங்கும்.

### 3. திப்பிலியாதி இலேகியம் (வேறு முறை)

| | |
|---|---|
| திப்பிலி | 8 பலம் |
| சர்க்கரை | 4 " |
| மிளகு | |
| சுக்கு | |
| ஏலம் | |
| பறங்கிப்பட்டை | |
| சாதிக்காய் | |
| இலவங்கப்பட்டை | |
| இலவங்கப்பத்திரி | |
| வாய்விளங்கம் | |

தக்கோலம்

கடுக்காய்

நெல்லிக்காய்

தான்றிக்காய்

சீரகம்

வகைக்கு 1 பலம்.

செவ்வியம் 5 பலம்.

சித்திரமூலம்

திப்பிலிமூலம்

வகைக்கு 2 $^{1}/_{2}$ பலம்.

அயச்செந்தூரம், கையாந்தகரை வகைக்கு 2 பலம்.

*செய்முறை*

இவற்றைச் சூரணித்து இலேகிய முறைப்படிச் செய்து, தேன் 2 படி கலந்து வைத்துக் கொள்ளவேண்டும்.

*தீரும் நோய்கள்*

குன்மம், வாந்தி, சுவையின்மை, உடல் இளைப்பு, பீனிசம், சுவாசகாசம்.

## 4. கூழ்பாண்ட இலேகியம்

*சரக்கு*

முற்றிய பூசணிக் காயைக் கொண்டுவந்து நறுக்கிக் குடல்களையும் விரைகளையும் நீக்கிவிட்டு, அதைத் தேங்காய்த் திருகுபலகையில் திருகி வைத்துக் கொள்ளவும். ஒரு பாத்திரத்தில் தண்ணீர் ஊற்றி வேடுகட்டி அதன் மேல் பூசணித் தூளைப் போட்டு அவிக்கவும். பின்பு அவைகளைப் பிழிந்து அடுப்பின் மேல் ஒரு சட்டியை வைத்து அதிலிட்டுப் பசுவின் நெய் விட்டுப் பொன் வறுவலாக வறுக்கவும். இதை உரலில் இட்டு இடித்துத் தூளாக்கிக் கொள்ளவும். பின்பு

கண்டத்திப்பிலி

சாதிக்காய்

செண்பகப்பூ

சுக்கு

மிளகு
கற்கடகசிங்கி
கோஷ்டம்
நிலவேம்பு
கொத்துமல்லி விதை
சீரகம்
கறுஞ்சீரகம்
ஓமம்
ஏலக்காய்
கிராம்பு
திப்பிலி
இந்துப்பு
செங்கழுநீர்க் கிழங்கு
அதிமதுரம்
சிறுதேக்கு
சிறுநாகப்பூ
தேவதாரம்
இலவங்கப்பத்திரி

*செய்முறை*

இச்சரக்கு வகைகளை வகைக்கு 3 கழஞ்சு ($1^1/_4$ வராகன் எடை) வீதம் எடுத்து உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்துத் தூளாக்கிச் சூரணம் செய்துகொண்டு, பூசணிச் சூரணத்துடன் கலந்து கொள்ளவும்.

அடுப்பின் மேல் ஒரு சட்டியை வைத்து, 2 படி பசுவின் நெய் விட்டு அதில் மேற்படி சூரணத்தை இட்டு

| | |
|---|---|
| தேன் | $^1/_2$ படியும் |
| சர்க்கரை | $^1/_2$ " |

சேர்த்து எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இதை ஒரு பாத்திரத்தில் பத்திரப்படுத்தித் தினமும் ஒரு எலுமிச்சங்காய் அளவு எடுத்துக் காலை நேரங்களில் சாப்பிட்டுவரவும்.

*தீரும் நோய்*

ஈளை, இருமல், எட்டு வகைக் குன்மங்கள், சயம், எரிகுன்மம், இரத்தக் குன்மம் முதலியவை தீரும்.

## 5. சண்டமாருத இலேகியம்

*சரக்கு*

சுத்தமான முழுக்கடுக்காய் எண்ணிக்கையில் 100 எடுத்து, நன்றாகப் புளித்த காடி 1 படி விட்டு, ஒரு இரவு முழுதும் ஊறவைத்து, வெயிலில் 3 நாளைக்கு உலர்த்தவும். மறுபடியும் புது காடியில் அவைகளை ஊறவைத்து 3 நாளைக்கு உலர்த்தவும். இப்படி 3 முறை செய்யவும். நன்றாகக் காய்ந்த பின்பு கடுக்காய்களை உடைத்துக் கொட்டைகளை நீக்கி அதன் தோலை ஒரு தராசில் போட்டு நிறுத்துக்கொள்ளவும்.

*செய்முறை*

மொத்த நிறைக்கு நாலிலொன்று கல்லுப்புப் போட்டு, தண்ணீர் விடாத புளித்த பசுவின் மோர் விட்டுக் கடுக்காய்த் தோலையும் கல்லுப்பையும் நன்றாக அரைத்து அம்மோரிலேயே குழப்பி, அடுப்பின் மேலேற்றி, மோர் சுண்டும் வரை எரிக்கவும். பின்பு அச்சூரணத்தை எடுத்து வெயிலில் உலர்த்தவும். அதன் பின்

மிளகு

இந்துப்பு

இவ்விரண்டும் வகைக்கு ஒரு பலமும், இதனுடன்

கண்டத்திப்பிலி

செவ்வியம்

திப்பிலி

திப்பிலி மூலம்

கொடிவேலி வேர்

இவைகள் வகைக்கு 5 பலமும் எடுத்து உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து, முன் சொல்லிய கடுக்காய்த்தூளுடன் கலந்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து இலேகிய பதமாக எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு தான்றிக்காய் அளவு எடுத்துத் தினம் காலை வேளையில் மாத்திரம் 40 நாட்கள் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

கப நோய்கள் தீரும்.

*பத்தியம்*

புளிப்புப் பதார்த்தங்களையும், கசப்புப் பதார்த்தங்களையும், புகையிலையையும் நீக்கவும். உப்பை வறுத்துக் கூட்டிக் கொள்ளவும். பசுவின் பால், நெய் வகைகளை வேண்டிய வரை கூட்டிக் கொள்ளவும். முருங்கைப் பிஞ்சு, கத்தரிப் பிஞ்சு, அவரைக்காய், துவரம் பருப்பு, முளைக் கீரை, வாழைக்காய் முதலியவைகளைக் கூட்டிக் கொள்ளவும்.

## 6. சண்டமாருத இலேகியம் (வேறு முறை)

*சரக்கு*

கண்டங்கத்தரி வேர்
சங்கம் வேர்
துளசி
நுணா
தூதுவளை
மணித்தக்காளி
ஆடாதோடை

*செய்முறை*

இவைகளின் சாறுகள் வகைக்கு $^1/_4$ படி எடுத்து ஒரு சட்டியில் இட்டு அடுப்பின் மேலேற்றிச் சுண்டக் காய்ந்து வரும் பொழுது பனைவெல்லம் 5 பலம் கூடப்போட்டுப் பாகு $^1/_4$ படியாக வற்றி வரும்பொழுது

திப்பிலி

சிற்றரத்தை

கடுக்காய்த் தோல்

இவைகள் வகைக்கு 15 வராகன் எடை எடுத்து, வெயிலில் காயவைத்து இடித்துச் சூரணம் செய்து, பாகுடன் போட்டு அடிபிடிக்காமல் கிண்டி, சுத்தமான தேன் $^1/_8$ படியும் பசுவின் நெய் 1 மாகாணி (வீசம் படி)யும் விட்டுப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு தான்றிக்காய் அளவு எடுத்துக் காலை வேளையில் உட்கொள்ளவும். இவ்வாறு 40 நாட்கள் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

கபநோய்கள், இருமல் முதலானவைகள் தீரும்.

*பத்தியம்*

புளிப்புச் சுவையுள்ள பதார்த்தங்கள், கசப்புப் பண்டங்கள், புகையிலை இவைகளை நீக்கவும். உப்பையும் நீக்கி விடவும்.

பசுவின் நெய், பால், வாழைக் காய்ப் பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு, அவரைக்காய், முளைக்கீரை ஆகியவைகளைக் கூட்டிக்கொள்ளவும்.

## 7. வில்வாதி இலேகியம்

*சரக்கு*

மேல் தோலை நீக்கிய வில்வ வேரில் 40 பலம் எடுத்துச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி, அவைகளை இடித்து ஒரு பெரிய பானையில் போட்டு, 8 மரக்கால் நீர் விட்டு, மூன்று நாளைக்கு ஊறவைக்கவும். நான்காவது நாளன்று அப்பானையை அடுப்பின் மேலேற்றி எரித்து, 1 மரக்காலாகும் வரை சுண்டக் காய்ச்சவும். அக் குடிநீரை இறுத்து அதனுடன்

ஏலக்காய்

கிராம்பு

நன்னாரி வேர்

கோரைக்கிழங்கு

இலவங்கப்பத்திரி

அதிமதுரம்

நெல்லிப் பருப்பு

விலாமிச்சம்வேர்

நெல்லிமுள்ளி

இலவங்கப்பட்டை

திப்பிலி

கொத்துமல்லிவிதை

வெட்டிவேர்

சீந்தில் சர்க்கரை

பேரீச்சம்பழம்

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு $1^{1}/_{4}$ வராகன் எடை வீதம் எடுத்து, நன்றாகக் காயவைத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து, மேற்படிக் குடிநீருடன் கலந்து, பாகுபோல் காய்ச்சி, அதனுடன் 10 கழஞ்சு (சுமார் 5 தோலா) சர்க்கரை சேர்த்து, சுத்தத் தேன் ஒரு உழக்கும் பசுவின் பால் 1 உழக்கும் கூடவிட்டு இலேகிய பதத்தில் இறக்கிக்கொள்ளவும்.

*பயன்பாடு*

அதில் ஒரு கொட்டைப்பாக்கு அளவு எடுத்துப் பசுவின் பாலில் கலக்கித் தினந்தோரும் 3 வேளை உட்கொள்ளவும். இம்மாதிரி 20 நாட்கள் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

பித்தத்தில் ஏற்படும் 40 காச வகைகள், உளைமாந்தை, உணவு செரியாமை, சுரம், இளைப்பு, பாண்டு, காமாலை முதலான நோய்கள் தீரும்.

*பத்தியம்*

கசப்புப் பதார்த்தங்களையும், புளியையும் நீக்கிவிடவும். பசுவின் பால், நெய், உப்புக்கண்டம் முதலியவைகளை வேண்டிய அளவு கூட்டிக் கொள்ளவும்.

## 8. கண்டங்காரி இலேகியம்

*சரக்கு*

கண்டங்கத்தரிவேர்

விஷ்ணுகரந்தைச் சமூலம்

இம்புராச் சமூலம்

தூதுவளைச் சமூலம்

ஆவாரைச் சமூலம்

கரிமுள்ளி வேர்

சங்கம் வேர்

பருத்தி வேர்

நன்னாரி வேர்

இச்சரக்குகளை வகைக்கு 50 பலம் எடுத்து, ஒன்றிரண்டாக வெட்டி ஒரு பெரும் பாத்திரத்தில் இட்டு, 12 மரக்கால் சுத்த நீர் விட்டு ஆறிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு, அதனுடன் வெல்லம் 1 வீசை சேர்த்து, அடுப்பின் மேல் வைத்துப் பாகாக்கிக் கொண்டு

சங்கம் வேர்

சுக்கு

மிளகு

சிற்றரத்தை

வெங்காரம்

கடுகுரோகணி

சிறுதேக்கு

கூகைநீறு

திராட்சை

சாதிக்காய்

மாசிக்காய்

கோஷ்டம்

திப்பிலி

ஓமம்

ஏலக்காய்

வெட்பாலை அரிசி

வாய்விளங்கம்

கொடிவேலி வேர்ப்பட்டை

பருத்தி

சடாமாஞ்சில்

கிராம்பு

*செய்முறை*

முதலான சரக்குகளை வகைக்கு ஒரு பலம் எடுத்துச் சூரணித்துக் கொண்டு, மேற்சொன்ன பாகில் போட்டுக் கிண்டி, வேண்டிய அளவு பசுவின் நெய்யும் விட்டு இலேகியமாகச் செய்யவும். ஆறியபின் பச்சைக்கற்பூரம் 1 வராகன் எடை, தேன் 2 சேர் சேர்த்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இதைத் தினம் 2 வேளை கழற்சிக்காய் அளவு சாப்பிடச் சகலவித காசங்களும் தீரும்.

### 9. கண்டங்காரி இலேகியம் (வேறு முறை)

*சரக்கு*

கண்டங்கத்தரி

தூதுவளை

கையாந்தகரை

நொச்சி இலை

ஆடாதோடை

துளசி

சிறுகாஞ்சொறி

வேலிப்பருத்தி இலை

முருக்கிலை

பறங்கிப்பட்டை

கற்கடகசிங்கி
சிற்றரத்தை
தாளிசப் பத்திரி
திப்பிலி மூலம்
செவ்வியம்
கடுக்காய்
சுக்கு
மிளகு
திப்பிலி
வெங்காரம்
கறுஞ்சீரகம்
சீரகம்
பெருங்காயம்

ஆகியவற்றில் வகைக்குச் சம எடை எடுத்துக் கொள்ளவும்.

*செய்முறை*

இவற்றைச் சூரணித்து வெல்லம்- 20 பலமும், நெய்-1 உழக்கும் சேர்த்து இலேகிய பதமாகச் செய்து உண்ண வேண்டும்.

*தீரும் நோய்கள்*

காசம், உளைமாந்தை.

## 10. கண்டாத்திரி இலேகியம்

*சரக்கு*

1. சுக்கு
செவ்வியம்
கடுக்காய்
சீரகம்
நெற்பொரி
மிளகு

அதிமதுரம்

நெல்லிவற்றல்

தாளிசப்பத்திரி

திப்பிலி

சிறுதேக்கு

தான்றிக்காய்

இலவங்கப்பட்டை

சிற்றரத்தை

வாய்விளங்கம்

கொத்துமல்லி

இலவங்கப்பத்திரி

இவைகள் வகைக்குக் கழஞ்சு-3.

சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு, அதிவிடையம்

இவைகள் வகைக்குக் கழஞ்சு -2.

| | | |
|---|---|---|
| 2. | நல்ல வெல்லம் | 10 பலம் |
| | தேன் | 5 " |
| | நெய் | 5 " |
| 3. | இஞ்சி | 15 " |

*செய்முறை*

முதலாவது அங்கத்தில் கூறப்பட்ட இருபத்தோரு சரக்குளை நன்கு இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொள்க. அப்பால் மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட இஞ்சித் துண்டுகளை மேல் தோல் சீவிச் சிறுவில்லைகளாக அரிந்து வைத்துக்கொண்டு அதனை ஒரு இரும்புக் கடாயில் சிறிது பசுவின் நெய் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரித்துச் சூடேறிய சமயம் போட்டு, நீர் சுண்டிச் சிவந்து வரும் சமயம் கீழிறக்கி ஆறவிட்டு, அம்மிக் கல்லில் வைத்து மிருதுவான பதத்திற்கு அரைத்து வைத்துக் கொள்க. இதற்கு மேல் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட நல்ல வெல்லத்தை ஒரு பாண்டத்தில் போட்டு, 14 படித் தண்ணீர் விட்டுக் கரைத்து வடிகட்டி ஒரு இரும்புக் கடாயில் விட்டு அடுப்பிலேற்றிச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும் போது முன்முடித்து வைத்துள்ள சூரணத்தையும்

இஞ்சித்துகளையும் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுக் கிளறித் தேன், நெய் விட்டுப் பிசறி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்த இலேகியத்தில் வேளைக்குச் சிறு கொட்டைப்பாக்கு அளவு காலை, மாலை இருபொழுது கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

இருமல், செறியாமை, வாந்தி, குரல்கம்மல், குன்மம், மலசலக் கட்டு, உட்சுரம், தாபசுரம், வயிற்றுப்பொருமல், அக்கினிமந்தம், மூலவாயு, கிராணி, பேதி, முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

கைப்பு, புளிப்பு நீக்கி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 11. கண்டங்கத்தரி இலேகியம்

*சரக்கும் செய்முறையும்*

கண்டங்கத்தரி வேர் 100 பலம் எடுத்துச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கி ஒரு புதுப் பானையில் இட்டு, 12 மரக்கால் சுத்த நீர் விட்டு, அடுப்பின் மேலேற்றி 6 மரக்காலாகும் வரை எரித்து ஒரு பாத்திரத்தில் குடிநீரை இறுத்துக்கொள்ளவும். அதனுடன் 100 கடுக்காய்களை எடுத்து அக்குடிநீரில் போட்டு, 30 பலம் பழைய வெல்லத்தைக் கரைக்கவும். இதை அடுப்பின் மேலேற்றிப் பாகாக்கி அதனுடன்

சுக்கு, திப்பிலி, ஏலக்காய், கிராம்பு

ஆகியவற்றை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துச் சூரணம் செய்து போட்டு, முன்சொன்ன கடுக்காயையும் அப்படியே ஒன்று கலந்து இலேகிய பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு கடுக்காயுடன், இலேகியத்தில் ஒரு பாக்களவும் எடுத்து உட்கொள்ளவும். சயநோய் தீரும்.

## 12. கண்டங்கத்தரியாதி இலேகியம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| கண்டங்கத்தரி வேர் | 100 பலம் |
| கடுக்காய் | 100 " |

*செய்முறை*

இவைகளை ஒன்றிரண்டாக இடித்து, இவற்றுடன் 4 மரக்கால் நீர்விட்டு, அடுப்பின் மேலேற்றி ஒரு மரக்காலாக வற்றக் காய்ச்சவும். இக்குடிநீரை வடிகட்டி அதனுடன் 100 பலம் பழைய வெல்லம் போட்டுப் பாகு காய்ச்சிக் கொள்ளவும். பின்பு

மிளகு
திப்பிலி
சுக்கு

இவைகள் வகைக்கு 3 பலம்.

ஏலக்காய்
இலவங்கப்பட்டை
இலவங்கப்பத்திரி

இவைகள் வகைக்கு 1 பலம் எடுத்து, எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்து பாகில் போட்டுத் தேன் 6 பலமும் விட்டுக் கிண்டி இறக்கிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தேகத்தின் பலம் அறிந்து தினம் காலையிலும் மாலையிலும் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

குன்மங்கள், கபநோய், ஈளை, விக்கல், மேகம் முதலிய நோய்கள் தீரும்.

## 13. கண்டங்கத்தரி இலேகியம் (வேறு முறை)

*சரக்கு*

தூதுவளம் பழம்
கண்டங்கத்தரி வேர்

இவ்விரண்டையும் வகைக்கு 1 பலம் எடுத்து அதனுடன்

ஏலக்காய்

திப்பிலி

மிளகு

கிராம்பு

சீரகம்

ஆகியவற்றில் வகைக்கு 2 வராகன் எடை எடுத்துக் கொள்ளவும்.

*செய்முறை*

ஒன்று சேர்த்து ஒன்றிரண்டாக இடித்து, ஒரு பாத்திரத்தில் போட்டுப் பசுவின் நெய் சிறிது விட்டுப் பொன் வறுவலாக வறுத்துக் கொள்ளவும். இதைக் கல்லுரலில் இட்டுச் சேதமாகாமல் இடித்துச் சூரணம் செய்துகொண்டு, அதற்குச் சரியளவு சர்க்கரை சேர்த்துக் கொண்டு பசுவின் நெய்யும், சுத்தமான தேனும் வேண்டிய அளவு விட்டுக் கலந்து இலேகியமாகச் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இம்மருந்தில் 2 வராகன் எடை எடுத்துக் காலையிலும் மாலையிலுமாக 3 நாளைக்கு 6 பொழுது உட்கொள்ள, இருமல் தீரும்.

## 14. பூசணி இலேகியம்

*சரக்கும் செய்முறையும்*

பூசணிக்காயைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி வெயிலில் உலர்த்தவும். இதில் 100 பலம் எடுத்துப் பசுவின் நெய் விட்டு இளவறுப்பாய் வறுத்துக்கொள்ளவும். பின்பு இதைக் கல்லுரலில் இட்டு இடித்துச் சரியளவு சீனி சேர்த்து, சுக்கு, மிளகு, ஏலக்காய் ஆகியவைகளை வகைக்கு 1 பலம் கூட்டித் தேன் 1/4 சேரும் விட்டு நன்றாக இடித்து இலேகிய பதமாக்கிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் 3 3/4 வராகன் எடை அளவு எடுத்துத் தினமும் உட்கொள்ளக் கபநோய் தீரும்.

## 15. பூசணி இலேகியம் (வேறு முறை)

*சரக்கு*

பூசணிக்காயைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிவைத்துக் கொண்டு ஒரு படி பசுவின் நெய் விட்டு, நீர் முழுவதும் சுண்டும் வரை வறுத்துச் சிவந்த நிறம் ஆனவுடன் இறக்கி வைத்துக் கொள்ளவும். இதனுடன்

ஏலக்காய்

சுக்கு

திப்பிலி

மிளகு

கறுஞ்சீரகம்

கொத்துமல்லி

சீரகம்

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து யாவற்றையும் கல்லுரலில் இட்டுப் பூணில்லா உலக்கையினால் நன்றாக இடித்துத் தேன், நெய், சர்க்கரை இவைகளைச் சேர்த்து இடித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

3 விரல் கொண்ட அளவு எடுத்துத் தினம் 2 வேளை உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

விக்கல், பித்தம், அரோசகம், கபநோய், காசம் முதலானவை தீரும்.

## 16. பெரும்பூசணி இலேகியம்

*சரக்கு*

ஒரு பெரும் பூசணிக்காயை அறுத்து அதன் தோலையும் விதைகளையும் நீக்கி, பாதி பூசணிக்காயைத் துருவிச் சாறு பிழிந்து கொள்ளவும்.

மறுபாதியை அப்படியே சிறு சிறு துண்டுகளாக்கிச் சதை 100 பலத்தை எடுத்துக் கொண்டு பசுவின் நெய் விட்டுச் சிவக்க வறுத்துக்கொள்ளவும். பூசணிச்சாறு 1 படியில் 100 பலம் கற்கண்டைக் கரைத்து அடுப்பின் மேல் வைத்து பாகாக்கிக்கொள்ளவும். இதனுடன் முன் சொன்ன பூசணிச் சூரணத்தையும்

செவ்வியம்
திப்பிலிமூலம்
கொடிவேலி வேர்
ஏலக்காய்
திப்பிலி
இலவங்கப்பத்திரி
சுக்கு
சிறுநாகப்பூ
சடாமாஞ்சில்
இந்துப்பு
இலவங்கப்பட்டை

ஆகியவற்றில் வகைக்கு 1 பலத்தையும் எடுத்துக் கொள்ளவும்.

*செய்முறை*

இவற்றைக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்துகொண்டு, லோகசெந்தூரம் 1 பலத்தையும் கூட்டிப் பாகுடன் கிளறி இலேகிய பதத்தில் இறக்கவும். ஆறியபின் தேன் 20 பலம் சேர்த்து, நெய் தடவியப் பானையில் போட்டு நன்றாக மூடித் தானியபுடமாக 15 நாட்கள் வைக்கவும்.

*பயன்பாடு*

இந்த இலேகியத்தைத் தினம் 2 வேளை, $^1/_4$ பலம் அளவு எடுத்துச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சயரோகம், சுவாசகாசம் முதலான நோய்கள் தீரும்.

## 17. அமுத சர்க்கரை இலேகியம்

*சரக்கு*

ஓமம்
கோஷ்டம்
சந்தனத்தூள்
மிளகு

தாமரையிலைச் சுருள்
நெல்லிப்பருப்பு
திராட்சைப் பழம்
கற்பூரம்
ஏலக்காய்
சாதிக்காய்
நெருஞ்சில்
பூலாங்கிழங்கு
கூகை நீறு
கற்கடகசிங்கி
பேரீச்சம்பழம்
சீரகம்
குங்கிலியம்
அரக்கு
சுக்கு
தாமரைத்தாது
சிறுநாகப்பூ
திப்பிலி
அதிமதுரம்
இலவங்கப்பத்திரி
நெற்பொரி
தக்கோலம்
அமுக்கராக் கிழங்கு
நிலப்பனைக் கிழங்கு
தண்ணீர்விட்டான் கிழங்கு

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து உலர்த்தி நன்றாகக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். இதற்கு 2 பங்கு சீந்தில்

சர்க்கரை கூட்டிக்கொள்ளவும். அதற்குமேல் 5 பலம் சீனிச் சர்க்கரை சேர்த்து ஒன்றாகக் கலந்து கொண்டு ஒரு புதுப்பாண்டத்தில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இதில் 3 வராகன் எடை தூள் எடுத்துத் தேன், நெய் இவைகளைச் சேர்த்துக் குழைத்துக் காலை நேரத்தில் 40 நாட்கள் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

நீரிழிவு, சயம், ஈளை, இருமல், பித்தம், பித்தகாசம், சுவாசகாசம், பிரமேகம், உடம்பெரிச்சல் முதலானவை தீரும்.

*பத்தியம்*

பூசணிக்காய், எருமைமோர், எருமைப்பால், பழைய சோறு, புளி முதலானவைகளை நீக்கிவிடவும்.

## 18. இலவங்கப்பட்டை இலேகியம்

*சரக்கு*

சன்னலவங்கப்பட்டை
தான்றித்தோல்
கொத்துமல்லி விதை
வால் மிளகு
மிளகு
ஓமம்
சிற்றரத்தை
சிறுதேக்கு
சீரகம்
சுக்கு
திப்பிலி
தேற்றாங்கொட்டை

இவைகள் வகைக்கு 1 பலம்.

சாதிப்பத்திரி

ஏலக்காய்

கிராம்பு

அக்கிராகாரம்

சாதிக்காய்

கோஷ்டம்

தாளிசப்பத்திரி

இவைகள் வகைக்கு 2 வராகன் எடை.

சுத்திசெய்த கஞ்சா 1/4 பலம்

கோரோசனை 20 குன்றி

*செய்முறை*

இவைகள் எல்லாவற்றையும் ஒன்று கலந்து இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும். இதனுடன் பனைவெல்லம் 10 பலம் சேர்த்துப் பசுவின் பால் விட்டு இடித்து இலேகியம் ஆக்கிக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்த இலேகியம் 2 வராகனெடை அளவு எடுத்து உட்கொள்ள சயம், வெட்டை முதலானவை தீரும்.

## 19. கொட்டைக்கரந்தை இலேகியம்

*சரக்கு*

| | |
|---|---|
| கொட்டைக்கரந்தைச் சாறு | 1 படி |
| பசுவின் நெய் | 1 " |
| சிற்றரத்தை | |
| அதிமதுரம் | |
| கோஷ்டம் | |
| திப்பிலி | |
| **இவைகளின் தூள் வகைக்கு** | $^{1}/_{2}$ பலம் |
| **சர்க்கரை** | 4 " |

*செய்முறை*

இவைகளை ஒன்றுசேர்த்து அடுப்பின் மேலேற்றி இலேகிய பதமாக்கி இறக்கிக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு கொட்டைப் பாக்கு அளவு எடுத்துத் தினம் 2 வேளை சாப்பிடவும். உப்பில்லாமல் கஞ்சி உட்கொள்ளவும். மருந்து சாப்பிட்டு வருகையில் நோய் அதிகமாவதாகத் தெரிந்தால் பசுவின் பால் அதிகமாகச் சேர்த்துக் கொள்ளவும். 8-ஆவது நாளன்று ஆமணக்கெண்ணெய் சிறிது தலையில் தேய்த்துக் கொண்டு, நன்றாக ஊறி மறுநாள் வெந்நீரில் தலை முழுகவும். அன்று ரசம் சாதம் சாப்பிடவும். வாயிலிருந்தும், ஆசனத்திலிருந்தும் வெளியாகும் இரத்தப் போக்குகள் நிற்கும்.

## 20. தூதுவளை இலேகியம்

*சரக்கு*

தூதுவளை இலை
பிரமி இலை
ஆடாதோடை இலை
கண்டங்கத்தரி இலை

இவைகளைச் சிறுக அரிந்து, இடித்துப் பிழிந்த சாறு 2 படியுடன்

சிற்றரத்தை
கடுக்காய்த் தோல்
கோஷ்டம்
தான்றித் தோல்
கற்கடகசிங்கி
சாதிக்காய்
நெல்லிமுள்ளி
திப்பிலி
சிறுதேக்கு
கிராம்பு

சடாமாஞ்சில்

சாதிக்காய்

சுக்கு

வால் மிளகு

சாதிப்பத்திரி

*செய்முறை*

ஆகிய சரக்குகளை வகைக்கு 3 காசெடை வீதம் எடுத்துக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்துகொண்டு, தேன் விட்டு ஒன்று சேர்த்து அடுப்பின் மேலேற்றி எரித்து இலேகிய பதமாகக் கிண்டி இறக்கவும்.

*பயன்பாடு*

தினந்தோறும் தான்றிக்காய் அளவு எடுத்துக் காலையிலும் மாலையிலும் சாப்பிட இருமல், சயரோகம் முதலானவை தீரும். கைகண்டது.

## 21. திராட்சாதி இலேகியம்

*சரக்கு*

முந்திரிகை (திராட்சைப் பழம்)

கோஷ்டம்

வெட்டிவேர்

சீந்தில்

நிலவேம்பு

அதிமதுரம்

செந்தொட்டி

நெல்லிவற்றல்

கற்கடகசிங்கி

இலுப்பைப்பூ

கடுக்காய்

மான்கொம்பு

குமிழ்வேர்

விலாமிச்சவேர்

கறுஞ்சீரகம்

சீரகம்

இலவங்கம்

இலவங்கப்பட்டை

ஏலரிசி

சிறுநாகப்பூ

திப்பிலி

பற்பாடகம்

சிற்றரத்தை

பேரரத்தை

கடுகுரோகணி

வெல்லம்

இவை வகைக்குச் சம அளவு

தேன் - தேவையான அளவு

*செய்முறை*

சரக்குகளைச் சூரணம் செய்து வெல்லப்பாகில் தூவிக் கிளறி, இலேகிய பதத்தில் இறக்கி ஆறிய பின் தேன் கலந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

பித்தவாந்தி, சுரம், காசம்.

## 22. இலகு குண்டலாதி இலேகியம்

*சரக்கு*

சங்கங்குப்பி வேர்

கண்டங்கத்தரி வேர்

தூதுவளை வேர்

நொச்சி வேர்

இம்புரா வேர்

செம்முள்ளி வேர்

ஆடாதோடை வேர்

வகைக்கு 7 பலம்.

திப்பிலி 3 $^1/_2$ பலம்

*செய்முறை*

இவற்றை இடித்துத் தூளாக்கவும். பனைவெல்லம் -20 பலம் எடுத்துப் பாகுவைத்துத் தூளைத் தூவிக் கிளறி, தேவையான அளவு தேன், நெய் கலந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

உளைமாந்தை, சயம், இருமல் முதலியன தீரும்.

## 23. சேராங்கொட்டை இலேகியம்

*சரக்கு*

சுத்திசெய்த சேராங்கொட்டை 2 பலம்.

மஞ்சள்

திப்பிலி

எள்ளு

வாலுளுவை வித்து

கொடிவேலி வேர்

காட்டுச் சீரகம்

மிளகு

ஓமம்

பனைவெல்லம்

*செய்முறை*

இவைகள் வகைக்குப் பலம் 4 வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு நன்றாக இடித்து இலேகியம் போல் செய்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இதனை ஒரு மாதம் கழித்துத் தினந்தோறும் சுண்டை அளவு எடுத்து 2 வேளை உட்கொண்டுவர வேண்டும்.

*தீரும் நோய்*

கிரந்திகள் நீங்கும். தாது விருத்தி உண்டாகி, உடல் தேறும்.

## 24. மஞ்சள் முள்ளங்கி இலேகியம்

1. 13-பலம் மஞ்சள் முள்ளங்கிக் கிழங்கை வில்லை வில்லைகளாக அரிந்து, பசுவின் பால் விட்டு வேக வைத்துப் பால் சுண்டின சமயம் பீங்கான் தட்டுகளில் போட்டுப் பரப்பி வெயிலில் சுக்கு போல் உலர்த்தி, இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

2. இரண்டுபடி பசுவின் பாலை ஒரு ஈயம் பூசிய வாய் அகன்ற பாண்டத்தில் இட்டு அடுப்பில் வைத்துச் சிறு தீயாக எரித்துச் சல்லிக்கரண்டி கொண்டு அடி பிடிக்காமல் கிளறிக் கொடுத்து வந்து, நன்றாய்ச் சுண்டி இலேகியப் பதமாகக் காணும் பாற்சுண்டியை எடுத்து வைத்துக் கொள்ளவும்.

3. இருபத்தைந்து கோழிமுட்டைகளை வேகவைத்துத் தோலுரித்து மேலுள்ள வெண்கருவை நிக்கி, வெந்துள்ள மஞ்சட்கருவை எடுத்து வைத்துக்கொள்க.

4. ஆலமரத்து விழுதுகளின் நுணிகளிலுள்ள இளங் குருத்துக் குச்சிகளைச் கிள்ளிச் சேகரம் செய்து இடித்துச் சாறு பிழிந்து அதில் எட்டு ரூபாய் எடை சவ்வரிசியைப் போட்டு ஊறவைத்து உலர்த்தி இயந்திரத்தில் போட்டு அரைத்து மாவு பதத்தில் எடுத்து வைத்துக்கொள்க.

5. எட்டு ரூபாய் எடையுள்ள கொப்பரைத் தேங்காயைக் கொண்டு வந்து மேலுள்ள மெல்லிய தோலைச் சீவி, சன்னமாய்ப் பொடியாகும்பொருட்டு துருவிப்பலகையால் துருவி எடுத்து வைத்துக்கொள்க.

6. வாதுமைப்பருப்பு, அக்ரோட்பருப்பு வகைக்கு எட்டு ரூபாய் எடை வீதம் கொதிக்கின்ற நீரில் போட்டு ஊறவிட்டு, மேல் தோல் நீக்கி அம்மிக்கல்லில் வைத்து நன்றாய் அரைத்து வைத்துக்கொள்க.

7. கொட்டைப்பாக்கு, பேரீச்சங்காயின் கொட்டை ஆகிய இவ்விரண்டையும் வகைக்கு இரண்டு தோலா வீதம் இலேகியம் செய்வதற்கு இரண்டு தினத்திற்கு முன்னதாகவே ஒவ்வொன்றுக்கும் போதிய அளவு தண்ணீர் விட்டு ஊறவைத்து அம்மிக்கல்லில் வைத்து மைபோல் கெட்டி பதமாக அரைத்து, ஒவ்வொன்றையும் அடைதட்டி நெய்யில் காந்தாமலும் கருகாமலும் ரொட்டிபோல் நீர் சுண்ட, சுட்டு எடுத்து அரைத்து வைத்துக்கொள்க.

8. எட்டு ரூபாய் எடை அளவு வறுத்த கடலையைப் பொட்டு இல்லாமல் ஆய்ந்து இரும்பு உரலில் இட்டு இடித்துச் சல்லடை கொண்டு சலித்து மாவாக எடுத்து வைத்துக் கொள்க.

9. உலர்ந்த சீமைத் தண்ணீர்விட்டான் கிழங்கு தோலா - 10, ஏலரிசி தோலா-2, குங்குமப்பூ தோலா -1/2. இவற்றுள் தண்ணீர்விட்டான் கிழங்கை இடித்துச் சூரணித்தும் மற்ற இரு சரக்குகளைக் கல்வத்தில் இட்டு அரைத்தும் ஒருமிக்கக் கூட்டிக் கலந்து வைத்துக்கொள்க.

10. கற்கண்டு பலம் -30, நெய் பலம்-12, தேன் பலம் -6.

*செய்முறை*

மேற் கூறப்பட்ட ஒன்பது அங்கங்களிலும் உள்ள சரக்குகளை எல்லாம் ஒரு பெரிய பேசினிலாவது அல்லது ஈயம் பூசிய தட்டிலாவது போட்டு நன்றாய் உறவாகும்படிப் பிசறி வைத்துக் கொள்ளவும். இதற்கு மேல் ஒரு பெரிய இரும்புக் கடாயை அடுப்பில் வைத்து, பத்தாவது அங்கத்தில் குறிப்பிட்ட கற்கண்டைப் பொடி செய்து போட்டு ஒரு படித் தண்ணீர் விட்டுச் சிறு தீயாக எரித்துப் பாகுபதம் வரும் போது முன் சுத்தப்படுத்திய சூரணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுக் கிளறி அதில் தேனையும் நெய்யையும் விட்டு உறவாகும்படி நன்றாய்க் கிண்டிக் கீழிறக்கி ஆறவிட்டுத் தட்டுகளில் போட்டு அடை தட்டி இரண்டு மூன்று நாள் கடும் வெயிலில் வைக்கவும். அப்பால் இந்த இலேகியத்துடன் 1/2 வராகன் எடை தங்கச் செந்தூரத்தையும் 1-வராகன் எடை வெள்ளிப் பற்பத்தையும் கூட்டிப் பிசைந்து கல்லுரலுக்கும் உலக்கைப் பூணுக்கும் நெய் தடவி இந்த இலேகியத்தை விட்டுப் புரட்டிப் புரட்டி இடித்து நன்றாய் உறவான பதத்தில் சாடியில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்த இலேகியத்தில் வேளைக்கு 1/2 ரூபாய் எடை தினம் இரு வேளை சாப்பிட்டுப் பால் அருந்தவும்.

*தீரும் நோய்*

இப்படி 40 நாள் சாப்பிட, நரம்புக் கூடுகளுக்குப் பலம் உண்டாகி, தாது அளவுக்கு மிஞ்சிச் சிற்றின்பத்தில் கவர்ச்சியை உண்டாக்கும். இளைத்த சரீரம் பெருக்கும். நல்ல உடல் ஒளியை உண்டாக்கும்.

*குறிப்பு*

இந்த இலேகியத்தில் தங்கச் செந்தூரம், வெள்ளிப் பற்பம் ஆகியவற்றைச் சேர்த்து இடிக்காமல் தனி இலேகியமாகக் கொடுக்கும்போது, அரிசி எடை அளவு தங்கச் செந்தூரமும் துவரம்பருப்பு அளவு வெள்ளிப் பற்பமும் கூட்டிக் கொடுக்கலாம். சயரோகங்களுக்குத் தங்கச் செந்தூரம், அரிசிப் பிரமாணமும், முத்துப் பற்பம் துவரம்பருப்புப் பிரமாணமும் கூட்டிக் கொடுத்தல் அதிக நன்மையைத் தரும். மேகவெட்டை உடையவர்களுக்கு வெள்வங்கப் பற்பத்தை வேளைக்கு 1/2குன்றிப் பிரமாணம் கூட்டிக்கொடுத்தல் நன்று.

*பத்தியம்*

நல்ல ஆகாரத்தைப் பசித்த நேரத்தில் உட்கொள்ளவும்.

## 25. ஆடாதோடை இலேகியம்

*சரக்கு*

இது குழந்தைகளுக்கு உண்டாகும் இருமலுக்கு உரிய மருந்தாகும். ஆடாதோடை, தூதுவளை, கண்டங்கத்தரி, கறுப்புப்பூனைக் காய்ஞ்சொறி.

*செய்முறை*

இவைகளின் ரசம் வகைக்குப் பலம் 3 ஒரு பழகிய புதுச் சட்டியில் இட்டு இந்நான்கிற்கும் சமபாகம் தேன் சேர்த்து, அதில் திப்பிலி, யானைத்திப்பிலி, அதிமதுரம், சிற்றரத்தை, பேரரத்தை, சுக்கு, அக்கிராகாரம், கடுக்காய், ஆகியவைகளின் சூரணம் வகைக்கு 1 1/2 வராகன் எடையாக நிறுத்துப் போட்டுச் சிறு தீயில் எரித்து இரசாயன முறைப்படி விரல் அழுந்தும் பாகுபதத்தில் காய்ச்சி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

குழந்தைகளுக்கு உண்டாகும் இருமல், இரைப்பு முதலிய ஐயம் சம்பந்தமான நோய்களுக்குப் பருவத்துக்கேற்றபடி கடலை, மொச்சை அளவு தினம் மூன்று வேளை நாவில் தடவிக்கொண்டு வருக. இதனோடு ஆமை ஓட்டுப் பற்பம் சேர்த்துக் கொடுத்தல் சாலச் சிறந்தது. பத்தியம் அவசியமன்று.

## தைலங்கள்

### 1. தூதுவளைத் தைலம்

*சரக்கு*

தூதுவளை

கையாந்தகரை

தேட்கொடுக்கி

ஆடாதோடை

சங்கம் கொழுந்து

கீழாநெல்லி

நொச்சில்

சுழலாவாரை

சிறுகத்தரிச் சமூலம்

பேராமுட்டி

இச்சரக்குகளின் கொழுந்து வகைக்கு ஒரு பிடி எடுத்துச் சிறுக அரித்து, 1 படி நல்லெண்ணெய் விட்டு

சுக்கு

திப்பிலி

வெட்பாலை அரிசி

ஓமம்

அழிஞ்சில் விதை

கோரைக் கிழங்கு

கறுஞ்சீரகம்

கடுகு

வாய்விளங்கம்

காட்டாமணக்கு வேர்

கண்டங்கத்தரி வேர்ப்பட்டை

மிளகு

அதிவிடயம்
சிறுதேக்கு
பெருங்குரும்பை
வசம்பு
பெருங்காயம்
கடுகுரோகணி
பெருமரப்பட்டை
தூதுவளை வேர்
கொடிவேலி வேர்ப்பட்டை

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு 1 வராகன் எடை வீதம் எடுத்துத் தண்ணீர் விட்டு அரைத்து மேற்கூறிய சரக்குகளுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றிக் கொஞ்சம் கொஞ்சமாக 3 நாள் எரித்து, 4-ஆவது நாளன்று பக்குவப்படுத்தி இறக்கி வடிகட்டிக்கொள்ளவும்.

*பயன்பாடு*

வேண்டும்போது காலை நேரங்களில், இத்தைலத்தில் ஒரு கழஞ்சு அளவு உட்கொண்டுவரவும்.

*தீரும் நோய்*

ஈளை, மூலம், சுவாசகாசம், பக்கசூலை, மந்தாக்கினி, வயிற்றிலுள்ள புழு, இருமல், குன்மம், பெருவயிறு, சுவையின்மை, நெஞ்சடைப்பு, கிராணி முதலான பற்பல நோய்களும் தீரும்.

## 2. அசனவில்வாதித் தைலம்

*சரக்கு*

வேங்கைச் சிராய்
சீந்தில் தண்டு
வில்வவேர்
சிற்றாமுட்டிவேர்

*செய்முறை*

இவைகளை வகைக்கு 8 பலம் எடுத்துத் தண்ணீர் 8 மரக்கால் விட்டு, அடுப்பின் மேலேற்றி மந்தாக்கினியால் எரித்து , 1 மரக்காலாகும் வரைச் சுண்டக் காய்ச்சவும். இதை 12 நாளைக்குக் கொஞ்சம் கொஞ்சமாக எரித்து வரவேண்டும். பதின்மூன்றாம் தினத்தன்று இக் குடிநீரை வடிகட்டி இத்துடன்,

அமுக்கரா வேர்ப்பட்டை
பேரேலம்
சிற்றரத்தை
சிற்றாமுட்டிவேர்
தக்கோலம்
கோரைக்கிழங்கு
விலாமிச்சைவேர்
கடுக்காய்த் தோல்
நெல்லி வற்றல்
சடாமாஞ்சில்
கிராம்பு
ஏலக்காய்
வெட்டிவேர்
நன்னாரிவேர்
பச்சிலை
பூலாங் கிழங்கு
தான்றிக்காய்த் தோல்
அதிமதுரம்
தேவதாரு
சுக்கு
தாமரையிலைச் சுருள்
இலவங்கப்பத்திரி
செங்கழுநீர்க் கிழங்கு

மஞ்சள்

மரமஞ்சள்

செண்பகப்பூ

சாதிக்காய்

இச்சரக்குகளை வகைக்கு ஒரு வராகன் எடை வீதம் எடுத்துப் பசுவின் பால் விட்டு அரைத்துக்கொண்டு, சுத்தமான எள்ளெண்ணெய் 4 படி விட்டு எல்லாவற்றையும் ஒன்று கலந்து, அடுப்பின் மேலேற்றி 5 நாளைக்கு மந்தமான அக்கினியால் எரிக்கவும். ஆறாவது நாளன்று பதமாக்கி இறக்கி வடிக்கட்டிப் பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, புனுகு ஆகிய மூன்றிலும் வகைக்கு ஒரு வராகன். எடை வீதம் எடுத்துத் தூளாக்கி எண்ணெயுடன் கலந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

மூன்று நாளைக்கு ஒருமுறை தலையில் தேய்த்துக் குளிக்கவும். 3 துளிகள் மூக்கிலும் நசியமாக இடவும்.

*தீரும் நோய்*

வாதம், பித்தம், கபம் தொடர்பானப் பலவித நோய்களும், காதடைப்பு, இரைச்சல், தலைவாயு, மண்டை நோய், கண் நோய்கள் முதலியனவும் தீரும்.

## 3. அழிஞ்சில் வேர்த் தைலம்

வடக்கே நோக்கிப் போகிற அழிஞ்சில் வேரைப் பார்த்து வெட்டிக்கொண்டு வந்து, தண்ணீர் விட்டு நன்றாக அரைத்து, அதன் விழுதில் எலுமிச்சங்காய் அளவு எடுத்து ஒரு படி நல்லெண்ணெயில் குழப்பி, அபின் இரு குன்றி அளவும் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பதமாக எரித்து வடிக்கவும். தினந்தோறும் இதனால் தலைமுழுகிவரத் தீராத பீனிசங்கள் தீரும்.

## 4. ஆதண்டைத் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| ஆதண்டைச் சாறு | 2 படி |
| நல்லெண்ணெய் | 1 " |

இவைகளை ஒன்று கலந்து

| | |
|---|---|
| சிற்றரத்தை | 5 பலம் |
| மஞ்சள் | 5 " |

*செய்முறை*

இந்த இரண்டையும் சாறு விட்டரைத்து, மேற்படி எண்ணெயுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பதமாக எரித்து வடிகட்டவும்.

*பயன்பாடு*

இதை 4 நாளைக்கு ஒருமுறை தலையில் தேய்த்துக்கொண்டு, சிகைக்காய் இட்டு வெந்நீரில் குளிக்கவும். இவ்வாறு 5 முழுக்குகள் இடவும். பீனிசங்கள் அனைத்தும் தீரும்.

## 5. இஞ்சித் தைலம்

*சரக்கு*

இஞ்சிச் சாறு, கஞ்சாங்கோரைச் சாறு, கற்பூரவல்லிச் சாறு, வெற்றிலைச் சாறு, பசுமஞ்சள் சாறு, நொச்சிச் சாறு, துளசிச் சாறு.

இச் சாறு வகைகளை வகைக்கு 1/2 படி எடுத்துச் சுத்தமான நல்லெண்ணெய் 1 படி விட்டுக் கலந்து கொள்ளவும்.

மரமஞ்சள், பேரரத்தை, கஸ்தூரி மஞ்சள், சதகுப்பை, கம்பிப்பிசின், கிராம்பு, கறுஞ்சீரகம், கோஷ்டம், வலம்புரிக்காய், அதிமதுரம், ஏலக்காய், சிற்றரத்தை, செண்பகப்பூ, வசம்பு, இந்துப்பு.

*செய்முறை*

இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து நன்றாகச் சாறு விட்டு அரைத்து, முன் சொன்ன சாறு கூட்டிய எண்ணெயுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றிச் சிறு தீயாக எரித்து, மெழுகு பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

காலம், நோயின் வன்மை ஆகியவற்றை அறிந்து இதனால் தலைமுழுகி, நசியமும் செய்யவும்.

***தீரும் நோய்***

பீனிசம், நாசி நோய்கள் தீரும்.

## 6. எலுமிச்சைத் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | 4 நாழி |
| பசுவின் பால் | 4 " |
| எலுமிச்சஞ் சாறு | 4 " |
| அவுரிச் சாறு | 1 " |
| துளசிச் சாறு | 1 " |
| சங்கம்பழச் சாறு | 1 " |

இவற்றை ஒன்றுகூட்டிக் கொள்ளவும்.

அதிமதுரம், நன்னாரி வேர், கோஷ்டம், சாதிப்பத்திரி, கிராம்பு, சிறுநாகப்பூ, சுக்கு, முந்திரிப்பழம், ஆத்திப்பூ, திப்பிலி, விலாமிச்சம் வேர், அகில் கட்டை, சந்தனம், வெட்டிவேர், மிளகு, கோரைக் கிழங்கு, சாதிக்காய், சங்கம் வேர்.

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு ஒரு பலம் எடுத்துத் தூள் செய்து, பசுவின் பால் விட்டு அரைத்து, சாறு கூட்டிய எண்ணெயுடன் கலந்து அடுப்பின் மேலேற்றிச் சிறு தீயாக எரிக்கவும். 2 நாள் கழித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

தைலத்தைச் சிரசில் தேய்த்து, பயற்று மாவைக் கொண்டு கழுவவும்.

*தீரும் நோய்*

இவ்வாறு 3 முறை செய்யவும். இதனால் மூக்கிலிருந்து நீர் வடிதல், கபால சூலை, கபால வாயு, பீனிசங்கள் ஆகியவை தீரும்.

## 7. கண்டங்கத்தரித் தைலம்

*சரக்கு*

கண்டங்கத்தரி விரை
கொடிவேலி வேர்
ஓமம்
எருக்கம் வேர்

புங்கங்கொட்டை

செவ்வியம்

*செய்முறை*

இவ்வாறு சரக்குகளையும் வகைக்கு 2 காசெடை வீதம் எடுத்துப் பசுவின் கோமியம் விட்டு நன்றாக அரைத்து, அந்த விழுதிற்கு 4 மடங்கு சுத்தமான நல்லெண்ணெய் விட்டு அடுப்பின்மேல் வைத்துச் சிறு தீயிட்டு எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

தினந்தோறும் காலை, மாலை வேளைகளில், மும்மூன்று துளி வீதம் மூக்கில் விட்டு நசியம் செய்யவும். 10 தினத்தில் பீனிசம் தீரும்.

## 8. சாதிபலாதி தைலம்

*சரக்கு*

முன்னை வேர்

குமிழம் வேர்

தூதுவளை வேர்

சிற்றாமல்லி வேர்

வாகை வேர்

கண்டங்கத்தரி வேர்

பாதிரி வேர்

நெருஞ்சில் வேர்

பேராமல்லி வேர்

சிற்றாமுட்டி வேர்

இவ்வேர் வகைகள் பத்தையும் வகைக்கு ஒரு பலம் எடுத்துக் கொள்ளவும்.

கோரைக் கிழங்கு

சிறுதேக்கு

சீந்திற் கொடி

கோஷ்டம்

பற்பாடகம்

திப்பிலி

சிறுகாஞ்சொறி

இவைகள் வகைக்கு 1/8 சேர் (1 பலம்).

| | | |
|---|---|---|
| ஓமம் | $^1/_2$ | பலம் |
| பிரண்டை | $^1/_2$ | " |
| பேய்ப்பீர்க்கு | 1 | " |
| புரசம் வித்து | 1 | " |
| சுக்கு | $^1/_4$ | " |

*செய்முறை*

இந்தச் சரக்குகளையும் ஒன்று கலந்து இடித்துத் தூளாக்கி, வேண்டும்போது சிறிது தூளுடன் 8 மடங்கு நீர் விட்டு, நாலில் ஒரு பாகமாகக் காய்ச்சிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினந்தோறும் பருகிவர நீர்க்கோவை தீரும்.

## 9. சிற்றாமுட்டித் தைலம்

*சரக்கு*

சிற்றாமுட்டி

சீந்திற்கொடி

சிறுகீரை வேர்

கோரைக் கிழங்கு

நிலவேம்பு

தூதுவளை

நன்னாரி

ஓரிதழ்த் தாமரை

அமுக்கராக் கிழங்கு

*செய்முறை*

இவைகளை வகைக்கு ஒரு பலம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்து, 6 படி தண்ணீர் விட்டு அடுப்பின் மேலேற்றி ஒரு படியாகச் சுண்டக் காய்ச்சி

பசுவின் பால் 1 படி, பசுவின் நெய் 1 படி, நல்லெண்ணெய் $^{1}/_{2}$ படி, ஊமத்தஞ்சாறு $^{1}/_{2}$ படி இவற்றையும் கூடவிட்டு

சுக்கு
திப்பிலி
மிளகு
சீரகம்
இந்துப்பு
கோஷ்டம்
அதிமதுரம்
கிராம்பு

இச்சரக்குகளை வகைக்கு $1^{1}/_{4}$ வராகன் எடை எடுத்துப் பால் விட்டு அரைத்து, சாறு கலந்த எண்ணெய் வகைகளுடன் ஒன்று கலந்து, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதமாக இறக்கவும்.

*பயன்பாடு*

இதனை ஒரு துட்டெடை வீதம் காலை, மாலை, பருகிவர மூக்கு நீர்ப் பாய்ச்சல் நீங்கி சரீரமும் பலம் பெறும்.

## 10. தாழை விழுதுத் தைலம்

*சரக்கு*

தாழை விழுதுச் சாறு
நெல்லிக்காய்ச் சாறு
தண்ணீர்விட்டான் சாறு
கையாந்தகரைச் சாறு
வரிக்கற்றாழஞ் சாறு
சீந்தில் கொடிச் சாறு
முசுமுசுக்கைச் சாறு

இச்சாறு வகைகள் வகைக்கு 1 படி.

சுத்தமான எள்ளெண்ணெய் 4 படி
பசுவின் பால் 1 படி

இவைகளுடன்

- கிராம்பு
- நன்னாரி வேர்
- கோரைக் கிழங்கு
- சாதிக்காய்
- கோஷ்டம்
- சாதிப்பத்திரி
- பூலாங்கிழங்கு
- தாமரையிலைச் சுருள்
- மல்லிகைப்பூ
- விலாமிச்சம் வேர்
- வெட்டிவேர்
- செங்கழுநீர்க் கிழங்கு
- அதிமதுரம்
- புனுகுச் சட்டம்
- சடாமாஞ்சில்
- குரோசாணி ஓமம்
- முந்திரிகைப்பழம் (கொடிமுந்திரி)
- மகிழம்பூ
- சந்தனம்
- செவ்வல்லிக்கொடி
- கடுக்காய்த் தோல்
- நெல்லிக்காய்த் தோல்
- தான்றிக்காய்த் தோல்

*செய்முறை*

இம்மருந்து வகைகளை வகைக்கு 1 1/4 வராகன் எடை எடுத்துப் பசுவின் பால் விட்டு அரைத்துச் சாறு கூட்டிய எண்ணெய் வகையில் கலந்து அடுப்பின்
9 மீதேற்றி, மெதுவாக எரித்துப் பதத்தில் இறக்கி வடிகட்டிக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இதனைத் தலையில் தேய்த்து முழுகிவரவும்.

*தீரும் நோய்*

தலை நோய்களும் சகல பீனிசங்களும் தீரும்.

## 11. மாதுளம்பூத் தைலம்

*சரக்கு*

மாதுளம்பூச் சாறு

துளசிச் சாறு

நொச்சிச் சாறு

தும்பைச் சாறு

*செய்முறை*

இவைகள் வகைக்குக் கால் சேர் எடுத்து, மிளகு 1 பலம் சேர்த்து அரைத்து, நல்லெண்ணெய் 1 சேர் விட்டுக் குழப்பி, அடுப்பின் மீதேற்றிப் பக்குவமாக எரித்து வடித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தலைமுழுகிவரச் சகல பீனிசங்களும் தீரும்.

## 12. மிளகுத் தைலம்

*சரக்கு*

ஒரு படி நல்லெண்ணெயில் $^1/_8$ படி மிளகை நுணுக்கிப் போட்டு 10 நாளைக்கு ஊற வைக்கவும். பின்பு அதைத் தலையில் தேய்த்துக் குளிக்கவும். மறுநாள்

ஆலம் மொட்டு

விடத்தேரை வேர்ப்பட்டை

*செய்முறை*

இவை இரண்டையும் வகைக்கு ஒரு எலுமிச்சங்காய் அளவு எடுத்து நன்றாக அரைத்து ஒரு படி பசுவின் நெய்யில் குழப்பி, அபினி 1 கழஞ்சும் கூட்டிப் பக்குவமாகக் காய்ச்சி வடிக்கவும்.

*பயன்பாடு*

இதைத் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் 3 துளிகள் வீதம் மூக்கில் நசியம் செய்ய, 18 வகை பீனிச நோய்களும் தீரும். பல விதத் தலைவலிகளும் குணமாகும்.

## 13. மிளகுத் தைலம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| மிளகு | 2 பலம் |
| அறுகம் வேர் | 1 பலம் |
| கோரைக் கிழங்கு | 1 பலம் |

*செய்முறை*

இவைகளை வெயிலில் வைத்துக் காய்ந்தபின் இடித்துக் கொள்ளவும். நல்லெண்ணெய் 1/2 படியும் நெய் 1/2 படியும் எடுத்துக் கலந்து, அதனுடன் மேற்படித் தூளை இட்டுச் சூரிய புடமாக வைக்கவும்.

*பயன்பாடு*

இதை 3 துளிகள் வீதம் காலை, மாலை இரு வேளையிலும் நசியம் இடவும். 10 நாள் செய்யவும். 4 நாளைக்கு ஒருமுறை இத்தைலத்தைத் தலையில் தேய்த்து மூழ்கி வரவும்.

*தீரும் நோய்*

பீனிசங்கள் தீரும்.

*பத்தியம்*

பசுவின் பாலை வேண்டிய மட்டும் சேர்த்து வரவும். மாமிசம் கூடாது.

## 14. முள்ளுக்கத்தரி தைலம்

*சரக்கு*

இந்துப்பு
வாய்விளங்கம்
முருங்கை வேர்

மிளகு

முள்ளுக் கத்தரிப் பழம்

துளசி வேர்

சுக்கு

நேர்வாள வேர்

திப்பிலி

*செய்முறை*

இச்சரக்குகளைத் தனித்தனியே சரி எடை எடுத்துப் பசுவின் கோமியம் விட்டு அரைத்து, விழுதிற்கு 4 மடங்கு நல்லெண்ணெய் சேர்த்து அடுப்பின் மேல் வைத்துப் பதமாக எரித்து வடிக்கவும்.

*பயன்பாடு*

இத்தைலத்தினால் நசியம் இட, துர்நாற்றம் எல்லாம் தீரும்.

## 15. மூதண்டத் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| மிளகு | 2 பலம் |
| அறுகம் வேர் | 1 " |
| கோரைக் கிழங்கு | 1 " |

*செய்முறை*

இவைகளை வெயிலில் வைத்துக் காய்ந்தபின் இடித்து, நல்லெண்ணெய் $^1/_2$ படியும். நெய் $^1/_2$ படியும் எடுத்துக் கலந்து, அதனுடன் மேற்படித் தூளை இட்டுச் சூரிய புடமாக வைக்கவும்.

*பயன்பாடு*

இதை 3 துளிகள் வீதம் காலை மாலை இரு வேளையிலும் நசியம் இடவும். 10 நாள் செய்யவும். 4 நாளைக்கொருமுறை இத்தைலத்தைத் தலையில் தேய்த்து முழ்கிவரவும்.

*தீரும் நோய்*

தலை நோயும் பீனிசமும் தீரும்.

## 16. வில்வாதித் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| செப்புநெருஞ்சிச் சாறு | 1 படி |
| வில்வப்பழச் சாறு ஒரு விளாங்காய் அளவு. | |
| மிளகு | $^1/_4$ சேர் |
| வலம்புரிக்காய் | $^1/_4$ " |

*செய்முறை*

இவ்விரண்டையும் சாறுவிட்டு அரைத்து நல்லெண்ணெய் ஒரு படியில் கலந்து, அடுப்பின் மீதேற்றிப் பக்குவமாக எரித்து வடித்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் தலை முழுகி வர, சிராய்ப்பீனிசம், இரத்தப் பீனிசம் ஆகியவை தீரும்.

## 17. வெள்ளாட்டுப் பால் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| வெள்ளாட்டுப் பால் | 4 சேர் |
| கையாந்தகரைச் சாறு | 4 " |
| நல்லெண்ணெய் | 1 " |
| வாய்விளங்கம் | |
| சுக்கு | |
| கையாந்தகரைத் தூள் | |
| அதிமதுரம் | |
| கோஷ்டம் | |

*செய்முறை*

இச்சரக்குகளை 1 வராகன் எடை எடுத்து வெள்ளாட்டுப் பால் விட்டு நன்றாக அரைத்து, மேற்சொல்லிய சாறு கூட்டிய எண்ணெயுடன் குழப்பி, அடுப்பிலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும்.

*பயன்பாடு*

இத்தைலத்தினால் 3 நாளைக்கு நசியம் செய்யத் தலை நோய்கள் தீரும்.

## 18. நாய்வேளைத் தைலம்

*சரக்கு*

இரசம், அபின், முடிக்காரம், சங்கு, கந்தகம், குருத்துருக்கம் பிசின், தாளகம்.

*செய்முறை*

இச்சரக்குகளைச் சமம் எடுத்துப் பசுவின் நெய்யினால் அரைத்துத் துணியில் ஊட்டி உலர்த்தித் திரியாகச் செய்துகொண்டு, நெய்யில் தோய்த்துக் கொளுத்தி அணைத்துவிடவும்.

*பயன்பாடு*

ஒரு கொருக்காய்த் தட்டைக் குழாய் வழியாகப் புகையை வரும்படிச் செய்து கவனமாக மூக்கினுள் அப்புகையைக் காலை, மாலை கொள்ளவும். எல்லா வகைப் பீனிசங்களும் தீரும்.

## 19. மயூரத் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| மயிலின் ஊன் | 5 பலம் |
| வெள்ளை வெங்காயம் | 5 " |
| சீரகம் | 2 " |
| சுக்கு | 1 " |
| மிளகு | 1 வராகன் எடை |
| பெருங்காயம் | 1 " |

*செய்முறை*

இவைகளை நன்றாகச் சூரணம் செய்து மாமிசத்துடன் பிசறி வைத்துக்கொண்டு, நல்லெண்ணெய் 5 சேர் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

*பயன்பாடு*

ஒரு ஆழாக்கு அளவு எடுத்து, தினம் 2 வேளை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

8 நாளைக்குள் சயரோகம் தீரும். உளைமாந்தை, இருமல், வழலை முதலான நோய்களுக்கும் நல்லது.

## 20. நாசிரோக நாசத் தைலம்

*சரக்கு*

எள்நெய்
பசும் பால்
வழுக்கையுடைய இளநீர்

இம்மூன்றும் வகைக்கு 1 படி எடுத்து ஒரு பாத்திரத்தில் ஊற்றி அதில்

சந்தனம்
தாமரை வளையம்
வெட்டிவேர்
விலாமிச்சம் வேர்
கஸ்தூரி மஞ்சள்
தேற்றாங்கொட்டை
ஏலம்
கோரைக் கிழங்கு
சீரகம்
பூலாங்கிழங்கு
பச்சிலை
செங்கழுநீர்க் கிழங்கு
தண்ணீர்விட்டான் கிழங்கு
அதிமதுரம்
மஞ்சிட்டி
சண்பக மொக்கு

புனுகுச் சட்டம்

குங்குமப்பூ

ஆகியவற்றில் வகைக்கு 1 வராகன் எடை.

*செய்முறை*

கடைசி இரண்டு சரக்குகள் தவிர மற்றவைகளை இடித்துப் பொடித்து மேற்படியில் கலந்து, மெல்ல எரித்து, கடைசியாகக் கூறப்பட்ட குங்குமப் பூவையும் புனுகுச் சட்டத்தையும் பொடித்து இட்டுத் தைலத்தை வடிக்கவும்.

*பயன்பாடு*

இதில் தலை மூழ்கி வரவும்.

*தீரும் நோய்*

மூச்சைத் தடுக்கின்ற பீனிசம், இரத்தப் பீனிசம், பக்குப் பீனிசம் ஆகிய பீனிச நோய்களும் மாசு என்கிற கண்களில் வரும் திமிர நோய்களும் விலகும்.

## 21. நொச்சித் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| நொச்சியிலைச் சாறு | 1 படி |
| எண்ணெய் | 1 " |

இவைகளை ஒரு பாத்திரத்தில் சேர்த்து அதில்

சடாமாஞ்சில்

கல்லுப்பு

வளையலுப்பு

பூநீறு

வெடியுப்பு

அட்டுப்பு

திரிகடுகு

கற்கடகசிங்கி

கோஷ்டம்

சிறுதேக்கு

முப்பலை

கண்டங் கத்தரிவேர்

இவை வகைக்கு $^1/_4$ பலம்.

*செய்முறை*

இவைகளை மேற்படிச் சாற்றில் அரைத்துக் கரைத்து அடுப்பில் ஏற்றிப் பக்குவத்தில் எரித்து வடிக்கவும்.

*பயன்பாடு*

அளவுப்படி உள்ளுக்குச் சாப்பிட்டு மூழ்கியும்வர, திரிகபங்கள் என்று சொல்லப்பட்ட காசம், சுவாசம், சயம் என்னும் மூன்றும், உடற்கடுப்பும் தீரும்.

## 22. பீனிசத் தைலம்

*சரக்கு*

எள்ளெண்ணெய்

நொச்சிச் சாறு

கரிசாலைச் சாறு

இவை வகைக்கு 2 படி.

கிரந்திதகரம்

சுக்கு

கோஷ்டம்

தேற்றான்கொட்டை

இந்துப்பு

சிற்றரத்தை

திப்பிலி

ஆமணக்கு வேர்

குடசப்பாலை வேர்

சதகுப்பை

வாய்விளங்கம்

அதிமதுரம்

இவை வகைக்கு $^1/_2$ பலம்.

*செய்முறை*

இவற்றை வெள்ளாட்டுப் பாலால் அரைத்து மேற்படிச் சாற்றில் கரைத்து அடுப்பில் ஏற்றிக் காய்ச்சி, பக்குவத்தில் வடிக்கவும்.

*பயன்பாடு*

8 நாட்களுக்கு ஒரு முறை மூழ்கியும், 4 நாட்களுக்கு ஒரு முறை நசியம் செய்தும் வர, பீனிச நோய்கள் தீரும்.

## 23. பிருங்காமலத் தைலம்

*சரக்கு*

கையாந்தகரைச் சாறு
நெல்லிக்காய்ச் சாறு
வெண்ணெய்

வகைக்கு 1 படி, பசும்பால் 2 படி.

*கற்கம்*

அதிமதுரம்
சந்தனம்
கோஷ்டம்
விலாமிச்சம்
அரத்தை
இலவங்கம்
கடுகுரோகணி

வகைக்கு $^{1}/_{4}$ பலம்.

*செய்முறை*

கற்கச் சரக்குகளைப் பால் விட்டு அரைத்து மேற்படிச் சாறு, வெண்ணெய், பால் இவற்றுடன் கலந்து காய்ச்சிப் பதத்தில் வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும்.

*பயன்பாடு*

இது தலை முழுகவும் உள்ளுக்கு அருந்தவும் மூக்கில் நசியமாகவும் உடம்பில் வைத்துக்கட்டவும் பயன்படும்.

*தீரும் நோய்*

கண் நோய், பித்தம், கை, கால், எரிவு, காதுமந்தம், பீனிசங்கள் நீங்கும். உடல் குளிர்ச்சி உண்டாகும். நூறாண்டு உயிர் வாழ்வர்.

## 24. நீர்க்குண்டித் தைலம்

*சரக்கு*

நொச்சி இலைச் சாறு
வெள்ளாட்டுப் பால்
எண்ணெய்

வகைக்கு 4 நாழி.

*கற்கம்*

சீரகம்
கறுஞ்சீரகம்
ஏலம்
கோஷ்டம்
செம்புளிச்சை
சாறணை
கஸ்தூரி மஞ்சள்
கடுகுரோகணி
முருங்கைவேர்
அமுக்கராக் கிழங்கு
சுக்கு
மிளகு
திப்பிலி
அகில்
சதகுப்பை
கடுக்காய்
நெல்லிக்காய்

தான்றிக்காய்

வகைக்கு 4 கழஞ்சு.

*செய்முறை*

இவற்றை அரைத்து முன் கலவையுடன் கலந்து காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

தலை மூழ்கியும், உடலில் தடவியும் வரச் சயம், சுவாசகாசம் தலைநோய் பீனிசம் ஆகியவை போகும்.

## 25. அசுவகந்தி பலாவாட்சாத் தைலம்

*சரக்கு*

அமுக்கராக் கிழங்கு

சிற்றாமுட்டி வேர்

கொம்பரக்கு

வகைக்கு 1 பலம்.

தணணீர் 16 பதக்கு

இவற்றைக் குடிநீரிட்டு $^1/_4$ பாகமாக வற்றிய பின் வடிகட்டிக்கொண்டு, அத்துடன்

எண்ணெய் 4 நாழி

பசுவின் தயிர்த் தெளிவு 1 பதக்கு

ஆகியவற்றைக் கலந்துகொள்ள வேண்டும்.

*கற்கம்*

சிற்றரத்தை

முந்திரிகை

சிற்றாமுட்டி

நன்னாரி

அதிமதுரம்

கோஷ்டம்

மரமஞ்சள்

சீரகம்

சதகுப்பை

கடுகுரோகணி

மஞ்சிட்டி

தேவதாரம்

பெருங்குரும்பை

சந்தனம்

கடுக்காய்

திப்பிலிமூலம்

அமுக்கரா

வகைக்கு 4 கழஞ்சு.

*செய்முறை*

இவற்றைக் கற்கமாக அரைத்து, மேற்படிக் கலவையுடன் கலந்து காய்ச்சிப் பதத்தில் வடிகட்டிக் கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

உடலில் பூசப் பலமும், தாதுவிருத்தியும் உண்டாகும். சயம், இருமல். மாறல்சுரம், சுவாசகாசம், வயிற்றுப் பொருமல் ஆகியவை தீரும்.

## 26. சித்தபலாதி தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| சிற்றாமுட்டி | 80 பலம் |
| மிளகு | 30 " |
| நல்லெண்ணெய் | 1 குறுணி |
| பசுவின் பால் | 1 " |

கோஷ்டம் , அதிமதுரம் வகைக்கு 4 பலம்.

*செய்முறை*

சிற்றாமுட்டி, மிளகை முறைப்படிக் குடிநீரிட்டுக்கொண்டு, கடைச் சரக்குகளைப் பாலில் அரைத்து, எண்ணெயில் கலந்து காய்ச்சிப் பதத்தில் வடிகட்டி வைத்துக்கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

தலையில் தேய்த்து மூழ்கிவரச் சயம், பீனிசம், தலை நோய்கள், கண் நோய்கள், மேக நோய்கள் ஆகியவை தீரும்.

## 27. கந்தகத் தைலம்

*சரக்கு*

| | |
|---|---|
| கந்தகம் | 3 பலம் |
| சாரம் | 1 " |
| வீரம் | வராகன் எடை 2 |
| இரசம் | 1 பலம் |
| வெடியுப்பு | 1 " |
| அரிதாரம் | வராகன் எடை 3 |
| இலிங்கம் | $^1/_2$ பலம் |
| பூரம் | $^1/_2$ " |
| பசுவின் வெண்ணெய் | படி $^1/_2$ |

*செய்முறை*

இந்தச் சரக்குகளைக் கல்வத்தில் போட்டு 2 அல்லது 3 நாள் வரை அரைத்து, முழுச்சீலையில் தடவிச் சுருட்டி ஒரு குரட்டினால் திரியின் இடையில் பிடித்துக்கொண்டு அடிபாகத்தில் கொளுத்தி எரியும்போது, அதிலிருந்து வடியும் தைலத்தைச் சேகரித்து மெல்லிய சீலையில் வடித்துப் புட்டியில் அடக்கம் செய்க.

*பயன்பாடு*

இதனைத் தேக திடத்திற்குத் தக்கவாறு 1/4 அல்லது 1/2 காசு அகலம் பரவும்படியாகக் கையில் விட்டுச் சர்க்கரையில் பிசறி, 20 நாள் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

தீராத குட்டம், காசம், குன்மம், வலி குன்மம், விரணம், பாரிசவாய்வு முதலியன குணமாகும்.

*பத்தியம்*

இதற்குப் பத்தியம் இல்லை.

## சூரண வகைகள்

### 1. குங்கிலியாதிச் சூரணம்

வெள்ளைக் குங்கிலியத்தைப் பொடி செய்து அதனுடன் சாறுவேளை வேர், வெள்ளைப்பூண்டு, வசம்பு ஆகியவைகளையும் சேர்த்து இடித்து வகைக்கு 1 பலம் எடுத்து, நல்லெண்ணெய் 2 சேர் விட்டுக் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும். இதனைத் தினமும் சாப்பிட்டுவரக் காசம், சுவாசகாசம் முதலியன நீங்கும்.

### 2. பஞ்சகோலாதிச் சூரணம்

*சரக்கு*

பஞ்சகோலம்
இலவங்கப் பட்டை
இலவங்கப்பத்திரி
கிராம்பு
ஏலக்காய்
சிற்றரத்தை
சிறுதேக்கு
மரமஞ்சள்
வாய்விளங்கம்
சாதிப்பத்திரி .
கொடிவேலி வேர்
அமுக்கராக் கிழங்கு
கோஷ்டம்
தாளிசப் பத்திரி
மிளகு
ஓமம்
சிறுநாகப்பூ
சீரகம்
சாதிக்காய்

*செய்முறை*

இவைகளை வகைக்குச் சம எடை எடுத்துக் கல்லுரலில் இட்டுச் சேதமாகாமல் இடித்துச் சூரணம் செய்துகொண்டு, இதற்குச் சம அளவு தேவதாரச் சூரணத்தைச் சேர்த்துக்கொண்டு பயன்படுத்தவும்.

*தீரும் நோய்*

கண்ணில் உள்ள காச வகைகள், திமிரம், சயரோகம், சுரம், பாண்டு, கடிவிடங்கள், குஷ்டம், குன்மம், அக்கினி மந்தம், பீனிசம், நீரடைப்பு ஆகியவைகள் தீரும்.

### 3. சித்திரமூலாதிச் சூரணம்

*சரக்கு*

கொடிவேலி வேர்

நிலவாகை

செந்தொட்டி வேர்

ஆடுதீண்டாப்பாளை

பிரண்டை

*செய்முறை*

இவைகளைச் சமூலமாகச் சமனெடை எடுத்துக்கொண்டு, நறுக்கி வெயிலில் காயப் போட்டு, மிளகு சரி எடை கூட்டிக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும்

*பயன்பாடு*

இதை ஒரு சுத்தமான பானையில் வைத்துக்கொண்டு வேண்டும்போது வெருகடியளவு (மூவிரல் கொள்ளும் அளவு) தூளை வெந்நீரில் கலந்து காலை நேரத்தில் குடிக்கவும். இருமல் தீரும். இதற்குப் பத்தியம் இல்லை.

### 4. முள்ளுக்கத்தரிவேர்ச் சூரணம்

முள்ளுக்கத்தரியின் வேர்த்தோலை நன்றாக உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்துகொண்டு, ஒரு வெருகடியளவுத் தூளை எடுத்து 4 படி நீரில் போட்டு, அடுப்பின் மேலேற்றி ஒரு சிறங்கை ஆகும் மட்டும் நன்றாக வற்றக் காய்ச்சி இறுத்துக் கொள்ளவும். பொரித்த வெங்காரம் ஒரு பணவெடையும் போட்டுச் சாப்பிடச் சுவாச காசங்கள், இருமல் முதலியவை தீரும்.

## 5. கடுக்காய்ச் சூரணம்

கடுக்காய்த் தோல், அதிவிடயம், காசுக்கட்டி இம்மூன்றையும் சமனெடை எடுத்துப் பொடி செய்து சூரணம் பண்ணித் தினம் காசெடை எடுத்துக் காலையில் தக்க அனுபானத்தில் சாப்பிட, ஈளை (கபக்கட்டு) தீரும்.

## 6. இலைக்கள்ளிச் சூரணம்

இலைக்கள்ளிச் செடியின் வடக்கே போகும் வேரை வெட்டிக் கொண்டு வந்து மேல் தோலைச் சீவிவிட்டு, துண்டு துண்டுகளாக நறுக்கி வெயிலில் காயவைக்கவும். பின்பு இதைக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணித்துக் கொள்ளவும். இச்சூரணத்தில் ஒரு அத்திக்காய் அளவு எடுத்து நெய்யுடன் குழைத்துக் காலை நேரங்களில் சாப்பிடவும். ஈளை, சோகை, இருமல், பித்தபாண்டு முதலியவை தீரும்.

## 7. வேலிப்பருத்திச் சூரணம்

வேலிப்பருத்தி இலை 2 காசளவு எடுத்து ஒரு புதுச்சட்டியில் இட்டு, அடுப்பின் மேலேற்றிச் சிவக்க வறுத்துக் கொள்ளவும். அதை இடித்துச் சூரணம் செய்து, அதனுடன் திப்பிலி, மிளகு, சுக்கு இவைகளையும் வகைக்கு 2 காசெடை எடுத்துச் சூரணித்துத் தேனில் குழைத்து வைத்துக்கொண்டு சாப்பிட்டுவரக் காசம், இருமல், ஈளை முதலிய நோய்கள் தீரும்.

## 8. நிலவிளாச் சூரணம்

நிலவிளா இலையைக் காயவைத்து இடித்துச் சூரணம் செய்து 1 1/2 வராகன் எடை தூளுடன் மிளகுப் பொடி 1 1/2 வராகன் எடையும் சேர்த்து 3 நாள் உண்டால் இருமல், கபம் தீரும்.

*பத்தியம்*

கீரை வகைகளையும் சாதத்தையும் உண்டு வரவும்.

## 9. இலவங்காதிச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| கிராம்பு | வராகன் எடை 1 |
| இலவங்கப்பட்டை | " |
| சதகுப்பை | " |

| | |
|---|---|
| மகரப்பூ | வராகன் எடை 1 |
| கறுஞ்சீரகம் | " |
| ஏலம் | " |
| ஓமம் | " |
| கோஷ்டம் | " |
| குரோசாணி ஓமம் | " |
| வாய்விளங்கம் | " |
| மாசிக்காய் | " |
| அக்கராகாரம் | " |
| தனியா | " |
| சீரகம் | " |
| தாளிசப்பத்திரி | " |
| சிறுதேக்கு | " |
| திப்பிலி மூலம் | " |
| செவ்வியம் | " |
| சடாமாஞ்சில் | " |
| சாதிக்காய் | " |
| சாதிப்பத்திரி | " |
| சமுத்திராப்பழம் | " |
| சிறுநாகப்பூ | " |
| அரத்தை | " |
| சுக்கு | " |
| மிளகு | " |
| திப்பிலி | " |
| பொன்முசுட்டை வேர் | " |
| விலாமிச்ச வேர் | " |

*செய்முறை*

இங்குக் கூறப்பட்ட இருபத்தொன்பது சரக்குகளையும் வெயிலில் உலர்த்தி நன்றாக இடித்துச் சூரணம் செய்து, சமனெடையாகச் சர்க்கரை கூட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு $^1/_2$ தோலா விகிதம் தினம் இரு வேளை, இருபது நாள் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சூதகவாயு, பேதி, சுரம், தாகம், கை, கால் எரிச்சல், இருதய அடைப்பு,. மயக்கம், மூலம், பெரும்பாடு, இருமல், இரைப்பு, எலும்புருக்கி முதலிய நோய்கள் குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 10. இலவங்காதிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

கிராம்பு
தக்கோலம்
கண்டங்கத்தரி வேர்
சாதிக்காய்
மிளகு
தூதுவளை
ஏலக்காய்
சுக்கு
சன்னலவங்கப்பட்டை
திப்பிலி

*செய்முறை*

இப்பத்து வகை சரக்குகளையும் சம அளவு எடுத்து நன்றாக வெயிலில் காயவைத்துக் கல்லுரலில் இட்டு இடிக்கவும். இச்சூரணத்தைத் துணியில் சலித்துக்கொண்டு ஒரு புதுப் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இதில் மூவிரல் கொண்ட அளவு (வெருகடி அளவு) எடுத்துச் சர்க்கரை கலந்தோ அல்லது தேனிலோ அல்லது இளநீரிலோ உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இவ்வாறு காலையிலும் மாலையிலும் சாப்பிட வயிற்றுப்பொருமல், பித்தம், வாந்தி, இருமல் முதலிய நோய்கள் தீரும்.

*பத்தியம்*

வாயுப் பண்டங்களை நீக்கிப் பத்தியமாகச் சாப்பிடவும். உளுந்து, மொச்சை, மாவுப் பண்டங்கள், கிழங்கு வகைகள் முதலியவைகளை நீக்கவும்.

### 11. கண்டங்கத்தரியாதிச் சூரணம்

*சரக்கு*

| | | |
|---|---|---|
| கண்டங்கத்தரி வேர் | 1 | " |
| சுக்கு | 2 | " |
| மிளகு | 3 | " |
| திப்பிலி | 4 | " |
| சீரகம் | 5 | " |

*செய்முறை*

இவைகளை ஒரு இரும்புச் சட்டியில் இட்டு அடுப்பின் மேலேற்றிப் பொன் வறுவலாக வறுக்கவும். பின்பு இவைகளை ஒரு கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்யவும்.

*பயன்பாடு*

மூவிரல் கொள்ளும் அளவு எடுத்துப் பசுவின் நெய்யுடன் குழைத்துக் காலையிலும் மாலையிலும் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல்.

## 12. திப்பிலிச் சூரணம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு படி கொள்ளும் அளவுள்ள ஒரு பானையை எடுத்து அதில் பசுவின் பால் 1/2 படி விட்டு, அதன் வாய்க்கு ஒரு வெள்ளைத் துணியினால் வேடு கட்டவும். அதில் ஒரு பலம் திப்பிலியை வைத்துப் பானையை அடுப்பின் மேலேற்றி 2 நாழிகை எரிக்கவும். பின்பு திப்பிலியை எடுத்துச் சூரணித்து அதற்குச் சரி எடை கற்கண்டுத் தூள் கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் $^1/_2$ வராகன் எடை சூரணத்தை வெந்நீருடன் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

10 நாளில் இருமல் தீரும்.

*பத்தியம்*

புகையிலை, புளி இவ்விரண்டையும் நீக்கவும்.

## 13. திப்பிலிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

| | | |
|---|---|---|
| திப்பிலி | 6 பலம் | |
| மிளகு | $^1/_2$ | " |
| கடுக்காய் | $^1/_2$ | " |
| தான்றிக்காய் | $^1/_2$ | " |
| கறுஞ்சீரகம் | $^1/_2$ | " |
| சிற்றரத்தை | $^1/_2$ | " |
| இலவங்கப்பட்டை | $^1/_2$ | " |
| ஏலம் | $^1/_2$ | " |
| சித்திரமூல வேர்ப்பட்டை | $^1/_2$ | " |

| | |
|---|---|
| சுக்கு | $2^1/_2$ பலம் |
| வால் மிளகு | $^1/_2$ " |
| நெல்லிவற்றல் | $^1/_2$ " |
| நற்சீரகம் | $^1/_2$ " |
| ஏலம் | $^1/_2$ " |
| கிராம்பு | $^1/_2$ " |
| தாளிசப்பத்திரி | $^1/_2$ " |
| குரோசாணி ஓமம் | $^1/_2$ " |
| சோம்பு | $^1/_2$ " |
| இலவங்கப்பத்திரி | $^1/_2$ " |

*செய்முறை*

மேற் கூறப்பட்ட பத்தொன்பது சரக்குகளையும் பொன்மேனியாக வாசனை கிளம்ப வறுத்து இடித்துச் சூரணம் செய்து கொள்க.

*பயன்பாடு*

வேண்டும்போது வெருகடி அளவு காலை, மாலையில் கொடுத்துக் கொண்டு வருக.

*தீரும் நோய்*

இருமல், ஈளை, சுவாசகாசம்.

*பத்தியம்*

குளிர்ச்சியான பண்டங்களைத் தள்ளி, இச்சாபத்தியமாக இருக்கவும்.

## 14. திப்பிலிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| திப்பிலி | பலம் 3 |
| மிளகு | கழஞ்சு 3 |
| ஏலம் | " |
| இலவங்கப்பத்திரி | " |
| அதிமதுரம் | " |

| | |
|---|---|
| நெல்லிவற்றல் | கழஞ்சு 3 |
| சாதிக்காய் | " |
| கிராம்பு | " |
| குரோசாணி ஓமம் | " |
| செவ்வியம் | " |
| நற்சீரகம் | " |
| கூகைநீறு | " |
| அமுக்கரா வேர் | " |
| சிற்றரத்தை | பலம் 3 |
| வால் மிளகு | கழஞ்சு 3 |
| இலவங்கப்பட்டை | " |
| கடுக்காய் | " |
| தான்றிக்காய் | " |
| சாதிப்பத்திரி | " |
| வாய்விளங்கம் | " |
| தாளிசப்பத்திரி | " |
| சிறுதேக்கு | " |
| கறுஞ்சீரகம் | " |
| மோடி | " |
| அமுக்கரா வேர் | " |

*செய்முறை*

மேற்கூறப்பட்ட சரக்குகளை நன்றாக உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்க.

தூதுவளை, கண்டங்கத்தரி, கரிசாலை ஆகியவற்றை நன்கு உலர்த்தித் தனியாக இடித்துச் சூரணம் செய்து சமனெடையாகக் கலந்து அதில் 1 படி அளவிற்கு எடுத்து அதனுடன் முன் சித்தப்படுதிய சூரணத்தைக் கலந்து மொத்த எடைக்கு அரைபாகம் வெள்ளைச் சர்க்கரை கூட்டி ஒருமித்து உறவாகும்படி கலந்து வைத்துக் கொள்க.

*பயன்பாடு*

வேண்டும் போது இந்தச் சூரணத்தை வேளைக்கு மூவிரல் அளவு காலை, மாலை கொடுத்து வருக.

*தீரும் நோய்*

ஈளை, இருமல், சயம், அரோசகம், வாந்தி, குடல் புரட்டல், வாயு, வயிற்று நோய், கோழை, வாந்தி.

*பத்தியம்*

புளிப்பு நீக்கி, இச்சாபத்தியம்.

## 15. ஏலாதிச் சூரணம்

| | |
|---|---|
| ஏலக்காய் | 5 பங்கு |
| கிராம்பு | 5 " |
| சுக்கு | 3 " |
| தாளிசப்பத்திரி | 1 " |
| எவச்சாரம் | 5 பங்கு |
| திப்பிலி | 4 " |
| மிளகு | 2 " |
| எண்ணெய் வெங்காரம் | 1 " |

*செய்முறை*

இவைகளை உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து, சர்க்கரை 32 பலம் போட்டுக் கலந்து வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

காலை வேளைகளில் ஒரு வெருகடித் தூளைத் (மூவிரலில் கொண்ட அளவு) தேனிலோ இஞ்சிச் சாற்றிலோ 20 நாளைக்கு உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இருமல், இரைப்பு முதலியவை தீரும்.

## 16. ஏலாதிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

ஏலக்காய்
கிராம்பு
திப்பிலி
மிளகு
சுக்கு

*செய்முறை*

இச்சரக்குகளைச் சமனெடை எடுத்து உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்து சூரணம் செய்து, சரி எடை சர்க்கரை கூட்டிக் கலந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

காலையிலும் மாலையிலுமாக 10 நாட்களுக்கு ஒரு வெருகடி அளவு சாப்பிட்டுக் கொண்டுவரவும்.

*தீரும் நோய்*

இருமல்.

## 17. ஏலாதிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

ஏலக்காய்
கிராம்பு
வாய்விளங்கம்
கோரைக் கிழங்கு
சுக்கு
சிறுதேக்கு
புட்கரமூலம்
மிளகு

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு 1/2 பலம் வீதம் எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து கொண்டு, திப்பிலிச் சூரணம் 2 பலமும் போட்டுக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

நோயின் பலத்தை அறிந்து 1 முதல் 1/2 தோலா எடுத்து வெந்நீருடன் உட்கொள்ளவும். தினம் காலையிலும் மாலையிலும் உண்டு வரவும்.

*தீரும் நோய்*

இருமல்.

*பத்தியம்*

புளி, புகையிலை முதலியவைகளையும் இதர வாயுப் பண்டங்களையும் நீக்கவும்.

**18. ஏலாதிச் சூரணம் (வேறு முறை)**

*சரக்கு*

குங்குமப்பூ

திப்பிலி

மிளகு

சுக்கு

ஏலக்காய்

இச்சரக்குகளை வகைக்கு 1 வராகன் எடை எடுத்து இடித்து வைத்துக்கொள்ளவும்.

கையாந்தகரைச் சாறு

நொச்சில் சாறு

கழற்சிக் கொடிச் சாறு

சாறடைச் சாறு

குப்பைமேனிச் சாறு

ஆதண்டைச் சாறு

முசுமுசுக்கைச் சாறு

*செய்முறை*

இவைகள் வகைக்குக் கால் சேர் வீதம் எடுத்துச் சூரண வகைகளுடன் கல்வத்தில் இட்டு, ஒவ்வொரு சாறாக விட்டு நன்றாக அரைத்து, அவ்விழுதை 11 உருண்டைகளாக உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இவ்வுருண்டையில் ஒன்றை எடுத்து அதை மூன்றிலொரு பங்கு செய்து வெந்நீரில் கரைத்து, காலை, மாலை இரு வேளையிலும் மூன்று துளிகள் வீதம் மூக்கில் நசியம் செய்யவும்.

*தீரும் நோய்*

பீனிசங்கள் தீரும்.

**19. ஏலாதிச் சூரணம் (வேறு முறை)**

*சரக்கு*

ஏலம்

இலவங்கம்

இலவங்கப்பட்டை

முந்திரி

திப்பிலி

இராயபுரிச் சர்க்கரை

பேரீச்சம் பழம்

வகைக்கு 1 பலம்.

*செய்முறை*

இவற்றை இடித்துச் சூரணித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

*பயன்பாடு*

கழற்சி விதையளவு தேனில் அனுபானித்து, தினமும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்கள்*

சயம்

மார்பு நோய்

தலைச் சுற்றல்

பிரமை

சோணித நோய்

அக்கினிமந்தம்

பித்தம்

வயிற்றுவலி

சூலை

காசம்

## 20. இலகு ஏலாதிச் சூரணம்

*சரக்கு*

| | | |
|---|---|---|
| ஏலம் | 64 | வராகன் எடை |
| சுக்கு | 32 | " |
| கூகைமாவு | 16 | " |
| தாளிசப்பத்திரி | 8 | " |
| சிறுநாகப்பூ | 4 | " |
| மிளகு | 2 | " |
| கிராம்பு | 1 | " |

*செய்முறை*

மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் இடித்துச் சூரணம் செய்து மொத்த எடைக்குச் சம அளவு வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இச் சூரணத்தை வேளைக்குத் திரிகடி பிரமாணம் காலை, மாலை இருபது நாள் கொடுக்க வேண்டும்.

*தீரும் நோய்*

பித்தம் சம்பந்தமான பல பிணிகள், மேகஊறல், அரிகிரந்தி, பெரும்பாடு, எலும்புருக்கி முதலியவை தீரும்.

*பத்தியம்*

நோயின் வன்மை, மென்மைக்கு இசைந்தவாறு பித்தத்தை விருத்தி செய்யக்கூடிய பதார்த்தங்களைத் தள்ளி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 21. மகா ஏலாதிச் சூரணம்

*சரக்கு*

சிறுநாகப்பூ
சீரகம்
பெருங்கோரைக் கிழங்கு
சடாமாஞ்சில்
சந்தனத்தூள்
வெண்சாறணைவேர்
திப்பிலி
நெருஞ்சிமுள்
ஏலக்காய்
அதிமதுரம்
தாளிசப்பத்திரி
அதிமதுரம்
காட்டுமிளகு
சன்னலவங்கப் பட்டை
கறுஞ்சீரகம்
கொத்துமல்லி விதை
பேரீச்சங்காய்
சீந்திற் சர்க்கரை
தாமரைத்தாது
மூங்கிலுப்பு
சாதிக்காய்
கொடிமுந்திரிகைப் பழம்

நிலப்பனங் கிழங்கு

குங்குமப்பூ

கிராம்பு

*செய்முறை*

இவைகளை வகைக்கு 2 வராகன் எடை எடுத்து, இதற்குச் சமனெடை சர்க்கரை சேர்த்து இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும். இதனுடன் அப்பிரகச் செந்தூரம் 1 வராகன் எடை சேர்த்துக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

ஒரு வராகன் எடை அளவு சூரணத்தைப் பசுவின் நெய்யுடன் குழப்பி உட்கொள்ளவும். தினம் 2 வேளை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

பாண்டு, நீரடைப்பு, நீர்க்குத்தல், விக்கல், காமாலை, உள்சுரம், இரத்த மேகங்கள், சயரோகம், தலை மயக்கம் முதலானவை தீரும்.

## 22. மகா ஏலாதிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

ஏலம்

மஞ்சள்

சுக்கு

திப்பிலி

செவ்வியம்

சந்தனத்தூள்

சாதிப்பத்திரி

தகரவிதை

திராட்சைப்பழம்

தாமரைக்கிழங்கு

நெல்லிவற்றல்

பருத்திவிதைப்பருப்பு

வில்வப்பழத்தின் ஓடு

நன்னாரி வேர்

முத்தக்காசு

இலவங்கப்பட்டை

அதிமதுரம்

மிளகு

மோடி

சிற்றரத்தை

சாதிக்காய்

கிராம்பு

வால்மிளகு

கச்சூர்க்காய்

கொத்துமல்லி விதை

நெற்பொரி

மாதுளம் வேர்ப் பட்டை

நிலப்பனங்கிழங்கு

அமுக்கரா வேர்

சீந்தில் சர்க்கரை

*செய்முறை*

இங்கு கூறப்பட்ட முப்பது சரக்குகளையும் வகைக்குக் கால் பலம் வீதம் நன்கு இடித்துச் சூரணம் செய்து, மொத்த எடைக்கு வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக் கொள்க.

*பயன்பாடு*

வேண்டும்போது இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம், காலையிலும் மாலையிலும் நோய்களுக்கு ஏற்றவாறு தாய்ப்பால், தேன், எலுமிச்சம்பழச் சாறு, மாதுளம்பழச் சாறு, முதலியவற்றில் ஏதேனுமொன்றில் அனுபானம் செய்து கொடுத்துக் கொண்டு வருக.

*தீரும் நோய்*

தேக எரிவு, தாகம், மயக்கம், பித்தத் தலைவலி, அத்திசுரம், வாயு, விடசுரம், ஈளை, இருமல், வயிற்றுப்புசம், சீதஞ்செறிவு.

**பத்தியம்**

பித்தத்தை விருத்தி செய்யும் பண்டங்களைத் தள்ளி, இச்சாபத்தியமாக இருக்க வேண்டும்.

## 23. திரிகடுகாதிச் சூரணம்

*சரக்கு*

திரிகடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி)

சடாமாஞ்சில்

இந்துப்பு

கோரைக் கிழங்கு

கற்கடகசிங்கி

திரிபலா (கடுக்காய், நெல்லி, தான்றி)

*செய்முறை*

இச்சரக்குகளை வகை ஒன்றுக்குச் சம எடை (1 பங்கு) எடுத்து, நன்றாக உலர்த்திக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்து கொண்டு, இதற்குச் சமன் கண்டங்கத்தரி வேர்ச் சூரணம் போட்டுக் கலந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தில் மூவிரல் கொள்ளும் அளவு எடுத்துக் காலை வேளைகளில் வெந்நீருடன் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

ஒரு மாத உபயோகத்தில் ஈளை, இருமல் முதலியன தீரும்.

*பத்தியம்*

வாயு பதார்த்தங்கள், கருணைக் கிழங்கு, மாவுப் பண்டங்கள் பூசணிக் காய், பாகற்காய், அகத்தி முதலியவற்றை நீக்கி விடவும்.

## 24. அந்தரத்தாமரைச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| அந்தரத்தாமரைத்தூள் | 3 பலம் |
| உசிலம்பட்டைத் தூள் | 3 " |

திப்பிலித் தூள் 1 பலம்

*செய்முறை*

இவைகளை ஒன்று கலந்து சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

மூவிரல் கொள்ளும் அளவு இத்தூளை எடுத்துத் தேனில் குழைத்துச் சாப்பிட இருமல், ஈளை, வயிறுப்புசம் முதலான நோய்கள் தீரும்.

## 25. விளாங்காதிச் சூரணம்

*சரக்கு*

வாய்விளங்கம்

பெருங்காயம்

திப்பிலி

சுக்கு

சத்திச்சாரம்

இந்துப்பு

சிற்றரத்தை

செய்முறை

இவைகளைச் சம பாகமாக எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் வெருகடி அளவு எடுத்துப் பசுவின் நெய்யுடன் கலந்து சாப்பிடவும்.

*தீரும் நோய்*

காசம், சுவாசம், சயம் முதலிய நோய்கள் தீரும்.

## 26. விளாங்காதிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

ஏலக்காய்

வாய்விளங்கம்

இலவங்கப்பட்டை

திப்பிலி

இவைகள் வகைக்கு 1 பலம்.

சுக்கு

கண்டத்திப்பிலி

வகைக்கு 4 பலம்.

*செய்முறை*

இவற்றை எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்திற்குச் சரிநிறை சர்க்கரை கூட்டித் தினந்தோறும் காலை வேளையில் 40 குன்றிமணி அளவு எடுத்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

ஈளை, இருமல் நீங்கும்.

## 27. இண்டம் வேர்ச் சூரணம்

*சரக்கு*

இண்டம்வேர்ப் பட்டை

சிறுதேக்கு

சுழலாவாரை வேர்

கண்டங்கத்தரி வேர்

*செய்முறை*

இவைகளைச் சரி எடை எடுத்து, வெயிலில் காய வைத்துக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தில் மூவிரல் கொள்ளும் அளவு எடுத்துத் தேன் விட்டுக் குழைத்துக் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இருமல் முதலியன தீரும்.

## 28 அண்ட ஓட்டுச் சூரணம்

தானாகப் பொரித்த கோழி முட்டையின் ஓட்டில் ஒரு கொட்டைப் பாக்கு அளவு எடுத்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து, இஞ்சிச் சாற்றில் குழைத்து, 3 நாளைக்குக் காலை வேளைகளில் உட்கொள்ளவும். ஈளை, இருமல் முதலிய நோய்கள் தீரும்.

## 29. ஆடாதோடைச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| பேரரத்தை | 1 பலம் |
| சிற்றரத்தை | 1 " |
| ஆடாதோடைப் பூக்கதிர் | 4 " |
| ஆடாதோடை வேர்ப் பட்டை | 1 " |
| பூனைக்காஞ்சொறி வேர் | 2 " |
| அரிசித் திப்பிலி | 2 " |
| சாம்பிராணிப் பதங்கம் | 1/2 பலம் |
| கறிமஞ்சள் | 1 " |
| கோஷ்டம் | 1/2 " |
| வாய்விளங்கம் | 1 " |
| சிறுதேக்கு | 1 " |
| கோரைக் கிழங்கு | 1 " |
| இஞ்சிப்பட்டை | 1 " |
| காட்டாத்திப்பூ | 1/2 " |
| தூதுவளை இலை | 2 " |
| கண்டங்கத்தரி | 1 " |

*செய்முறை*

மேற் கூறிய சரக்குகளில் சாம்பிராணிப் பதங்கம் நீங்கலாக மற்றவைகளை வெயிலில் உலர்த்தித் தனித்தனியே இடித்துச் சூரணித்து ஒருமிக்கக் கலந்து, சாம்பிராணிப் பதங்கத்தையும் கூட்டி நன்றாகக் கிளறி வைத்துக் கொள்க.

*பயன்பாடு*

வேளைக்கு அரைக்கால் தோலா விகிதம் பாலில் கலக்கித் தினம் இரு வேளை, 20 நாள் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சீதளம், சுவாசகாசம் நீங்கும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 30. ஆடாதோடையாதிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

ஆடாதோடை இலை

தூதுவளை

சங்கம் இலை

முருக்க இலை

*செய்முறை*

இவைகளைச் சமனாக எடுத்து, ஆவியில் வேகவைத்துப் பிழிந்து கொள்ளவும். இதை இறுத்துச் சுக்கு, திப்பிலி, மிளகு இவைகளைச் சமன்கூட்டி இடித்துச் சூரணித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வெருகடி அளவு எடுத்துத் தேன் 4 அல்லது 5 துளிகள் விட்டு ஒன்று கலந்து குடிக்கவும்.

*தீரும் நோய்*

காசம் தீரும்.

## 31. தாளிசப்பத்திரிச் சூரணம்

*சரக்கு*

தாளிசப்பத்திரி
ஓமம்
சீரகம்
கறுஞ்சீரகம்
சுக்கு
திப்பிலி
மிளகு
தான்றிக்காய்
சிற்றரத்தை
பெருநாகப்பூ
சிறுநாகப்பூ
கடுக்காய்
கிராம்பு
ஏலக்காய்
வெட்டிவேர்
விலாமிச்சை வேர்
சந்தனத்தூள்
சாதிக்காய்
இலவங்கப்பட்டை
இலவங்கப்பத்திரி

*செய்முறை*

இவைகளைச் சமமாக எடுத்துச் சரி எடை சர்க்கரை சேர்த்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் வெருகடி அளவு எடுத்துத் தினம். ஒரு வேளை தேனில் கொள்ளவும்.

*தீரும் நோய்*

இருமல், எலும்புச் சுரம், சுவாசகாசம் முதலியன தீரும்.

## 32. தாளிசப்பத்திரிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| தாளிசப்பத்திரி | 1 பங்கு |
| மிளகு | 2 " |
| சுக்கு | 3 " |
| கூகை நீறு | 5 " |
| இலவங்கப் பட்டை | $^{1}/_{2}$ " |
| ஏலக்காய் | 1 " |

*செய்முறை*

இவைகளைக் காயவைத்து ஒன்று சேர்த்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து, அதற்கு 2 பங்கு சர்க்கரை கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தைத் தினம் ஒரு வெருகடி அளவு வீதம் சாப்பிடவும் .

*தீரும் நோய்*

ஈளை, இருமல், மந்தாக்கினி, சுவையின்மை முதலியவைகள் தீரும்.

## 33. தாளிசப்பத்திரிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

தாளிசப்பத்திரி
சுக்கு
கொத்துமல்லி விதை
செவ்வியம்
கூகை நீறு
நெருஞ்சில் வேர்
கிராம்பு

திப்பிலி மூலம்
சாதிக்காய்
இலவங்கப்பத்திரி
ஏலக்காய்
பேரீச்சம்பழம்
மிளகு
கண்டத்திப்பிலி
திப்பிலி
சிறுநாகப்பூ
கடுக்காய்த் தோல்
வில்வ வேர்க்கட்டை
இலவங்கப்பட்டை
திராட்சைப் பழம்
கறுஞ்சீரகம்
கற்கடகசிங்கி
சடாமாஞ்சில்
சாதிப்பத்திரி
சீரகம்
மாதுளை ஓடு

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு $^1/_2$ பலம் வீதம் எடுத்துச் சூரணித்துக் கொள்ளவும். இச்சூரணத்தை எலுமிச்சம் பழச் சாறு விட்டு நிழலில் உலர்த்தவும். மறுநாள் இஞ்சிச்சாறு விட்டு மீண்டும் நிழலில் உலர்த்தவும். பின்பு சூரணத்திற்குச் சரி எடை சர்க்கரை கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தில் ஒரு வெருகடி அளவு காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

கபநோய், சுவாசகாசம், ஈளை முதலியன தீரும்.

### 34. தாளிசப்பத்திரிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

ஏலம்
சாதிக்காய்
வால்மிளகு
வாய்விளங்கம்
சீரகம்
கோஷ்டம்
கடுக்காய்
நெல்லிவற்றல்
சோம்பு
கிராம்பு
சாதிப்பத்திரி
இலவங்கப்பட்டை
தனியா
திப்பிலி
அக்கராகாரம்
தான்றிக்காய்
சடாமாஞ்சில்

இவைகள் வகைக்கு வராகன் எடை 2.

தாளிசப் பத்திரி வராகன் எடை 18.

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட பதினெட்டுச் சரக்குகளையும் நன்கு உலர்த்திப் பொன் மேனியாகச் சிறு தீயில் வெதுப்பி இடித்துச் சூரணம் செய்து, மொத்த எடையில் அரை பாகம் வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேண்டும்போது இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் காலை, மாலையில் கொடுத்துக் கொண்டு வரவும்.

*தீரும் நோய்*

காசம், சயம், கை, கால் எரிவு, தாகம், விக்கல், சுரம், வாந்தி, அரோசகம், நெஞ்செரிவு, குன்மம், காமாலை.

*பத்தியம்*

நோயின் நிலைமைக்கேற்றவாறு புளி சேர்த்தும், சேர்க்காமலும் இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 35. தாளிசப்பத்திரிச் சூரணம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| மிளகு | $2\,^1/_2$ வராகன் எடை |
| தாளிசப் பத்திரி | $12\,^1/_2$ " |
| சுக்கு | $2\,^1/_2$ வராகன் எடை |
| திப்பிலி | $2\,^1/_2$ " |
| கடுக்காய் | $2\,^1/_2$ " |
| தான்றிக் காய் | $2\,^1/_2$ " |
| நெல்லிவற்றல் | $2\,^1/_2$ " |
| சிற்றரத்தை | $2\,^1/_2$ " |
| சாதிக்காய் | $2\,^1/_2$ " |
| சாதிப்பத்திரி | $2\,^1/_2$ " |
| அதிமதுரம் | $2\,^1/_2$ " |
| கிராம்பு | $2\,^1/_2$ " |
| கோஷ்டம் | $2\,^1/_2$ " |
| கல்நார் | $2\,^1/_2$ " |
| சிவதை வேர் | $2\,^1/_2$ " |
| மாசிக்காய் | $2\,^1/_2$ " |

| | | |
|---|---|---|
| கருடன் கிழங்கு | $2\,^1/_2$ | " |
| கடுகுரோகணி | $2\,^1/_2$ | " |
| சன்னலவங்கப்பட்டை | $2\,^1/_2$ | " |
| ஓமம் | $2\,^1/_2$ | " |
| சாத்திரபேதி | $2\,^1/_2$ | " |
| இஞ்சி | 2 | பலம் |
| சீரகம் | 2 | " |
| கூகைநீறு | 3 | " |

*செய்முறை*

இங்கே கூறிய இருபத்திநான்கு சரக்குகளில் இஞ்சியை மேல்தோல் சீவிச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி நெய் விட்டு வறுக்கவும். சீரகம், கூகைநீறு இவ்விரண்டையும் ஒரு நாள் பசும் பாலில் ஊறப்போட்டு, மறுநாள் பாலை வடித்து மற்ற சரக்குகளுடன் சேர்த்து வெயிலில் உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து சமனெடை சீனிச் சர்க்கரை சேர்த்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1/2 தோலா விகிதம் தினம் இருவேளை பசும் பாலிலேனும் நெய்யிலேனும் இருபது நாள் உட்கொள்ளவும்.

*தீரும்நோய்*

உட்டிண வாயு, மூலவாயு, உட்டிணசுரம், அட்டகுன்மம், மயக்கம், மேகச்சுரம்,பித்தச் சுரம், தாகம், கைகால் எரிச்சல், வியர்வை, நெஞ்சடைப்பு, அக்கினிமந்தம், கிறுகிறுப்பு, ஏப்பம், வாய் நீரூறல், மார்பு நோய் முதலியன குணப்படும்.

**பத்தியம்**

இச்சாபத்தியம்.

## 36. அசுவகெந்திச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| கிராம்பு | 1 பலம் |
| சிறுநாகப்பூ | 2 " |

| | | |
|---|---|---|
| ஏலம் | 3 | பலம் |
| இலவங்கப்பட்டை | 4 | " |
| இலவங்கப்பத்திரி | 5 | " |
| சீரகம் | 6 | " |
| தனியா | 7 | " |
| மிளகு | 9 | " |
| திப்பிலி | 16 | " |
| சுக்கு | 32 | " |
| அமுக்கராக் கிழங்கு | 64 | எண்ணிக்கை |

*செய்முறை*

மேற் கூறப்பட்ட பதினோரு சரக்குகளையும் வெயிலில் உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து, இவைகளின் மொத்த நிறைக்கு நிகரான அளவு சீனிச்சர்க்கரையைச் சேர்த்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1 தோலா வீதம் தினம் இரு வேளை 20 அல்லது 40 நாள், பாலிலேனும் நெய்யிலேனும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

அதிவெட்டை, சுவாசம், ஈளை, பாண்டு, மேகஊறல், அரோசகம் முதலியவை குணமாகும்.

*பத்தியம்*

புளி நீக்கி, இச்சாபத்தியமாக இருக்க வேண்டும்.

**37. அசுவகெந்திச் சூரணம் (வேறு முறை)**

*சரக்கு*

சுக்கு
மிளகு
திப்பிலி
சாதிக்காய்

இலவங்கப்பத்திரி

அதிமதுரம்

கிராம்பு

கடுகுரோகணி

குரோசாணி ஓமம்

இந்த ஒன்பதும் வகைக்குப் பலம்- $^1/_2$.

சுத்தி செய்த அமுக்கராவேர்ச் சூரணம் பலம்-9.

*செய்முறை*

மேற்கூறப்பட்ட பத்து சரக்குகளையும் சிறு தீயில் வெதுப்பி ஆறவிட்டு இடித்துச் சூரணம் செய்து, இவற்றின் மொத்த எடை அளவு வெள்ளைச் சர்க்கரை கூட்டி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தச் சூரணத்தை வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் காலை, மாலை ஆகிய இருபொழுதும் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

- ❖ எலும்புருக்கி, பித்தப்பாண்டு முதலிய நோய்களுக்கு எருமையின் புளிப்பு மோரிலும்
- ❖ எலிக்கடியின் நஞ்சிற்கு இளநீரிலும்
- ❖ நச்சுப்பூச்சிகளின் நஞ்சிற்கு வேப்பெண்ணெயிலும்
- ❖ ஈளை, சோகை முதலியவற்றிற்கு வெள்ளாட்டு அமுரியிலும்
- ❖ பெரும்பாடுக்கு எள்ளெண்ணெய், வெல்லத்திலும்
- ❖ விரியன் பாம்புக் கடிக்கு வெந்நீரிலும்
- ❖ அட்டகுன்மம் -வாயு-அரோசகம்-சோபை -காமாலை முதலிய வற்றிற்குப் பழச்சாற்றிலும்
- ❖ சூலைரோகத்திற்குச் சிறுமக்கள் அமுரியிலும் (சிறுநீர்)
- ❖ மலட்டு நோய்க்குப் பிரமியிலைச் சாற்றுடன் நல்லெண்ணெய், பாகல் இலைச்சாறு, மிளகுத்தூள் கூட்டியும்

அனுபானம் செய்து காலையில் கொடுத்து வருதல் சாலச் சிறந்தது.

*பத்தியம்*

இச்சாபத்தியமாக இருப்பதுடன், நோயின் வன்மை மென்மைக்கு ஏற்றவாறு புளி தள்ளாமலும் ஆகாரம் உட்கொள்ளலாம்.

## 38. ஆசமோதாதிச் சூரணம்

*சரக்கு*

ஓமம்
பெருங்காயம்
சுக்கு
அபின்
இந்துப்பு
புழுங்கலரிசி

*செய்முறை*

இவைகளைச் சரி எடை எடுத்து, துளசி ஒரு பிடியும் சேர்த்துச் சட்டியில் இட்டுப் பொன் வறுவலாக வறுத்துத் தூளாக இடித்துச் சூரணம் செய்துவைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு வெருகடி அளவு, காலை மாலை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

பீனிச நோய்களும் வாய்வுகளும் தீரும்.

## 39. கடுகுரோகணியாதிச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| கடுகுரோகணி | 3 பலம் |
| கற்கடகசிங்கி | 3 " |
| கண்டங்கத்தரி வேர் | |
| சடாமாஞ்சில் | |
| சிறுதேக்கு | |
| இந்துப்பு | |

இவைகள் வகைக்கு 1 பலம்.

*செய்முறை*

இவைகளைக் கல்லுரலில் இட்டுச் சூரணித்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வெருகடி அளவு (மூவிரல் செங்குத்தாகச் சேர்த்து எடுக்கும் அளவு) சூரணம் எடுத்துத் தேனில் குழைத்துக் காலையிலும், மாலையிலும் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

வாதரோகம், பீனிசங்கள் முதலியவை தீரும்.

## 40. கறுஞ்சீரகாதிச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| கறுஞ்சீரகம் | 1 பலம் |
| கழற்சிப்பருப்பு | 2 " |
| மஞ்சள் | 1 " |

*செய்முறை*

இம்மூன்றையும் பொடித்துச் சூரணம் செய்துகொள்ளவும்.

*பயன்பாடு*

காலையிலும் மாலையிலும் சாப்பிட, நீர்க்கோவை (சலதோசம்) குணமாகும்.

## 41. சுக்காதிச் சூரணம்

*சரக்கு*

தான்றித் தோல்
கறுஞ்சீரகம்
திப்பிலி
தூதுவளை வேர்
வேலிப்பருத்தி வேர்
கடுக்காய்த் தோல்
பேய்ப்பீர்க்கம் விதை

*செய்முறை*

இவைகளை வகைக்கு 1 கழஞ்சு (1 $^1/_4$ வராகன் எடை) எடுத்து நன்றாக உலர்த்திக் கல் உரலில் இடித்துச் சூரணம் செய்யவும்.

*பயன்பாடு*

இதை நெய்யில் குழைத்து 1 வெருகடி வீதம் சாப்பிட்டுவரவும்.

*தீரும் நோய்*

பீனிசம், ஈளை முதலியவை தீரும்.

## 42. மிளகுச் சூரணம்

*சரக்கு*

மிளகுத்தூள்

எருக்கம்பூவின் மொட்டு

திப்பிலித்தூள்

*செய்முறை*

இவைகள் வகைக்கு ஒரு சிறங்கை அளவு எடுத்துச் சுத்தமான தேன் விட்டுக் கலந்துகொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு பாக்களவு எடுத்து, தினம் 2 வேளை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

ஐய நோய்கள் கட்டுப்படும்.

*பத்தியம்*

பசுவின் நெய், தூதுவளங்காய், கத்தரிக்காய், முருங்கைப் பிஞ்சு முதலானவைகளை வேண்டிய அளவு உட்கொள்ளவும். புளிப்புச் சுவையுள்ள பதார்த்தங்களை நீக்கிவிடவும்.

## 43. அந்தரத்தாமரைச் சூரணம்

*சரக்கு*

அந்தரத்தாமரைத் தூள் 3 பலம்

உசிலம் பட்டைத் தூள் 3 "

திப்பிலித் தூள் 1 பலம்

*செய்முறை*

இம்மூன்றையும் ஒன்றாகக் கூட்டிக் கலந்துவைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் ஒரு வெருகடி அளவு எடுத்துத் தேனில் குழைத்து உட்கொண்டுவரவும்.

*தீரும் நோய்*

இருமல், ஈளை, மந்தாரகாசம், கபநோய், வயிறு உப்புசம் முதலான நோய்கள் தீரும்.

### 44. குக்கிலாதிச் சூரணம்

*சரக்கு*

திப்பிலி
சிறுமூலம்
கிராம்பு
வளையலுப்பு
பெருந்தும்பை
எவச்சாரம்
கடுக்காய்த்தோல்
இந்துப்பு
அட்டுப்பு
பேராமுட்டி
மஞ்சள்
கோஷ்டம்
நெல்லிமுள்ளி
செவ்வியம்
விழலரிசி
கொடிவேலிவேர்

மாட்சிகம் (பொன் நிமிளை)

சுக்கு

யானைத்திப்பிலி

தும்மட்டிக்காய்

மிளகு

ஏலக்காய்

தான்றித்தோல்

கோரைக்கிழங்கு

இவைகள் வகைக்கு 1 பலம்.

சுத்தி செய்த குக்கில் 3 பலம்.

*செய்முறை*

இச் சரக்குகளைச் சட்டியில் இட்டு இள வறுப்பாக வறுத்துக் கல்லுரலில் இட்டுச் சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தில் $3^{3}/_{4}$ வராகன் எடை அளவு எடுத்துத் தேனும் நெய்யும் விட்டுக் குழப்பி, தினந்தோறும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சுவாசம், காசம், சயரோகம், தொண்டைக் கரகரப்பு, நாட்பட்ட சுரம் முதலானவை நீங்கும்.

### 45. தீபாக்கினிச் சூரணம்

*சரக்கு*

இந்துப்பு

எவச்சாரம்

வெங்காரம்

சவர்க்காரம்

சுக்கு

கண்டுபாரங்கி

செவ்வியம்

திப்பிலிமூலம்

யானைத்திப்பிலி

வட்டத் திருப்பி

ஓமம்

மிளகு

வகைக்கு 1 பலம்.

*செய்முறை*

எல்லாம் சேர்ந்த எடைக்குப் பாதி அளவு செஞ்சித்திர மூலவேர்ப் பட்டை சேர்த்து இவைகளை முறைப்படி சுத்தித்து, வறுக்க வேண்டியவைகளை வறுத்துப் பொடிசெய்து, ஒன்றுபடக் கலந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

அளவுப்படி தேனில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

காசம், குன்மம், கிராணி, மூலம் ஆகியவைகள் தீரும்.

## 46. அமுக்கராச் சூரணம்

*சரக்கு*

| | | |
|---|---|---|
| கிராம்பு | 1 பங்கு | |
| சிறுநாகப்பூ | 2 | " |
| ஏலம் | 4 | " |
| மிளகு | 8 | " |
| திப்பிலி | 16 | " |
| சுக்கு | 32 | " |
| அமுக்கரா | 64 | " |
| சர்க்கரை | 128 | " |

*செய்முறை*

சர்க்கரை நீங்கலாக மற்றவைகளை முறைப்படி சுத்தித்து, தனித்தனியே பொடித்து எல்லாவற்றையும் ஒன்றுபடக் கலந்து, பிறகு சர்க்கரையும் சேர்த்துக் கலந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இதனை அளவுப்படி கொடுக்க, எண் வகை குன்மம், இடப்பாட்டு ஈரல் நோய், குத்து வாய்வு, வெட்டை, பிரமியம், விக்கல், பாண்டு, இரைப்பு, இளைப்பு, சயம், வறட்சி, கை கால் எரிவு தீரும். உடல் பெருக்கும்.

### 47. சிலேத்துமச் சூரணம்

*சரக்கு*

சுக்கு
திப்பிலி
அரத்தை
சீரகம்
கடுக்காய்
தாளிசப்பத்திரி
வெங்காரம்
பூவந்தி
கோரோசனை
இலவங்கம்

*செய்முறை*

இவற்றைப் பொடி செய்து, கத்தரி இலையை வாட்டிப் பிழிந்த சாற்றில் குழப்பி, உள்நாக்கில் தடவவேண்டும்.

### 48. ஈளை,காசத்திற்குச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| பறங்கிச்சக்கை | 3 பலம் |
| சிறுநாகப்பூ | 6 " |

| | | |
|---|---|---|
| கிராம்பு | 1 | பலம் |
| சாதிக்காய் | 1 | " |
| தான்றிக்காய்த் தோல் | 1 | " |
| பற்பாடகம் | 1 | " |
| வசம்பு | 1 | " |
| கோரோசனை | $^1/_2$ | " |
| குப்பைமேனி இலைச் சூரணம் | 2 | " |
| கோஷ்டம் | 1 | " |
| சாதிப்பத்திரி | 1 | " |
| விளாம்பிசின் | 1 | " |
| பூண்டு | 1 | " |
| ஓமம் | 1 | " |

*செய்முறை*

இவைகளை எல்லாம் இடித்துப் பீங்கான் தட்டுகளில் போட்டுப் பரப்பி வெயிலில் வைத்து நன்கு உலர்த்தவும். காய்ந்த பதத்தில் இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்குத் திரிகடிப் பிரமாணம், காலையும் மாலையும் ஒரு மண்டலம் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

ஈளை, காசம், இருமல் முதலியன தீரும்.

*பத்தியம்*

பிணிக்கு ஏற்றவாறு புளியைத் தள்ளியும் சேர்த்தும் இச்சாபத்தியம் கோடல் நலம்.

## 49. சுவாசக் குடோரி சூரணம்

*சரக்கு*

சுக்கு

மிளகு

திப்பிலி

சிற்றரத்தை

அக்கராகாரம்

வால்மிளகு

மோடி

பொரித்த வெங்காரம்

இவைகள் வகைக்குப் பலம் $^{1}/_{2}$.

தாளிசப்பத்திரி பலம் 8.

*செய்முறை*

பொரித்த வெங்காரம் நீங்கலாக மற்ற சரக்குகளைச் சிறிது இளம் வறுப்பாக வறுத்து இடித்து, பொரித்து வைத்துள்ள வெங்காரத்துடன் கூட்டிக் கல்வத்தில் இட்டு நன்றாய்க் கலக்கும் பொருட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வேண்டும்போது இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம், பிணிக்கு ஏற்றவாறு தேன், இஞ்சிச்சாறு, நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வரவும். இதனுடன் கபத்தைப் பரிகரிக்கக்கூடிய செந்தூரம், பற்பம் ஆகியவற்றைக் கூட்டிக் கொடுக்கப் பெரிதும் பயன் தரும்.

## 50. தாதுவிருத்திக்கு நிலப்பனைச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| நிலப்பனங் கிழங்கு | 1 பலம் |
| சீந்தில் சர்க்கரை | 1 " |
| நெருஞ்சிமுள் | 1 " |
| பெரும்பூனைக்காய்வித்து | 1 " |
| நெல்லிவற்றல் | 1 " |
| முள்ளிலவம் பிசின் | 1 " |
| கற்கண்டு | 1 " |

*செய்முறை*

கற்கண்டையும் சீந்தில் சர்க்கரையையும் நீக்கி மற்ற ஐந்து சரக்குகளையும் நன்றாய் உலர்த்தி, நன்கு சூரணம் செய்து கல்வத்திலிட்டுக் கற்கண்டையும் சீந்தில் சர்க்கரையையும் கூட்டி அரைத்து மிருதுவான பதத்தில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் காலையும் மாலையும் பாலில் கலந்தாவது அல்லது பசுவின் நெய்யில் மத்தித்தாவது சில நாள் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

தாது பலவீனம், பெண்களுக்குக் காணும் வெள்ளை, ஒழுங்கீனமான மாத விலக்கு ஆகியன குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியமாக, நல்ல ஆகாரங்களை வேளை தவறாமல் சாப்பிடுவதுடன், காரத்தைக் கூடிய வரையிலும் குறைத்துக் கொள்ள வேண்டும்.

## 51. வாய்விளங்கச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| வாய்விளங்கம் | 1 பலம் |
| சுக்கு | 1 " |
| ஓமம் | 1 " |
| மிளகு | 1 " |
| சீமை நிலாவாரை | 2 " |

*செய்முறை*

சீமை நிலாவாரையை இடித்துச் சூரணம் செய்து மூன்று முறை பசுவின் பாலில் வைத்துப் பிட்டு போல் அவித்து உலர்த்தி எடுத்த சூரணத்துடன், மற்ற சரக்குகளின் சூரணத்தைக் கூட்டி நன்றாய் உறவாகும்படி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தச் சூரணத்தில் வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் தினம் 2 வேளை, சிறிது நாட்டுச் சர்க்கரை கூட்டிக் கொடுக்கவும்.

தீரும் நோய்

வாயு, பித்தம், வயிற்றுப் பொருமல், கபநோய், விக்கல், வாந்தி, உடல் எரிவு, சுவாசம், காசம், மகிபந்தம்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 52. இருமலுக்குத் திரிபலாதிச் சூரணம்

*சரக்கு*

தான்றிக்காய்த் தோல்
நெல்லிப்பருப்பு
சிறுதேக்கு
சடாமாஞ்சில்
சாதிகோஷ்டம்
வழுதுணை வேர்
கண்டங்கத்தரி வேர்ப்பட்டை
இந்துப்பு
கடுக்காய்த் தோல்
கற்கடகசிங்கி
திப்பிலி
சுக்கு
மிளகு
தூதுவளை வேர்ப்பட்டை
பூனைக்காஞ்சொறி வேர்
நெற்பொரி

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட பதினாறு சரக்குகளில் இந்துப்பு, நெற்பொரி நீங்கலாக உள்ள சரக்குகளை இளஞ் சூட்டில் வெதுப்பி எல்லாவற்றையும் ஒருங்கு கூட்டி இடித்துச் சூரணம் செய்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தச் சூரணத்தை வேளைக்குத் திரிகடிப் பிரமாணம் காலையும் மாலையும் தேனில் மத்தித்துச் சாப்பிட்டு வரவும்.

*தீரும் நோய்*

சீதள சம்பந்தமான ஈளை, காசம், இருமல்.

*பத்தியம்*

வாயு, சீதளமுள்ள பதார்த்தங்களைத் தள்ளி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 53. பூநாகச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| பூநாகம் | 1 பலம் |
| சுக்கு | 1 " |
| மிளகு | 1 " |
| திப்பிலி | 1/4 பலம் |
| சீந்தில் கொடி | 1/2 " |
| தூதுவளைச் சமூலம் | 1 " |
| நெல்லிவற்றல் | அரைக்கால் பலம் |
| தான்றிக்காய் | " |
| சிற்றரத்தை | " |
| கற்கடகசிங்கி | " |
| கடுக்காய்த் தோல் | " |
| மூங்கிலுப்பு | " |

*செய்முறை*

மேற் கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் சூரணித்துச் சமனெடை சீனாகற்கண்டின் சூரணமும், கண்டங்கத்தரியை அரைத்து அதனிடையில் வைத்துப் பற்பம் செய்த பவழத்தில் 1-பலமும் கூட்டிக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தில் வேளைக்கு $^1/_4$ தோலா வீதம் தினம் இரு நேரம் பசு வெண்ணெயில் அயச்செந்தூரத்துடனாவது, காந்தச் செந்தூரத்துடனாவது மத்தித்துச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சயம், காசம், பாண்டு, குன்மம், நீராம்பல், கிராணி, மூலம், சூதவாய்வு, இரத்தகாசம், மேக அழலை முதலிய நோய்கள் அவைகளினது நிலைக்குத் தக்கவாறு 10,12,40 நாட்களில் குணப்படும்.

*பத்தியம்*

மோர், புகையிலை, புளி, பூண்டு, கடுகு, எள்ளு, இவைகள் ஆகா. பால், நெய், வறுத்த உப்பு முதலியவற்றையும் மற்றவைகளையும் சமயம் அறிந்து சேர்த்துக் கொள்ளவும்.

## 54. கபாங்குசச் சூரணம்

*சரக்கு*

| | | |
|---|---|---|
| கசகசா | 5 வராகன் எடை | |
| பேதானா | 5 | " |
| சுரைப்பருப்பு | 5 | " |
| மூங்கிலுப்பு | $4^1/_2$ | " |
| பருத்திப் பருப்பு | 4 | " |
| வெள்ளரிப் பருப்பு | $3^1/_2$ | " |
| தர்ப்பூசணிப் பருப்பு | $3\ ^1/_2$ | " |
| சந்தனத் தூள் | 3 | " |
| கபாசிப் பருப்பு | $2\ ^1/_2$ | " |

| | | |
|---|---|---|
| துத்தி வேர்ப்பட்டை | 2 $^1/_2$ | வராகன் எடை |
| கறுவேலம் பிசின் | 2 | " |
| அதிமதுரம் | 1 $^1/_2$ | " |
| பழையபற்பம் | 1 $^1/_2$ | " |
| நிசாஸ்தா | 1 $^1/_2$ | " |
| பாதாம் பிசின் | 1 | " |
| முலாம் பழப் பருப்பு | 3 $^1/_2$ | " |

*செய்முறை*

மேற் கூறப்பட்ட பதினாறு சரக்குகளின் பருப்பு வகைகளைக் கல்வத்தில் இட்டு நன்கு நெகிழ அரைத்தும், மற்றவைகளை இடித்தும் சூரணித்து ஒருமிக்கக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இந்தச் சூரணத்தை $^1/_4$ தோலா வீதம் சமனெடை கற்கண்டு சேர்த்து, வெள்ளாட்டுப் பாலில் கலக்கித் தினம் இரு நேரம் சாப்பிட்டு வரவும்.

*தீரும் நோய்*

சயம், உட்டிணஇருமல், உட்காங்கை, கை கால் எரிச்சல் முதலிய பிணிகள் நிவாரணமாகும்.

*பத்தியம்*

காரசார பதார்த்தங்களை உட்கொள்ளாமல் நெய், பால் முதலியவைகளை ஆகாரத்துடன் சேர்க்கலாம்.

## 55. தசதீபாக்கினிச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| பெருங்காயம் | 1 பலம் |
| வசம்பு | 2 " |
| வாய்விளங்கம் | 3 " |
| இந்துப்பு | 4 " |
| ஓமம் | 4 " |
| கடுக்காய்த் தோல் | 6 " |

| | | |
|---|---|---|
| சித்திரமூலம் வேர்ப்பட்டை | 7 | பலம் |
| கோஷ்டம் | 8 | " |
| திப்பிலி | 9 | " |
| சீரகம் | 10 | " |

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட 10 சரக்குகளையும் பொன் மேனியாகத் தனித்தனியே வறுத்தெடுத்துச் சூரணித்துப் பின்னர் எல்லாவற்றையும் ஒருமிக்கக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1/4 தோலா விகிதம் தினம் இரு வேளை உண்ணவும்.

*தீரும் நோய்*

அசீரணம், இருமல், சுரம், பேதி, பாண்டு, அரோசகம் முதலியவைகள் நீங்கும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 56. மகா சுதர்சனச் சூரணம்

*சரக்கு*

கடுக்காய்
நெல்லிவற்றல்
மரமஞ்சள்
சுக்கு
திப்பிலி
மருள்கிழங்கு
உருசபகம்
கழற்சிப் பருப்பு
யானைக்காய்ஞ்சொறி வேர்
முருங்கை விதை

இலவங்கப்பட்டை
அல்லிக்கிழங்கு
மூவிலைத் தாமரை
வெட்பாலை அரிசி
சிற்றாமுட்டி
பேய்ப்புடல்
மூங்கிலுப்பு
சந்தனம்
சித்திரமூலம்
கிராம்பு
கடுகுரோகணி
கோரைக்கிழங்கு
அதிமதுரம்
குடசப்பாலை
தாமரைக்கிழங்கு
வெட்டிவேர்
தான்றிக்காய்
மஞ்சள்
கண்டங்கத்தரி
முள்ளிக்கத்தரி
மிளகு
தகரை விதை
சீந்தில்கொடி
ஜீவிதம்
காகோலி
கிச்சிலிக்கிழங்கு
சிறுதேக்கு
வசம்பு

வெண்தாமரை
அதிவிடயம்
தேவதாரு
மூங்கிலுப்பு
சாதிப் பத்திரி
வாய்விளங்கம்
செவ்வியம்
தாளிசப்பத்திரி
பற்பாடகம்
வேப்பம்பட்டை
குரோசாணி ஓமம்
வெட்டிவேர்
உவர்மண் (பூநீறு)
கிரந்தித்தகரம்
ஓரிலைத்தாமரை

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட சரக்குகளை வகைக்கு ஒரு வராகன் எடையும், நிலவேம்பு 26 வராகன் எடையும் எடுத்துக் கொண்டு காய வைத்து இடித்துச் சூரணித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் காலை, மாலை 1 தோலா விகிதம் வெந்நீரில் கலக்கிச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சரீரத்தில் குடிகொண்டுள்ள நாட்பட்ட வாதச்சுரம், பித்தச்சுரம், கபச்சுரம், தொந்தச்சுரம், அத்திசுரம், பலவித மாறல் சுரம், இரத்தக் கெடுதல், மார்வலி, காமாலை, பக்கசூலை, சுவாசகாசம் முதலியவைகள் தீரும். சுரம் இருக்கும்போது அதனை விரைவில் நீக்கத் தக்க வேறு ஏதேனும் மருந்தை உண்டு பின்னர் இச்சூரணத்தை உபயோகிக்கவும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 57. சீதோபலாதிச் சூரணம்

*சரக்கு*

| | |
|---|---|
| கற்கண்டு | 10 பலம் |
| மூங்கிலுப்பு | 8 " |
| திப்பிலி | 4 " |
| ஏலரிசி | 2 " |
| இலவங்கப்பட்டை | 1 " |

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் இடித்துச் சூரணித்து வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இச்சூரணத்தில் வேளைக்கு 1/4 தோலா விகிதம் தினம் இரு வேளை பாலில் கலக்கிச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

அருசி, வாந்தி, அக்கினி மந்தம், கைகால் எரிச்சல் முதலியவைகளைக் குணப்படுத்தும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

*குறிப்பு*

இந்தச் சூரணத்தின் எடைக்கு 1/2 பாகம் அதிமதுரச் சூரணமும் ஆடாதோடையிலைச் சூரணமும் கூட்டி உபயோகிக்கில், ஆரம்பமான சயகாசம், நாட்பட்ட இருமல் முதலியவை குணமாகும்.

# பற்பங்கள்

## 1. பவழப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

இலந்தை இலையை அரைத்தாவது அல்லது தைவேளை இலையை அரைத்தாவது சிறிது நீர் சுண்ட வெயிலில் வைத்துக் குகை பிடித்து, அதற்குள் இரண்டு பலம் சுத்தி செய்த பவழத்தைப் போட்டு, முன் அரைத்த இலையைக் கொண்டே மேல்மூடி செய்து அடைத்து, அதன்மேல் ஏழு மண் சீலை செய்து சிறிது உலர்த்தி, 40-50 வறட்டியில் புடம் இடவும். பவழம் வெந்து நீற்றிருக்கும். இதைக் கோப்பையில் போட்டு ஆவின் பால் சிறிது தெளித்துக் காற்றுவாடையில் வைத்துப் பின் அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

**பயன்பாடு**

இந்தப் பற்பத்தில் வேளைக்கு 1/2 அல்லது 1 குன்றி எடை எடுத்துத் தேன் அல்லது நெய்யுடன் புளியங்கொட்டை அளவு கற்கண்டு கூட்டி அரைத்த கலவையில் அனுபானம் செய்து, இரு வேளை கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

மேகச்சூடு, தேகவறட்சி, சயம், ஈளை, இருமல், குணமாகும். இந்தப் பற்பத்தை நீராகாரத்தில் போட்டுக் கொடுக்க நீர்க்கடுப்பு குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 2. பவழப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த பவழம் பலம்-1, கிராம்பு, சடாமாஞ்சில், வீரம் வகைக்குக் கழஞ்சு-1. கல்வத்தில் போட்டு முயல் இரத்தம் விட்டு, நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி வெயிலில் உலர்த்தி எடுத்துக் கொள்ளவும். அப்பால் முயல் எலும்புகளை இரண்டொரு வறட்டிகளின் மேல் பரப்பி அதன் மேல் இரண்டொரு வறட்டி இட்டுத் தீ மூட்டி வெந்தபின் ஆறவைக்கவும். பின் எலும்புகளை எடுத்துக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு மெழுகு போல் அரைத்து, மூசையையும் மூடியையும் செய்து உலர்த்தி அதனில் முன் சித்தப்படுத்திய வில்லையைச் சிறு

துண்டுகளாக உடைத்துப் போட்டு மேல் மூடி இட்டு மண்சீலை 7-8 செய்து உலர்த்தி, 40-50 வறட்டியில் புடம் இடவும். ஆறின பின் பார்க்க மூசையில் இட்ட துண்டுகள் வெளுத்து இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தை வேளைக்குக் குன்றி எடை தினம் இரு வேளை கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

இருமல், காசம், சயம், நீர்ரோகம், மகோதரம் முதலியன தீரும். குளிர்ந்த உடலினருக்குத் தேனிலும் சூட்டு உடலினருக்கு நெய்யிலும் கொடுப்பது நல்லது.

*பத்தியம்*

இச்சாபத்தியம். கபத்தை விருத்தி செய்யும் பண்டங்களை நீக்கவும்.

### 3. பவழுப் பற்பம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| நற்பவழம் | பலம் 1 |
| சடாமாஞ்சில் | கழஞ்சு 5 |
| வீரம் | கழஞ்சு 1 |
| மிளகு | கழஞ்சு 4 |

*செய்முறை*

இவைகளைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி வெயிலில் உலர்த்தி, அகலில் வைத்து மேல் மூடிச் சீலைமண் செய்து 20-25 வறட்டியில் புடம் இடவும். புடம் நன்றாய் ஆறின பின் வில்லையைப் பார்க்க வெளுத்திருக்கும். இதை அரைத்துப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

கற்கண்டைக் கல்வத்தில் போட்டுப் பசுவின் நெய் விட்டு வெண்ணெய் போல ஆகும் வரையில் அரைத்து வழித்து வைத்துக்கொண்டு, வேளைக்குச் சுண்டைக்காய்ப் பிரமாணம் காலை, மாலை மேற்படி பற்பம் ஒரு குன்றி எடை கூட்டி உண்ணவும்.

*தீரும் நோய்*

இருமல், சயம், மேகச்சுரம் முதலியவைகள் குணமாகும். இந்தப் பற்பத்தை நீராகாரத்தில் போட்டுக் கொடுக்க நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், வெட்டை முதலியன குணமாகும்.

## 4. பவழப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஒரு குடுவையில் சுண்ணக் கற்களைப் போட்டு, அதன் நடுவில் ஒரு பலம் தாளகத்தை வைத்துப் பனங்கள் விட்டுத் தாளித்துச் சூடு தணிந்த பின்னர் அடுப்பேற்றிச் சிறு தீயில் 1/4 மணிநேரம் எரித்துத் தாளகத்தை நீர் விட்டு அலம்பி எடுத்துக்கொள்ளவும். இங்ஙனம் 5 முறை ஆனபின் அதனைக் கல்வத்தில் இட்டு வெள்ளெருக்கம் பாலால் 4 சாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துச் சிறு துண்டுகளாக உடைத்து ஒரு சிறு குடுவையில் இட்டு, அதன் மேல் பழச்சாற்றில் சுத்தி செய்த ஒரு பலம் பவழத்தைப் போட்டு, இவை யாவும் மூழ்க வெள்ளெருக்கம் பால் விட்டு, வாய்க்கு ஓடு மூடிச் சீலை செய்து 50 வறட்டியில் புடம் இடவும். குடுவையில் இருக்கும் மருந்தை ஒரு பீங்கானில் போட்டு, மருந்து பூக்கும் வரையில் தாய்ப் பால் தெளித்துக் கொண்டு வரவும். பின்னர் அந்த ஈரம் நீங்க வெயிலில் வைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1 அல்லது $^1/_2$ குன்றி நிறை நெய்யிலேனும் வெண்ணெயி லேனும் தினம் இரு வேளை உண்ணவும்.

*தீரும் நோய்*

ஈளை, காசம் முதலிய கபநோய்கள் நீங்கும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 5. பவழப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

பவழத்தைச் சுத்தி செய்து, முயலின் இரத்தம் விட்டு நன்றாக அரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து ஒரு தட்டான் குகையில் வைத்து மற்றொரு

குகையினால் மூடிச் சீலைமண் செய்து, குக்குடபுடம் இடவும் (1 முழ நீள, அகல, உயரமுள்ள புடம்).

*பயன்பாடு*

இப்பற்பத்தில் $^1/_2$ குன்றி நிறை எடுத்துப் பசுவின் நெய்யுடன் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சயம், சுவாசம் முதலானவை தீரும்.

### 6. பவழப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஐந்து பலம் பவழத்தை எலுமிச்சம் பழச் சாற்றில் ஊறப்போட்டு, நான்காவது நாள் நன்றாய் அலம்பி ஒரு சிறு குடுவையில் போட்டு, வெள்ளெருக்கம் பால் பவழத்திற்கு மேல் ஒரு அங்குலம் இருக்கும்படி விட்டுக் குடுவையின் வாய்க்குச் சில்லுமூடிச் சீலை செய்து காய வைத்துக் குழிதோண்டி, 35 வறட்டியில் புடம் போடப் பற்பமாகும். இதனைக் கல்வத்தில் இட்டுப் பூலாம்பழச் சாற்றில் 4 சாமம் அரைத்து வில்லை செய்து காய வைத்து அகலில் இட்டுச் சீலை செய்து காய்ந்தபின் முன்போல் புடமிடுக. இது நன்கு பூத்திருக்கும்.

*பயன்பாடு*

வேளைக்கு $^1/_2$ குன்றி எடை நெய், வெண்ணெய் முதலியவைகளில் கொடுத்துக் கொண்டுவரவும்.

*தீரும் நோய்*

சர்வ கபநோய்களையும், மேகம் சம்பந்தமான உடல் எரிச்சல், காங்கை, நீர் எரிச்சல், நீர்க்கட்டு முதலியவற்றையும் குணப்படுத்தும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

### 7. பவழச் சிலாசத்துப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த பவழம் பலம்-1. சுத்தி செய்த கற்பூர சிலாசத்து பலம்-1. இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டுப் பிரண்டைச்சாறு விட்டு நான்கு சாமம்

அரைத்து வில்லை தட்டி வெயிலில் உலர்த்தி அகலில் அடக்கி மேல் மூடிச் சீலைசெய்து முழுப்புடம் இடவும். புடம் ஆறின பின் பார்க்க வில்லை வெளுத்துப் பற்பமாக இருக்கும். இதைக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை, தினம் இரு வேளை வெண்ணெய், நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

மேகச்சுரம், எலும்புருக்கி, மதுமேகம், வெள்ளை, வெட்டை, நீர்ச்சுருக்கு நீர் எரிச்சல், உட்டிண இருமல் முதலியன குணமாகும்.

இந்தப் பற்பத்தைத் தேனில் கொடுக்க மேக ஊறல், குன்மம், வாயு, ஆகியன தீரும்.

*பத்தியம்*

புளி தள்ளி, இச்சாபத்தியம்.

## 8. பலகறைப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு மட்கலயத்தில் தேவையான அளவு பலகறையைப் போட்டு, அவைகள் மூழ்க எலுமிச்சம் பழச்சாறு விட்டு, ஒரு இரவு வைத்து மறுநாள் கலயத்தின் வாய்க்குப் பொருத்தமான மூடியால் மூடிச் சீலை, செய்து, 30-40 வறட்டியில் புடம் இடவும். புடம் நன்றாய் ஆறின பின் கலயத்திலிட்ட பலகறையைப் பார்க்க வெளுப்பாகப் பூத்திருக்கும். இதை நன்றாய் அரைத்துக் குப்பியிலிடவும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தை வேளைக்குக் குன்றி எடை, தினம் இரு வேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

நீர் எரிச்சல், பக்கசூலை, மார்பு நோய், வயிற்றுவலி, ஈரல் நோய், கபக்கட்டு ஆகியவைகள் தீரும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 9. வெள்ளைச் சங்கு பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

மூன்று பலம் சங்குத் தண்டுகளைக் கொண்டு வந்து, கறுந்துளசி இலையை நெகிழ அரைத்துச் சிறு தேங்காய் அளவு உருண்டையாகத் திரட்டி, அதனுள் செருகி மண்சீலை ஏழு செய்து, சிறிது ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி எடுத்து, 50-60 வறட்டியில் புடம் இடவும். இது வெளுத்து இருக்கும். இந்தத் தண்டுகளை ஒரு கோப்பையில் போட்டுக் காற்று வாடையில் வைத்துவிடத் தானாகப் பூத்து மலரும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இரு வேளை வெண்ணெய், நெய் முதலியவற்றில் 3-5 நாள் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

வெள்ளை, நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல், நீர்க்கட்டு, தேகக்காங்கை, இருமல், காமாலை முதலியன குணமாகும்.

## 10. சிங்கி பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

அகத்திக்கீரையை அரைத்துச் சுமார் ஒரு தேங்காய் அளவு ஒரு சட்டியில் போட்டு, அதனிடையில் மான்கொம்பு சீவலைத் தேவையான அளவு செருகி அடுப்பில் வைத்து, மூலிகை தீயும் வரையில் எரித்து ஆறவிட்டு, மான்கொம்பு சீவலை எல்லாம் சேதப்படாமல் எடுத்து வைத்துக் கொள்க. அப்பால் நீர்முள்ளி இலையை நன்கு அரைத்துச் சுமார் ஒரு தேங்காய் அளவு உருண்டையாகத் திரட்டி, முன் எடுத்து வைத்துள்ள மான்கொம்பு சீவலை உள்ளே செருகி மண்சீலை 7 அல்லது 8 செய்து சிறிது உலர்த்தி 70-80 வறட்டியில் புடம் இடவும். புடம் நன்றாய் ஆறிய பின் நீர்முள்ளிக் கவசத்தில் இட்ட மான்கொம்பு சீவலைப் பார்க்க நன்றாய் வெளுத்து இருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

இத சரியாக வெளுப்பு நிறமாகக் கண்களுக்குப் புலப்படாவிடில் மீண்டும் கல்வத்திலிட்டு வெள்ளாட்டுப் பால் அல்லது ஆவின் பாலைச் சிறுக விட்டு 1-2 சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் இட்டு, மேல் அகல் மூடிச் சீலை செய்து 50-60 வறட்டியில் புடமிட நல்ல பற்பம் ஆகும்.

*பயன்பாடு*

கபம் அதிகரித்தபோது இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2-3 குன்றி எடை தினம் இரு வேளை தேனில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

மார்பு நோய், இடுப்புவலி முதலியவற்றிற்குக் குன்றி எடையாகத் தினம் இரு வேளை நெய்யில் கொடுத்து வருக.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 11. சிங்கி பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

இரண்டு பலம் எடையுள்ள மான் கொம்பைக் கொண்டுவந்து சுண்டுவிரல் கனமும், 1 அங்குல நீளமும் இருக்கும்படி பிளந்து வைத்துக் கொள்க.

அகத்திக் கீரையும் உளுத்தம்பருப்பும் சமனெடையாகக் கூட்டி அரைத்து முன் சித்தப்படுதிய ஒவ்வொரு துண்டுக்கும் விரல்கனம் இருக்கும்படி கவசம் இட்டுச் சிறிது உலர்த்திப் புற்றுமண்ணைச் சிறிது நீர் விட்டுப் பதமாக அரைத்துச் சீலைக்குத் தடவி, ஒவ்வொன்றிற்கும் ஏழு சுற்று சுற்றி, ஈரம் வற்றச் சாம்பலில் புரட்டி எடுத்து 60-70 வறட்டிகளின் நடுவில் பரப்பிவைத்துத் தீமூட்டவும். மான்கொம்புகள் வெந்து வெளுத்திருக்கும். இப்படி வெளுத்த மான்கொம்புகளைக் கல்வத்தில் போட்டுக் குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்துக் காலணா கனமும் அரையணா அகலமும் இருக்கும்படி வில்லைகள் செய்து வெயிலில் உலர்த்தி, அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலை செய்து 50 வறட்டியில் புடம் இடவும். இது நல்ல பற்பமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை தினம் இரு வேளை நெய். தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

மார்பு நோய், இருமல், கபக்கட்டு, அக்கினிமந்தம் முதலியன குணமாகும். இதனுடன் சிறிது பவழப்பற்பம் கூட்டிக் கொடுக்க மிகுந்த நன்மையைத் தரும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

*குறிப்பு*

அகத்திக்கீரையையும் உளுந்தையும் கூட்டி அரைத்துக் கவசமிட்டுப் புடம் இட்ட மான் கொம்பு தண்டுகளைக் குமரிச் சாற்றில் அரைப்பதற்குப் பதிலாகப் பொடுதலை இலையை அரைத்துக் கவசமிட்டு மண்சீலை செய்து 40-50 வறட்டியில் புடம் இட்டு எடுத்துக் கொள்வதும் சிலர் வழக்கம்.

## 12. சிங்கி பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

சிருங்கி என்று சொல்லப்பட்ட புள்ளிமான் கொம்பைக் கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிப் பலப்பக்குச்சி கனத்திற்குப் பிளந்து, மூன்று பலம் எடைக்கு ஒரு மட்கலயத்தில் போட்டு, இவைகள் மூழ்கச் சிற்றாமணக்கெண்ணெய் விட்டு 10 நாள் வரையில் ஊறவிட்டு எடுத்து வைத்துக் கொள்ளவும்.

முழ அகலம், நீளமுள்ள சீலையை இரண்டு மடிப்பாக மடித்துப் போட்டு, அதனில் முன் ஊறப்போட்டு வைத்துள்ள மான்கொம்பு துண்டுகளை வைத்துச் சுருட்டி, சிற்றாமணக்கெண்ணெயில் தேய்த்து 20-30 வறட்டியின் நடுவில் வைத்துத் தீ மூட்டவும். புடம் ஆறினபின் மான் கொம்புகளைப் பார்க்க நன்றாய் வெந்திருக்கும். இவற்றைச் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்தில் போட்டு வெள்ளாட்டுப் பால் விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் காலணா அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து உலர்த்தி அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலை செய்து 30-40 வறட்டியில் புடமிட நல்ல பற்பமாகும். இதைக் கல்வத்தில் இட்டு நன்கு அரைத்துக் குப்பியிலிடுக.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்குக் குன்றி எடை, தினம் இரு வேளை வெண்ணெய், நெய், தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

கபம் சம்பந்தமான இருமல், ஈளை, வாயு சம்பந்தமான மார்புவலி, வயிற்றில் சஞ்சரிக்கும் வாயு, தேக உளைச்சல் முதலியன குணமாகும்.

*பத்தியம்*

வாத, சீதளப் பண்டம் நீக்கி, இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 13. சுவர்ணமுத்துப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

சுருள் தங்கரேக்கு, கெட்டிமுத்து, நற்பவழம் வகைக்கு ஒரு வராகன் எடையாகக் கல்வத்தில் போட்டு, பிரண்டைச்சாறு விட்டு மூன்று சாமம் நன்றாய் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துப் பொருத்தமான அகலில் வைத்து மேல் மூடிச் சீலை செய்து, 75 வறட்டியில் புடம் இடவும். இது நன்றாய் ஆறினபின் அகலில் இட்டு வில்லையைப் பார்க்கச் சுண்ணமாக இருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

*பயன்பாடு*

இந்தச் சுண்ணத்தில் வேளைக்கு $1\ ^1/_2$ அரிசிப் பிரமாணம் தினம் இரு வேளை, நோய்க்கு ஏற்ற அனுபானங்களில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

இருமல், சயம், காசம், ஈளை, எலும்புருக்கி முதலியன குணமாவதுடன், நல்ல தேக ஒளிர்வும் பலமும் உண்டாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

*குறிப்பு*

இது சுண்ணமானபடியால் ஆரம்பிக்கும்பொழுது முதலில் சிறிது கடுமையானதாக இருக்கும். ஆகையால் கற்கண்டைக் கல்வத்தில் போட்டுப் பசுவின் நெய்விட்டு வெண்ணெய் பதத்திற்கு அரைத்து வைத்துக்கொண்டு, வேளைக்குச் சுண்டைக்காய் அளவு எடுத்து அதனில் இந்தப் பற்பத்தை மத்தித்துக் கொடுக்க, மருந்தின் வேகம் குறையும். அல்லது ஒரு பெரிய தேங்காயைத் துருவி எடுத்து அதனில் புளியங்கொட்டை மேல் தோலை இடித்துச் சூரணம் செய்து சுமார்

2 $^{1}/_{2}$ தேக்கரண்டி அளவு கூட்டிப் பிசறிப் பிழிய நெய் காணும். வேளைக்கு 20 துளியாக விட்டு அதனில் இச்சுண்ணத்தைக் கூட்டிக் கொடுப்பது சாலச் சிறந்தது.

### 14. நாகரசப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

இலுப்பை எண்ணெயில் இருபத்தொரு முறை உருக்கிக் காய்ந்த நான்கு தோலா நாகத்துடன், நான்கு தோலா வாலைரசத்தைத் தொந்தித்துக் கல்வத்தில் போட்டு, அதனுடன் எட்டு தோலா சுத்தி செய்த சங்கு பாடாணத்தைக் கூட்டி 80-தோலா எடையுள்ள வெள்ளைச் சாட்டரணைச் சாற்றைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக் கை ஓயாமல் நன்றாக அரைத்து, மெழுகுபதம் வந்த சமயம் பட்டாணி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

அப்பால் குழம்புச் சட்டியைப் போன்ற வாயகன்ற சட்டியைக் கொண்டு வந்து, நடுவில் முன் முடித்து வைத்துள்ள மாத்திரையைக் குவித்து அதன் மேல் 10-தோலா எடை உள்ள செப்புத்தட்டை 3-அங்குலம் உயரமும் 4-அங்குலம் அகலமும் இருக்கும்படியாகக் கிண்ணம் போல் செய்து மூடவும். சட்டியின் அடிப்பாகத்திற்கும் கிண்ணத்தின் பொருத்து வாய்க்கும் இடையில் ஏற்பட்ட சந்துக்கு உளுந்து சீலை செய்து காயவிட்டு, இரண்டரை வீசை இந்துப்பைப் பொடி செய்து போட்டு அழுத்தி அடுப்பில் வைத்து, அரசங்கட்டையில் ஒரு சாமம் தீபாக்கினியாகவும், இரண்டு சாமம் கமலாக்கினியாகவும், மூன்று சாமம் காடாக்கினியாகவும் எரிக்கவும். இரண்டு நாள் ஆறவிட்டுச் சட்டியில் இட்ட மாத்திரைகளை அரைத்துப் பத்திரப்படுத்துக. இது வெளுப்பாக இருக்கும். சில சந்தர்ப்பம் எரிப்புக் குறைவால் சரிவர முடியாமல் நிறம் பேதப்பட்டால் மறுபடியும் கல்வத்திலிட்டு வெள்ளைச் சாட்டரணைச் சாற்றில் இரண்டு சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் மூடிச் சீலை செய்து 20 வறட்டியில் புடமிட வெளுக்கும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்கு 2-3 அரிசி அளவு நெய், தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

மஞ்சள், வெள்ளை, பட்சவாதம், திமிர், சயம், காசம் முதலியவை குணமாவதுடன் நல்ல ஒளிர்வும் பலமும் சுக்கில விருத்தியும் உண்டாகும்.

*பத்தியம்*

புளி தள்ளி, இச்சாபத்தியம்.

## 15. வெள்வங்கப் பவழப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு பலம் சுத்தி செய்த வெள்வங்கத்தை ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு உருக்கி, ஒரு பலம் பாதரசத்தைத் தொந்தித்துக் கல்வத்தில் போட்டு அரைக்கப் பொடியாகும். இதனில் ஒரு பலம் சுத்தி செய்த பவழத்தைப் பொடி செய்து போட்டுச் சுண்ணநீர் விட்டு, நாள் ஒன்றுக்கு நான்கு சாமம் வீதம், இரண்டு மூன்று நாள் அரைத்து மெழுகு பதத்தில் வில்லை தட்டிக் காயவைத்து அதன்மேல் 7 சுண்ணச் சீலை செய்து நன்குலர்த்தி 30-40 வறட்டியில் புடம் இடவும். புடம் ஆறின பின் சுண்ணச் சீலையை நீக்கி வில்லையைக் கல்வத்தில் போட்டுச் சுண்ண நீர்விட்டு நான்கு சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி உலர்த்தி ஒரு அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலை செய்து உலர்த்தி, 30 வறட்டியில் புடம் இடவும். இவ்விதம் பின்னும் ஒரு புடம் இட்டு எடுக்க நல்ல பற்பமாகும். அரைத்துக் குப்பியில் இடவும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்கு $^1/_2$ -1 குன்றி எடை எடுத்து நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் தினம் இரு வேளை, 7நாள் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

மூலம், அத்திசுரம், எலும்புருக்கி, தீராத வெள்ளை, நீர்ச்சுருக்கு, மேகவாயு, சூலை, கிரந்தி முதலியவை குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

*குறிப்பு*

சிலர் சுண்ணநீருக்குப் பதிலாகக் குப்பைமேனிச் சாற்றால் அரைத்துப் புடம் இடுவது வழக்கம்.

## 16. வெள்ளிப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு பலம் வெள்ளிச் சரிகையை ஒரு குடைவான மண்ணோட்டில் வைத்துக் கன்னான் உலையில் இட்டு ஊதிச் செந்நிறமாக இருக்கும்போது மணித்தக்காளி இலைச் சாற்றில் கொட்டவும். மீண்டும் இந்தச் சரிகையை எடுத்து மண்ணோட்டிலிட்டு உலையில் வைத்து ஊதிச் செந்நிறமாக இருக்கும்போது முன்போல் மணித்தக்காளி இலைச்சாற்றில் கொட்டவும். இப்படி 5 முறை செய்தபின் கல்வத்தில் போட்டு மணித்தக்காளிச் சாறு விட்டு 4 சாமம் நன்றாய் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டி வெயிலில் உலர்த்தி, அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து, 20 வறட்டியில் புடம் இடவும். புடம் ஆறின பின் அகலில் இட்ட மருந்தைப் பிரமதண்டு இலைச்சாறு, உப்பிலாங் கொடிச்சாறு, சிறுகாஞ்சொறி இலைச்சாறு ஆக ஒவ்வொன்றிலும் தனித்தனியே 4 சாமம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி முன்போல் புடமிட்டு எடுக்க நல்ல பற்பமாகும். இதை அரைத்துச் சீசாவில் இடவும்.

*பயன்பாடு*

இந்தப் பற்பத்தில் வேளைக்கு ஒரு துவரம் பருப்பு அளவு தினம் இரு வேளை தாதுவிருத்திக்குரிய ஏதேனும் ஒரு இலேகியத்தில் அனுபானமாக வைத்து 20 நாள் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

தாதுவிருத்தி உண்டாகும். இருமல் குணமாகும்.

*பத்தியம்*

பத்தியம் இல்லை. நல்ல ஆகாரம் உட்கொள்ளவும்.

## 17. மான்கொம்புப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

அரத்தினால் இராவி எடுத்த 5 தோலா மான்கொம்புப் பொடியுடன் சமனெடை ஓமம் சேர்த்து ஒரு குடுவையில் போட்டு நிறைய வெள்ளெருக்கம் பால் விட்டு 3 நாள் ஊறவைத்து, நான்காவது நாள் ஓடுமூடிச் சீலை செய்து காய்ந்தபின் 150 வறட்டியில் புடமிடுக. ஒருவேளை கறுத்திருப்பின் அதனை வெள்ளெருக்கம் பாலால் அரைத்து வில்லை செய்து காயவைத்து ஒட்டிடைக்குச் சீலை செய்து 100 வறட்டியில் புடமிடவும். நல்ல பற்பமாகும்.

*பயன்பாடு*

இதனில் வேளைக்கு 1/2 குன்றி அளவு தினம் இரு நேரம், 14 நாள் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சுரம், இருமல், பேதி இத்தியாதி கூடிய சயம் ஆகியவை குணமாகும்.

*பத்தியம்*

கோதுமை ரவையை நெய்யில் வறுத்துப் பாலிட்டுக் கஞ்சி செய்து பருகவும். வேறொன்றும் ஆகாது.

## 18. மான்கொம்புப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

இரண்டு பலம் புள்ளிமான் கொம்பைச் சிறு துண்டுகளாக நறுக்கி, கோமியத்தில் ஒரு நாள் ஊறப்போட்டு, மறுநாள் அலம்பி எடுத்துப் பத்து வறட்டியின் நடுவில் வைத்துப் புடம் இடவும். வெந்தபின் கல்வத்தில் இட்டுக் கற்சங்கன் இலைச் சாற்றால் இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து காயவைக்கவும். பின் கழற்சி இலையை அரைத்து விளாங்காய் அளவு கவசம் இட்டு, மண்சீலை செய்து, சாம்பலில் புரட்டி, 40 வறட்டியில் புடமிடப் பற்பமாகும்.

*பயன்பாடு*

வேளைக்குப் பணவெடை அளவு தினம் இரு வேளை நெய், வெண்ணெய் ஆகியவைகளில் உண்ணவும்.

*தீரும் நோய்*

நீரடைப்பு, நீர் எரிச்சல், சயம், ஈளை, மேகக்காங்கை, மார்பு நோய் முதலியவைகளைக் குணப்படுத்தும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 19. மேகராசாங்கப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

கல்மதம், கல்நார், சிலாசத்து வகைக்குப் பலம்-1. இம்மூன்றினையும் ஒரு மட்பாத்திரத்தில் போட்டு, அரைப்படி பனங்கள் ஊற்றிச் சிறு தீயாக எரித்து

ஆறியபின் நீர் விட்டு அலம்பிக் கல்வதில் இட்டுக் கோங்கிலவம்பட்டைச் சாற்றில் எட்டு சாமம் அரைத்து வில்லை செய்து காயவைத்து அகலில் அடக்கிச் சீலை செய்து காய்ந்த பின், 25 வறட்டியில் புடம் இடுக. இம்மருந்துடன் கெட்டிமுத்து பலம் 1/4, நற்பவழம் பலம் 1/4 கூட்டிப் புளிப்புமாதுளம் பழச்சற்றில் 8 சாமம் அரைத்துச் சிறு வில்லைகள் செய்து வெயிலில் உலர்த்தி, அகலில் பரப்பி மூடிச் சீலை செய்து காய்ந்த பின் 20 வறட்டியில் புடம் இடுக. இதனை மறுபடியும் புளிப்புமாதுளம் பழச் சாற்றில் அரைத்து முன்போல் 5 புடம் போடப் பற்பமாகும்.

*பயன்பாடு*

வேளைக்கு $^1/_2$ அல்லது 1 பணவெடை தினம் இரு வேளை வெண்ணெயில் உட்கொள்ள அத்திசுரமும்; இளநீரிலுண்ணக் கல்லடைப்பு, நீரடைப்பு, சதையடைப்பும்; நெய், தேன் இவைகளில் கொள்ள நாட்பட்ட சயம், காசம், புண்புரை, எலும்புருக்கி முதலியனவும் தீரும். இதனைப் பிணியாளர் எவ்வகை நிலையில் இருப்பினும் மெதுவாகக் கொடுத்துக் கொண்டு வரலாம். மருந்தினால் உபத்திரவம் ஒன்றும் உண்டாகாது.

## 20. பூநாகப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு வீசை செம்மண் பூநாகம் கொண்டுவந்து மோரில் போட்டு எல்லாம் கக்கின பின் சுத்தமாக அலம்பிக் காய வைத்து இடிக்கவும். பின் கல்வத்தில இட்டு ஆடுதின்னாப் பாளைச் சாற்றில் ஒரு நாள் அரைத்து வில்லை செய்து காயவைத்து அகலில் இட்டுச் சீலை செய்து, 100 வறட்டியில் புடமிடவும். இங்ஙனம் 9 புடமிடப் பற்பமாகும்.

*பயன்பாடு*

வேளைக்கு $^1/_2$ அல்லது ஒரு குன்றி நிறை நெய், தேன் முதலியவற்றுள் தினம் இரு வேளை 15 நாள் கொள்ளவும்.

*தீரும் நோய்*

கொடிய காசம், மேகச்சுரம், தாகம் முதலியவைகளைப் பரிகரிக்கும்.

*பத்தியம்*

சமயத்துக்கேற்றவாறு பத்தியம் இருத்தல் நலம்.

## 21. இரசப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த பாதரசம் 4 வராகன் எடை எடுத்து ஒரு கொப்பரைத் தேங்காய்க்குள் அடைத்து நன்றாக மூடவும். குதிரை லாயத்தில் சிறிய குழி தோண்டி, மூத்திரம் சாரும் வண்ணம் பூமியில் மேற்சொன்ன கொப்பரையைப் புதைத்து 40 நாட்கள் சென்றபின் இரசத்தை தனியாக எடுத்து, ஒரு செப்புக் குழாய்க்குள்ளோ அல்லது பித்தளைக் குழாய்க்குள்ளோ அடைக்கவும். பின்பு சீலைமண் செய்து ஒரு பானைக்குள் இதை வைக்கவும். பானைக்குள் மணலைப் போட்டு, பானையை அடுப்பின் மேலேற்றி 60 நாழிகைக் கமலாக்கினியாக எரிக்கவும். சூடாறிய பின் இதை எடுத்து உடைக்கத் துல்லியமான பாதரசப் பற்பம் கிடைக்கும்.

*பயன்பாடு*

தக்க அனுபானங்களில் கொடுத்துவரக் காசம், சுவாசம், இரைப்பு, ஈளை, இருமல் ஆகியவைகள் குணமாகும்.

## 22. இரசப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

சீற்றாமணக்கு வேர்ப்பட்டையைத் தண்ணீர் விட்டு நன்றாக அரைத்து விளாங்காய் அளவு எடுத்துக் குகையாகச் செய்யவும். அதனுள் சுத்திசெய்த பாதரசத்தை 8 வராகன் எடை விட்டு மறுபடியும் அதன் வேர்ப்பட்டையை அரைத்த விழுதினால் மூடவும். ஒரு சட்டியில் உப்பைப் பரப்பி அதன்மேல் மேற்சொல்லிய விழுதை வைத்து மறுபடியும் உப்பைப் போட்டு மூடி மேலே வாய்க்குப் பொருந்தும் ஒரு சட்டியினால் மூடிச் சீலைமண் செய்யவும்.

நன்றாகக் காய்ந்த பின்னர் இதனை அடுப்பின் மேலேற்றி 2 நாட்கள் வரை இரவு, பகல் விடாமல் ஒரே விதமான விறகினால் எரிக்கவும்.

பின்னர் மருந்து தானாகவே ஆறிய பின் மூன்றாம் நாள் காலை சீலைமண்ணைத் திறந்து பார்க்க இரசப்பற்பம் கிடைக்கும். இதனைப் பொடி செய்து ஒரு சிமிழில் வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

காலை நேரங்களில் தேனில் உட்கொள்ளவும். இவ்வாறு 3 நாட்கள் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

ஐய நோய்கள் குணமாகும்.

*பத்தியம்*

பசுவின் பால், நெய் சேர்த்துக் கொண்டு புளிப்பு, உப்பு, முதலான சுவையுள்ள பதார்த்தங்களை நீக்கிவிடவும்.

## 23. தாளகப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

தாளகம் ஒரு பலம் எடுத்துச் சுத்தி செய்து, சர்க்கரை 2 பலத்துடன் கூட்டி வெற்றிலைக் காம்பின் சாற்றினால் 2 நாழிகை அரைத்து வில்லைகளாகத் தட்டி, நிழலில் காயவைத்துக் கொள்ளவும். இதைக் காகிதத்திற்குள் வைத்துச் சுருட்டி மேலே புளியஞ்சாம்பலைக் குழைத்துப் பூசவும். இவ்வாறு மூன்று தடவை பூசவும். அதற்கு மேல் 4 தடவை சீலைமண் செய்து, ஒரு முழ நீள, அகலமுள்ள குழியில் வறட்டிகளை அடுக்கி அதன் நடுவில் இதை வைத்து மேலும் எருமுட்டைகளை வைத்துப் புடம் இடவும்.

*பயன்பாடு*

இப்பற்பத்தை எடுத்துத் தேனில் குழைத்துச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சூலை, வாத, ஐய, சுவாச காசங்கள் தீரும்.

## 24. முத்துச்சிப்பிப் பற்பம்

ஐந்து பலம் முத்துச்சிப்பியை 10 வறட்டியின் நடுவில் வைத்துப் புடம் இட்டு வெந்தபின் கல்வத்தில் இட்டுக் குமரிச்சாற்றினால் இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து வெயிலில் உலர்த்தவும். பொன்னாங்காணி இலையை அரைத்துச் சிறு தேங்காய் அளவு அவ்வில்லைக்குக் கவசம் செய்து, இரண்டு மூன்று சீலை செய்து சாம்பலில் புரட்டி, 30 வறட்டியில் புடம் இடப் பற்பமாகும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1 அல்லது $^1/_2$ பணவெடை தினம் இரு வேளை, ஏழு அல்லது பத்து நாள் நெய்யில் கொள்ள, உட்டிணத்தால் உண்டான கபநோய்கள் [illegible]ர்த்தியாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 25. வெங்காரப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

இரண்டு பலம் பொரித்த வெங்காரத்தைக் கல்வத்தில் இட்டு, வயல் நண்டுச் சாற்றினால் இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தவும். முள்ளங்கி இலையை அரைத்து விளாங்காய் அளவு வில்லைக்குக் கவசமிட்டு, மண்சீலை செய்து சாம்பலில் புரட்டி, 30 வறட்டியில் புடம் இடப் பற்பமாகும்.

*பயன்பாடு*

வேளைக்கு $^1/_2$ அல்லது 1 குன்றி எடை, சமயத்துக்கேற்ப அனுபானங்களில் கொடுக்கச் சீதள சம்பந்தமான இருமல், சுரம் முதலிய பிணிகள் நீங்கும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 26. மகா பூபதி பற்பம்

*சரக்கு*

| | |
|---|---|
| பவளப் பற்பம் | 1 பங்கு |
| வெங்காரப் பற்பம் | 2 " |
| மான்கொம்புப் பற்பம் | 3 " |
| ஆமையோட்டுப் பற்பம் | 4 " |
| முத்துச்சிப்பிப் பற்பம் | 5 " |
| கருடக்கல் பற்பம் | 6 " |
| படிகாரப் பற்பம் | 7 " |
| சங்குப் பற்பம் | 8 " |

*செய்முறை*

இவைகளைக் கல்வத்தில் இட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1 அல்லது 2 குன்றி நிறை எடுத்து நெய் அல்லது வெண்ணெயில் தினம் இரு வேளை உண்ணவும்.

*தீரும் நோய்*

நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீரெரிச்சல், நீர்க்கட்டு, மார்புநோய், சயம், ஈளை, மேகக்காங்கை முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

பிணிக்கேற்ற பெற்றி அறிந்து ஒவ்வாத பதார்த்தங்களை நீக்கி உண்க.

## 27. கறுவங்கப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த இரண்டு பலம் கறுவங்கத்தை உருக்கி, வெள்ளைப்பூ, வாடாமல்லிச் சமூலத்தைச் சிறுக நறுக்கிக் கொஞ்சம் கொஞ்சமாய்ப் போட்டுக் கரண்டியால் தோய்த்துக் கொண்டிருக்க, 2-3 மணி நேரத்திற்குள் மஞ்சள் வண்ணமான பற்பமாகும். இதனைக் கல்வத்தில் இட்டு மேற்குறித்த மூலிகைச் சாற்றில் 4 சாமம் அரைத்து, விரல்போல் திரட்டிக் காயவைத்துக் கல்லாலங்கட்டையை (குருவி ஆலங்கட்டை) ஒரு முழ நீளமுள்ளதாகக் கொண்டுவந்து நெடுக சாண் ஆழம் இறங்க நடுவில் தமரிட்டுக் குடைந்து அதில் முன்னே சித்தப்படுத்திய கறுவங்கத்தைச் செலுத்தித் துவாரத்திற்கு முன் குடைந்தெடுத்த சக்கைகளைப் போட்டு அடைத்துக் கோணியினால் சீலை செய்து உலர்த்திக் குழிவெட்டிக் கனபுடமாக 800 வறட்டிகளைக் கட்டைக்குக் கீழும் மேலும் அடுக்கி, புளியம்புறணி போட்டுப் புடம் வைத்து 5-6 நாள் சென்றபின் கொஞ்சம் கொஞ்சமாக மேல் சாம்பலைத் தள்ளிச் சீலையின் மத்தியிலிருக்கும் பற்பத்தைக் கவனமாக எடுத்துச் சீசாவில் பதனம் செய்யவும்.

*பயன்பாடு*

வேளைக்கு $^{1}/_{2}$ முதல் 1 குன்றி நிறை வரை தினம் இரு வேளை நெய்யிலேனும் வெண்ணெயிலேனும் 7 நாள் குழைத்து உண்ணவும்.

*தீரும் நோய்*

கறுமேகம், மேகவிரணம், வெள்ளை முதலிய கடும் பிணிகள் தீரும். இதன் குணத்தை மருந்து உண்டது முதல் சற்றேறக் குறைய 15 நாள் வரையில் பொறுமையுடன் இருந்துப் பின் போதிய குணம் இல்லை எனின் மற்றொரு முறையும் உட்கொள்ளல் வேண்டும். வியாதி எத்துணைக் கடினமுடையதேனும் மூன்று முறையில் குணமாகும் என்பது தேற்றம். குட்டத்திற்கும் மேகத்தடிப்பிற்கும் 6 முறையாக 10 நாள் இடைவிட்டு விட்டுச் சாப்பிடுதல் வேண்டும். இந்தப் பற்பத்தை

அதிசாரபேதி, பிரசவத்திற்குப்பின் வரும் கிராணி, சயம், ஈளை, இருமல், தீரா விக்கல், எலிக்கடி முதலிய பிணிகளுக்குத் தேனிலேனும் நெய்யிலேனும் குழைத்துக் கொடுத்தல் நலம்.

## 28. செம்புப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த செம்பு 10 கழஞ்சு எடுத்து ஈசலிறகைப் போல் மெல்லிய தகடாகத் தட்டிக்கொள்ளவும். ஒரு விரற்கடை நீளம் உள்ளதாக அதைக் கம்பியாகக் கத்தரித்துக் கொள்ளவும். இத்துண்டுகளை எருக்கம் பாலில் 3 நாள் ஊறவைக்கவும்.

ஒரு கல்வத்தில் சுத்திசெய்த இரசம் 3 கழஞ்சு, சுத்தி செய்த நெல்லிக்காய் கந்தகம் 5 கழஞ்சு, சுத்தி செய்த வெள்ளைப் பாடாணம் 1 கழஞ்சு போட்டு நன்றாக மத்திக்கக் கறுப்பான பொடியாகும். பின்பு அழிஞ்சில் பருப்பு ஒரு உழக்குப் போட்டு, எருக்கம் பழுப்புச் சாறு விட்டு நன்றாக அரைத்து ஒரு குகை செய்து கொள்ளவும். இதை நிழலில் நன்றாக உலர்த்திக் கொள்ளவும். முன்னே சொல்லப்பட்ட தூளையும் செம்புத் தகட்டைக் கம்பிகளாக்கியதையும் தூளாக்கிக் குகைக்குள்ளே வைத்து மூடி, வெள்ளைத் துணியினால் அதன் மேல் சுற்றவும். இவ்வாறு மூன்று அல்லது நான்கு தடவை சுற்றவும்.

ஒரு சட்டியை எடுத்து அதற்குள்ளே துணி சுற்றிய குகையை வைத்துச் சட்டியின் வாயைத் தகுந்த ஒரு ஓட்டினால் மூடிச் சீலைமண் செய்யவும். ஒரே அளவு நிறையுள்ள வறட்டிகளை வராகபுடமாக அடுக்கி, அதன் நடுவில் சட்டியை வைத்துப் புடமிடவும்.

*பயன்பாடு*

புடம் ஆறியபின் கலசத்தைத் திறந்து மருந்தை எடுத்துக் கொள்ளவும். நோயின் பலம் அறிந்து தேனில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

குன்மம், ஈளை, இருமல், காசம் முதலியன.

## 29. அரிதாரப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

வெந்த மண்டையோட்டைக் கொண்டு வந்து, கல்வத்தில் இட்டுச் சுண்ணாம்பு நீர் விட்டு நன்றாக அரைத்துத் தட்டான் பொன்னை உருக்குவதற்கு

வைத்திருக்கும் மண் குகையைப் போல் வேண்டிய அளவுக்குக் குகை செய்து கொள்ளவும்.

அது நன்றாகக் காய்ந்தவுடன், சுத்திசெய்த தாளகத்தை அதனுள் வைத்து மூடிச் சீலை மண் செய்யவும். சாண் நீள, அகலம் உள்ளக் குழியை வெட்டி அதில் வறட்டிகளை அடுக்கி அதனுள் மேற்படி குகையை வைத்துப் புடம் போடவும்.

*பயன்பாடு*

சுத்தமான தாளகப் பற்பம் கிடைக்கும். இதை நோயாளியின் உடம்பு பலம், காலம், ஆகியவைகளை அறிந்து ஒன்று அல்லது 2 அரிசி எடை வீதம் தேனில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

ஈளை, இருமல், உளைமாந்தம், மந்தாரகாசம், சயம், வண்டுக்கடி, குட்டம், எலிக்கடி முதலிய நோய்கள் தீரும்.

## 30. அரிதாரப் பற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

அரிதாரம் 2 பலம் ஒரே கட்டியாக எடுத்துச் சுண்ணாம்பிற்குள் பொதித்து வைத்து 2 அல்லது 3 நாட்கள் சென்ற பின்பு எடுத்து நன்றாகக் கழுவிவிடவும். பின்பு கற்றாழஞ் சாற்றில் ஒரு நாள் அரைக்கவும். புரசம்பட்டைச் சாற்றில் மறுநாள் அரைக்கவும். எருக்கம் பாலில் ஒருநாள் முழுவதும் அரைத்து வில்லைகளாகச் செய்யவும். நன்றாக உலர்ந்தபின், ஒரு புதுச்சட்டியில் 2 படி உப்பை இட்டு அதற்கு மேல் ஒரு உழக்குப் புளியஞ் சாம்பல் போட்டு அதன் மேல் வில்லைகளை வைக்கவும். அதன்மேல் மறுபடியும் புளியம்புறணி சுட்ட சாம்பலை இட்டு 2 படி உப்பைப் போடவும். அச்சட்டியின் வாய்க்குப் பொருந்தும்படியான ஒரு மூடியால் அகலினால் மூடிச் சீலைமண் செய்யவும். இதனை அடுப்பின் மேலேற்றி 12 சாமங்கள் மந்தாக்கினியாக எரிக்கவும். சுத்தமான அரிதாரப் பற்பம் கிடைக்கும்.

*பயன்பாடு*

இதில் $3\ ^1/_2$ குன்றி அளவு எடுத்துச் சாப்பிட்டு வரவும்.

*தீரும் நோய்*

- ❖ தும்பைச் சாற்றில் உட்கொள்ள குளிர் சுரம் தீரும்.
- ❖ திப்பிலிச் சூரணத்துடன் உட்கொள்ள சந்தி தீரும்.

- தேங்காய்ப் பாலுடன் அருந்திவர வாத, கப நோய்கள் குணமாகும்.
- வெற்றிலைச் சாற்றுடன் சேர்த்துச் சாப்பிடக் கபம் போகும்.
- வெண்ணெயுடன் குழைத்து நல்க விக்கல் நிற்கும்.
- சுக்கு, திப்பிலி, மிளகுச் சூரணத்துடன் சாப்பிடச் சுவாசகாசம் தீரும்.
- மோரில் உட்கொள்ள அதிசாரம் தீரும்.
- நெற்பொரிமாவுடன் சாப்பிட வாந்தி நிற்கும்.
- மருதம்பட்டைச் சாற்றில் சாப்பிட்டால் சுக்கிலமேகம் நிற்கும்.
- முறைக்காய்ச்சலுக்குக் குப்பைமேனிச் சாற்றில் உண்ணவும்.
- இரத்தப்பித்தம் தீரவேண்டுமானால் செங்கழுநீர்க் கிழங்குச் சாற்றில் நல்கவும்.
- கபரோகங்கள் நிவர்த்தியாகவேண்டுமானால் வெள்ளை நொச்சியிலைப் பொடியுடன் கூட்டிச் சாப்பிடவும்.
- அதிமூத்திர நோய் நிற்கத் தேட்கொடுக்கியிலைச் சாற்றில் உட்கொள்ளவும்.
- கடிவிடங்கள், சுரம், குட்டம் முதலான நோய்கள் தீர வேண்டுமெனில் இப்பற்பத்தைத் திப்பிலித்தூள், தேன் ஆகியவற்றுடன் கூட்டிச் சாப்பிடவும்.
- கொடிவேலிச் சாற்றிலிடக் (சாக்கிரதையாக நாக்கு, ஈறு முதலான இடங்களில் படாமல் விழுங்கவும்) கிராணிகள் தீரும்.
- நாயுருவி இலைச் சாற்றுடன் உட்கொள்ள மூல நோய்கள் தீரும்.
- பருத்திவிதைப் பொடியுடன் இதைச் சாப்பிடக் குளிர் நிற்கும்.

### 31. நாகப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

துத்தநாகம் ஒரு பலத்தை ஒரு கடாயில் இட்டு உருக்கிப்

பசுவின் மூத்திரம்

எருக்கம் பால்

நல்லெண்ணெய்

இம்மூன்றில் தனித்தனியே விட்டுச் சுத்தி செய்து கொள்ளவும். இந்நாகத்தை ஒரு புதுச் சட்டியில் இட்டு உருக்கிப் புளியம் புறணியை அதில் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு ஒரு கோலினால் கிளறி வரவும். நாகம் பற்பமாகும்.

இதனுடன் சுத்திசெய்த இரசம் கூட்டிப் பிசைந்து ஒரு அகலில் வைத்துச் சீலைமண் செய்து காய்ந்த பின்பு புடம் போடவும். சுத்தமான பற்பம் கிடைக்கும்.

*பயன்பாடு*

இப்பற்பத்தில் ஒரு உளுந்து அளவு எடுத்துச் சர்க்கரையில் வைத்துக் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இதனால் இருமல், நீரிழிவு, பாண்டு, பிரமியம், குடல் வாதங்கள், ஐயநோய்கள், வளிநோய்கள், குட்டம் முதலானவை தீரும்.

## 32. தங்கப் பற்பம்

*சரக்கும் செய்முறையும்*

பொன் தகடு 2 $^{1}/_{2}$ பலம் எடுத்துச் சுத்திசெய்து கொள்ளவும்.

சுத்திசெய்த பாதரசம் 8 பலம்

நெல்லிக்காய் கந்தகம் 6 பலம்

கல்வத்தில் இட்டு நன்றாக அரைத்துக் கொள்ளவும். பின்பு பொன் தகட்டைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி அவற்றுடன் சேர்த்து

செம்பரத்தம்பூச் சாறு

அரசங்கொழுந்துச் சாறு

ஆலங்கொழுந்துச் சாறு

தாமரைப்பூச் சாறு

சோற்றுக் கற்றாழைச் சாறு

முதலான சாறு வகைகளைக் கொண்டு தனித்தனியே ஒவ்வொரு சாமம் அரைத்து வழித்துக் கொள்ளவும்.

பின்பு இதனை ஒரு காசிக்குப்பிக்குள் முக்கால் பாகம் வரும் வண்ணம் இட்டு, அதன் வாய்க்குத் தக்கபடி ஒரு மூங்கில் குச்சியைத் தக்கையாகச் செய்து அடைத்துவிடவும். பின்பு காசிக்குப்பிக்கு 7 தடவை சீலைமண் செய்யவும். ஒரு பானையில் அரைவாசி மணல் போட்டு, அதன்மேல் மேற்சொல்லிய காசிக்குப்பியை (நன்றாக உலர்ந்த பின்பு) வைத்து மேலும் அதன் கழுத்துவரை மணல் போட்டுவிடவும். பின்பு அந்தப் பானை வாய்க்குச் சீலைமண் 3 தடவை செய்து காயவைக்கவும்.

இந்தப் பானையை அடுப்பின் மேலேற்றி 3 நாட்கள் இரவும் பகலும் விடாமல் எரிக்கவும். புடம் தானாகவே ஆறியபின் இதை உடைத்து மருந்தைக் கவனமாக எடுத்து கல்வத்திலிட்டு நுணுக்கிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் 3 $^{1}/_{3}$ குன்றி அளவு எடுத்து அதனுடன் கிராம்பு , திப்பிலி, சாதிக்காய், கற்பூரம் ஆகியவற்றின் சூரணத்துடன் சேர்த்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

கபநோய் நீங்கும். தாதுநீற்றல் முதலான பற்பல வியாதிகளும், நரை, திரையும் மாறும்.

## செந்தூரங்கள்

### 1. தனிரசச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு சீனாக் கோப்பையிலாவது அல்லது எனாமல் கோப்பையிலாவது ஒரு பலம் வாலை ரசத்தை விட்டு வெயிலில் வைத்து, இரசம் முழுகும் அளவு செந்தூர திராவகம் விடவும். 1 மணி நேரத்திற்கு ஒரு முறை துடைப்பக் குச்சியால் கிளறிக் கொடுக்கவும். ஒரு சமயம் திராவகம் சுண்டி விட்டதாகப் புலப்படின் மீண்டும் சிறிது திராவகம் விடவும். இவ்வாறு விட்டுக் கிளறிக் கொடுத்துக் கொண்டுவர இரசம் உருவுமாறி வெளுப்பாக மாவு போல் ஆகும். இதை ஒரு பனை ஓலையைக் கொண்டு வழித்து ஏழு சீலை செய்து வைத்துள்ள குப்பியில் விட்டு வாயைப் பலப்பக்கல்லால் அடைத்துச் சீலை செய்து, நான்கு சாமம் எரித்து, ஒரு இரவு ஆறவிட்டு, மறுநாள் பார்க்க இரசம் சிவந்து அடியில் இருக்கும். இதை ஒரு குடைக்கம்பி கொண்டு சுறண்டி எடுத்துக் கல்வத்தில் போட்டு அரைத்துப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் $^{1}/_{2}$ அரிசி அளவு எடுத்து நெய், தேன் இவற்றில் ஒரே வேளை கொடுக்கவும். மூன்று நாள் வரையில் சிறுகீரை வேர்க் குடிநீரைக் காலை, மாலையில் கொடுத்து வரவும். இதில் குணம் தெரியாவிடின் நான்காவது நாள் ஒரு வேளை முன்போல் கொடுத்துச் சிறுகீரை வேர்க் குடிநீரைக் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

இருமல், சுவாசகாசம், வாதப்பிணிகள் தீரும்.

*பத்தியம்*

இரண்டு நாள் வரையில் பால் சாதம் கொடுக்கவும். மூன்றாவது நாள் புளி தள்ளி, இச்சாபத்தியமாக அன்னம் கொள்ளவும்.

### 2. சண்முகதளச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

இலிங்கம்,வீரம், பூரம், தாளகம் வகைக்குப் பலம் $^1/_4$. வாலைரசம் பலம்-2, கந்தகம் பலம்-1. இவற்றுள் இலிங்கம் முதல் தாளகம் ஈறாக உள்ள சரக்குகளைக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்து எடுத்துக் கொள்க. பின்பு கந்தகத்தைக் கல்வத்தில் போட்டுக் கம்மாறு வெற்றிலைச் சாறு விட்டுக் குழம்பு பதமாக அரைத்து, ஒரு சிறு விளாங்காய் அளவுள்ள குடுவையின் உட்புறத்திலும் அதன் வாய்க்குப் பொருத்தமான அகலின் உட்புறத்திலும் தழும்பப் பூசி ஒரு நாள் நிழலில் காயவிட்டு, மறுநாள் இந்தக் குடுவையில் முன் அரைத்து வைத்துள்ள தூளில் முக்கால் பாகம் போட்டு நடுவில் பள்ளம் செய்து அதனில் வாலைரசத்தை விட்டு, மிகுதியுள்ள தூளை மேலேபோட்டு அசையாமல் மேல் மூடியிட்டு, மண் சீலை ஏழு எட்டு செய்து வெயிலில் வைத்துக் காய்ந்தபின் எடுத்துக்கொள்க.

இதற்கு மேல் $2^1/_2$ படி அளவு கொள்ளத்தக்க ஒரு மட்பாண்டத்தில் இரண்டு படி வறுத்த உப்புடன் இடித்து எடுத்து 15-பலம் பிரண்டையைப் போட்டுப் பிசறி 2-3 விரற்கடை உயரம் இருக்கும்படியாகப் போட்டுப் பரப்பி நடுவில் முன் சீலை செய்து வைத்துள்ள குடுவையை வைத்து மிகுதியுள்ள உப்பைக் கொட்டி அழுத்தி அப்பாண்டத்திற்குப் பொருத்தமான மூடியைக் கொண்டு மூடிச் சீலை செய்து வெயிலில் உலர்த்தி அடுப்பில் வைத்து ஒரு சாமம் தீபாக்கினியாகவும், இரண்டு சாமம் கமலாக்கினியாகவும், மூன்று சாமம் காடாக்கினியாகவும் எரித்து, ஒரு இரவு ஆறவிட்டு மறுநாள் குடுவையின் வாய் ஓட்டை நீக்கிப் பார்க்க உருகிக் கட்டியாக இருக்கும். இதைக் கல்வத்தில் இட்டு அரைக்கச் சிவந்து காணும். இதைப் புட்டியில் பத்திரப்படுத்துக.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு $^1/_4$ -$^1/_2$ குன்றி எடை, தினம் இரு வேளை தேன், நெய் முதலிய அனுபானங்களில் 5 நாள் கொடுக்கவும். மீண்டும் கொடுப்பது

அவசியமானால் 10 நாள் விட்டு மறுபடியும் ஒரு முறை 5 நாள் கொடுக்கவும். இவ்வாறு பெரிய நோய்களுக்கு 20-40 நாள் வரையிலும் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

மேகம் சம்பந்தமான பல அழுகிய புண்கள் ஆறும். திமிர், குட்டம், குன்மம், சூலை, கபநோய்கள், கணுச்சூலை, சுரம், சந்தி, வாத நோய்கள், காக்கைவலிப்பு, குமரகண்டவலி, முயல்வலி, உட்குத்து, புறங்குத்து, மூர்ச்சை முதலியன குணமாகும்.

இம்மருந்தை உண்ணும்போது சூடு செய்வதாக உணர்ந்தால், சிரசில் நெய் தடவிக் குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டும்.

### 3. சண்முக நவநீதச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

இலிங்கம் பலம் 1, இரசச் செந்தூரம் பலம் $^1/_2$, இரசக்கற்பூரம் பலம் $^1/_4$, தாளகம் பலம் $^1/_4$, வீரம் பலம் $^1/_{16}$, கந்தகம் பலம் 1 $^1/_2$. இங்கு கூறப்பட்ட ஆறு சரக்குகளையும் கிரமப்படி சுத்தி செய்து கல்வத்தில் போட்டு நான்கு சாமம் கை ஓயாமல் அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம் பருப்பு அளவு தினம் இரு வேளை கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

சுக்கு, மிளகு, திப்பிலி, ஆகியவற்றைச் சமனெடையாக வெதுப்பி இடித்த சூரணத்தில் சமன் பனைவெல்லம் கூட்டிப் பிசைந்து வைத்துக்கொண்டு அதனில் புளியங்கொட்டை அளவு எடுத்துச் செந்தூரம் கூட்டித் தினம் இரு வேளை கொடுத்துவர வாத சம்பந்தமான பல பிணிகள் குணமாகும். புளியங்கொட்டை அளவு பனைவெல்லத்தில் செந்தூரம் கூட்டித் தினம் இரு வேளை கொடுத்துவர ஈளை, இருமல், காசம் குணமாகும்.

இன்னும் இந்தச் செந்தூரத்தைத் தேனில் மத்தித்துத் தினம் இரு வேளை கொடுக்கச் சுரம், சந்திதோடம், குணமாகும். முருங்கைப்பட்டைச் சாற்றில் தேன் கூட்டி அதில் செந்தூரமிட்டுத் தினம் இரு வேளை கொடுக்கப் பாரிச வாதம், நாக்கு வாதம், தனுர்வாதம் குணமாகும்.

*பத்தியம்*

நோய்க்கு ஏற்றவாறு ஆகாரம் கொடுக்கவும்.

### 4. பஞ்சாமிர்தச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

வீரம், பூரம், இரசச் செந்தூரம், இலிங்கம் வகைக்குப் பலம் $^1/_2$ இவற்றைக் கிரமப்படி சுத்தி செய்து கல்வத்தில் போட்டு மிருதுவாக அரைத்து வைத்துக் கொள்ளவும். அப்பால் $^1/_2$ பலம் படிகாரத்தைக் கல்வத்தில் இட்டு நன்றாய் அரைத்துத் தூள் செய்யவும். அதில் அரை பாகம் எடுத்து ஒரு புது மண் சட்டியில் போட்டுப் பரப்பி, அதன் மேல் முன் அரைத்து வைத்துள்ள தூளைப் போட்டு, அதன் மேல் மிகுதியுள்ள படிகாரத் தூளைப் போட்டு அடுப்பிலேற்றிச் சிறுக எரிக்கவும், படிகாரம் பொங்கி அடங்கின உடன் கீழிறக்கி ஆறவிட்டு மருந்தை எடுத்துக் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பு அளவு தினம் இரு வேளை 2-5 நாள் தேனில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

கப சம்பந்தமான சுரம், பேதி சம்பந்தமான சுரம், வாய் ஓயா இருமல் முதலியன குணமாகும். இருமலுக்குக் கொடுக்கும்போது தாளகப் பதங்கத்தை $^1/_2$ அல்லது 1 அரிசி அளவு சேர்த்துக் கொடுப்பது சாலச்சிறந்தது.

*பத்தியம்*

சுர நோய்க்காவது இருமலுக்காவது கொடுக்கும்போது பால்கஞ்சி உத்தமம். அன்னம் சேர்க்கக் கூடாது.

### 5. தங்கலிங்கச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு பலம் எடை அளவு இலிங்கத்தை மழுமழுப்பு இருக்கும்படி தேய்த்து அதன் மேல் ஒரு வராகன் எடை தங்கச்சுருள் ரேக்கைக் குன்றிமணி பசை கொண்டு சந்து விடாமல் சுற்றி, நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

அப்பால் ஒரு கிண்ணத்தைப் போன்ற மட்பாண்டத்தில் ஐந்து பலம் நெய் விட்டு அதில் மூக்கு வெட்டி நீக்கிய $2\frac{1}{2}$ பலம் சேங்கொட்டையை இரண்டிரண்டாக நறுக்கிப் போட்டு, அதன் மத்தியில் இலிங்கக் கட்டியை வைத்து, அடுப்பில் வைத்து சிறு தீயாக எரிக்கக் கொட்டைகள் தீப்பற்றி எறியும். அப்போது அதனைக் கீழிறக்கி ஆறவிட்டுப் பார்க்கத் தங்கம் இலிங்கத்துடன் உறவாகி இருக்கும். சில சந்தர்ப்பங்களில் அரைகுறையாக உறவாகி இருப்பதுண்டு. இதனால் குற்றமில்லை. இலிங்கத்தையும் உறவாகாமல் இருக்கும் தங்கத்தையும் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்தில் போட்டுத் தண்ணீர் விட்டான் கிழங்குச் சாறு விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைக்கவும். பின்பு ஓர் அகலில் வைத்து, மேல் அகல் மூடிச் சீலை செய்து உலர்த்தி, $\frac{1}{2}$ படி பச்சரிசி நெல் உமியின் நடுவில் வைத்துத் தீ மூட்டவும். புடம் ஆறின பின் வில்லையை எடுத்து மீண்டும் கல்வத்தில் போட்டு முன் போல் இரு முறை தண்ணீர் விட்டான் கிழங்குச் சாறு விட்டு அரைத்துப் புடமிட்டு எடுக்க நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பு அளவு தினம் இரு வேளை, தாதுவிருத்திக்குரிய இலேகியங்களில் அனுபானம் செய்து 20 நாள் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

பாரிசவாதம், காசம், சயம், நரம்பின் துர்ப்பலம் நீங்கும். தேகத்தில் நல்ல ஒளிர்வும், ஆண் தன்மையும் உண்டாகும்.

*பத்தியம்*

நல்ல ஆகாரத்தை உட்கொள்ள வேண்டும். நல்ல சுகம் காணும் வரையில் பெண் போகமும் போதைப் பொருள் பழக்கமும் கூடாது.

## 6. சடாதாரச் செந்தூரம்

*சரக்கு*

பூரணச்சந்திரோதயச் செந்தூரம்

இரசச் செந்தூரம்

அப்பிரகச் செந்தூரம்

வெள்ளிப் பற்பம்

வெள்வங்கப் பற்பம்

பவழப் பற்பம்

இவைகள் வகைக்கு கழஞ்சு -1.

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட ஆறு பற்பச் செந்தூரங்களைக் கல்வத்தில் போட்டுக் கலியாணப்பூசணிக் காய்ச் சாறு விட்டு ஒரு சாமம் அரைத்துக் கல்வத்துடன் வெயிலில் ஒரு பகல் உலர்த்தி, மருந்தை எல்லாம் சிறிதும் சேதப்படாமல் நன்றாய்ச் சுரண்டி எடுத்துப் பின்னும் ஒரு முறை மிருதுவாகும்படி அரைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேண்டும் போது இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடையாக தினம் இரு வேளை பஞ்சகௌவிய இலேகியத்திலாவது அல்லது பஞ்சகௌவிய நெய்யிலாவது அனுபானம் செய்து 20-40 நாள் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

பெரும்பாடு, அத்திவெட்டை, சயம், மேகம், பிரமேகம், மதுமேகம், புலால் மேகம், நீரிழிவு, மூலம், பவுத்திரம், நாட்பட்ட வெட்டை, எலும்புருக்கி முதலியவைகள் குணமாகும்.

*பத்தியம்*

நோய்க்கு ஏற்றவாறு ஆகாரம் உட்கொள்ள வேண்டும்.

### 7. அயத்தங்கச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

| | |
|---|---|
| சுத்தமான அயத்தூள் | 5 பலம் |
| தங்கம் | 1 வராகன் எடை |
| சங்குபாடாணம் | $^1/_4$ " |
| வாலைரசம் | 6 " |
| கந்தகம் | 1 பலம் |

இவற்றுள் முதலில் வாலைரசத்தைக் கல்வத்தில் போட்டுப் பின் தங்கச்சுருள் ரேக்கைப் பொடிப்பொடியாகக் கத்தரித்துச் சேர்த்து அரைக்கவும்.

இவை இரண்டும் நன்றாய் உறவான சமயம் கந்தகத்தைக் கூட்டி அரைக்கவும். இவைகள் எல்லாம் நன்றாய்க் கறுத்து உறவான பதத்தில் அயம், பாடாணம் முதலியவற்றையும் சேர்த்து அரைத்து எல்லாம் ஒருமித்த சமயம் எலுமிச்சம்பழச்சாறு விட்டு, நாள் ஒன்றுக்கு 2-3 சாமம் வீதம், நான்கு நாள் அரைத்து, மெழுகு பதத்தில் பட்டாணி அளவு மாத்திரைகள் செய்து உலர்த்தவும். பின் ஏழு சீலை செய்த குப்பியில் போட்டு, வாயைப் பலப்பக்கல்லால் அடைத்துச் சீலை செய்து வாலுகா யந்திரத்தில் வைத்து நான்கு சாமம் எரிக்கவும். ஒரு இரவு ஆறவிட்டு மறுநாள் குப்பியை எடுத்து வாய் திறந்து மாத்திரைகளை வெளிப்படுத்திப் பார்க்கச் சிவந்திருக்கும். ஒரு சமயம் நிறம் சரியாகப் புலப்படாவிடின் இதை அரைத்து ஒரு புதுச் சட்டியிலிட்டுச் நெருப்பைப் போலாகிற வரையில் வறுத்து ஆறவிட நல்ல நிறம் வரும். அப்படிச் செய்தும் அன்னபேதிச் செந்தூர நிறம் ஏற்படாவிடின் கல்வத்தில் போட்டு முற்கூறிய எடைப் பிரகாரம் இரசக் கந்திப் பாடாணம் கூட்டி எலுமிச்சம்பழச் சாற்றால் 2-3 சாமம் அரைத்து மாத்திரைகள் செய்து முன்போல் குப்பியில் போட்டு வாய் மூடிச் சீலை செய்து, வாலுகா யாத்திரத்தில் வைத்து எரித்து ஆறவிட்டு மாத்திரைகளைப் பொடித்து வறுத்து எடுக்க, உயர்தரமான செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும். இது ஒருவிதமான காயகற்பச் செந்தூரத்திற்கு ஒப்பாகும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1/2 அல்லது 1 குன்றி எடை அளவு தினம் இரு வேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வரவேண்டும்.

*தீரும் நோய்*

காசம், பாரிசவாதம், முகவாதம், பாண்டு, சோபை, காமாலை, வீக்கம், மதுமேகம் ஆகியன குணமாவதுடன் நல்ல உடல் ஒளிர்வும் ஆண் தன்மையும் உண்டாகும். பூரண சுகத்திற்குக் குறைந்தது ஒரு மண்டலம் உட்கொள்ளவேண்டும்.

*பத்தியம்*

இச்சாபத்தியமாக நல்ல ஆகாரத்தை வேளை தவறாமல் உட்கொள்ள வேண்டும்.

*குறிப்பு*

இந்தச் செந்தூரத்தை மூதண்ட இலேகியத்தில் கொடுக்கப் பல பிணிகள் குணமாகும் என்பது மருத்துவர்கள் அனுபவத்தில் கண்ட உண்மையாகும்.

## 8. அப்பிரகச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

ஐந்து பலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டு, ஆடுதீண்டாப்பாளைச் சாறு விட்டு, நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் காலணா அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து வெயிலில் நன்றாய் உலர்த்தி, நான்கு படி பச்சரிசி நெல் உமியில் வைத்துப் புடம் இடவும். இப்படியே ஆடுதீண்டாப்பாளைச் சாற்றால் அரைத்து அரைத்துப் பத்து முறை புடம் இடவும். இப்படி பத்து புடம் இட்டு எடுத்துப் பார்க்கச் சிவந்திருக்கும். தளுக்குச் சிறிதும் இராது. உயர்தரமான செந்தூரமாகும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு ஒரு குன்றி எடை, எடுத்துத் தினம் இரு வேளை தகுந்த அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

நீரிழிவு, மதுமேகம், சயம், தேக துர்ப்பலம் நீங்கும்.

*பத்தியம்*

நல்ல ஆகாரத்தை வேளை தப்பாமல் உண்ண வேண்டும். இனிப்புப் பண்டங்களையும் பெண் போகத்தையும் சில நாள் நீக்குவது நல்லது.

## 9. அப்பிரகச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஐந்து பலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டுச் செப்பு நெருஞ்சிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி வெயிலில் உலர்த்தவும் அந்த வில்லைக்குக் கீழும் மேலும் மாம்பட்டையை அரைத்து அங்கி பூட்டி அகலில் அடக்கிச் சீலை செய்து, 100 வறட்டியில் புடம் போடவும். அதன்பின் புடத்தில் இட்ட வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டு நெல்லிவற்றல் குடிநீருடன் வாழைக்கிழங்குச்சாறு கூட்டிக் கொஞ்சம் கொஞ்சமாக நான்கு சாமம் அரைத்து வில்லை தட்டி வெயிலில் நன்றாய் உலர்த்தவும். அந்த வில்லைக்கு நெல்லிவற்றலையும் தேற்றாங் கொட்டையையும் மெழுகு போல் அரைத்து அங்கி பூட்டி அகலில் அடக்கி, மேல் அகல் மூடிச் சீலை செய்து, 100 வறட்டியில் புடம்

இடவும். இவ்வாறு முடிவு பெற்ற அப்பிரகத்தை இரண்டு முறை குமரிச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து அகலில் பரப்பி வெயிலில் புடம் இடவும். இப்படியே நாவல் பட்டைச்சாறு, மாம்பட்டைச்சாறு, ஓதியம்பட்டைச்சாறு முதலியவற்றால் இரண்டிரண்டு புடமிட்டு எடுக்க உயர் தரமான செந்தூரமாகும். தளுக்குச் சிறிதும் இராது. இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வேளைக்கு ஒரு குன்றி எடை வீதம் இரு வேளை தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

நீரிழிவு, மதுமேகம், சயம், தேக துர்ப்பலம் முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

நல்ல சத்துள்ள ஆகாரத்தை உட்கொள்ள வேண்டும்.

## 10. அப்பிரகச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

கல்லத்தி, ஆல், அரசு, அத்தி ஆகிய மரங்களின் வேர்ப்பட்டையைப் பச்சையாக ஒவ்வொரு வீசை கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிப் பஞ்சு போல் நசுக்கி ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டுப் பட்டைக்கு மேல் 1/2 அடி உயரம் இருக்கும்படி சுத்தமான தண்ணீர் விட்டுப் பிசைந்து பிசைந்து 2-3 நாள் ஊறவிட்டு வைக்கவும். அப்பால் ஐந்து பலம் கிருஷ்ண அப்பிரக நவநீதத்தைக் கல்வத்தில் போட்டு முன் சித்தப்படுத்தி வைத்துள்ள பட்டைகளின் ஊறல் நீரை விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில், வில்லை தட்டி உலர வைத்து, அதன்மேல் கனமாக எருக்கிலையைச் சுற்றி நூலால் கட்டி மண்சீலை ஏழு செய்து 60-70 வறட்டியில் புடமிடவும். இவ்வாறு அரைத்து அரைத்து வில்லை தட்டி உலர்த்தி எருக்கிலையைச் சுற்றி மண்சீலை செய்து இருபத்தொரு புடமிடக் காவிக்கல் நிறமாகத் தளுக்கற்றுச் சிவந்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தை வேளைக்குக் குன்றி எடை, தினம் இரு வேளை தக்க அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

மேகம், சயம், கிராணி முதலியன குணமாகும். இன்னும் இந்தச் செந்தூரத்தினால் பருத்த சரீரம் பலம் குன்றாமல் இறுகும்.

*பத்தியம்*

நோய்க்கு ஏற்றவாறு ஆகாத பண்டங்களைத் தள்ளி, நல்ல உணவைச் சேர்க்கவும்.

## 11. தங்கச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

ஒரு மண் தோண்டியில் 3 அல்லது 4 செவ்விளநீரில் உள்ள நீரை விட்டு, அந்நீருக்கு 7-8 விரற்கடை உயரத்தில் இருக்கும்படி 1/2 வராகன் எடை வீரத்தைச் சீலையில் முடிந்து தொங்கவிட்டு, துலாயந்திர விதிப்படி நீர்ச்சுண்ட எரித்து வீரத்தை எடுத்துப் பொடி செய்து கொள்ளவும். அதில் ஆண் விஷ மூங்கில் இலையை இடித்துச் சாறு பிழிந்து ஆழாக்கு அளவிற்கு விட்டுக் குலுக்கி வைத்துக் கொள்ளவும். மறுநாள் பார்க்கச் சாறு தெளிந்து நீர் போலிருக்கும். அசையாமல் வடித்துக் கொண்டு திப்பியைத் தள்ளி விடவும்.

அப்பால் ஒரு வராகன் எடை தங்கச்சுருள் ரேக்கைப் பொடிப் பொடியாகக் கத்தரித்துப் போட்டு, முன் சித்தப்படுத்திய தெளிவு நீரைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு இரண்டு சாமம் அரைத்து, மெழுகு பதத்தில் வழித்து வில்லை தட்டி வெடிக்காமல் நிழலில் உலர்த்தவும். இது நன்றாய்க் காய்ந்த பதத்தில் ஒரு பொருத்தமான அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து வெயிலில் உலர்த்தி, 15 வறட்டியில் புடம் போடவும். புடம் ஆறின பின் வில்லையைப் பார்க்கச் சிவந்திருக்கும். இதை அரைத்துக் குப்பியிலிடவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு இரண்டு அரிசிப் பிரமாணம் காலை, மாலை தாதுவிருத்திக்குரிய ஏதேனும் ஒரு இலேகியத்தில் அனுபானம் செய்து கொடுத்துக் கொண்டு வரவும்.

*தீரும் நோய்*

தேகத்திலுள்ள பல பிணிகளை நீக்குவதுடன் மன்மதனுக்கு ஒப்பாக நல்ல ஒளிர்வும் பலமும் பொருந்தி இருக்கச் செய்யும்.

## 12. தங்கச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

ஒரு வராகன் எடை தங்கச் சுருள் ரேக்கைப் பொடிப்பொடியாகக் கத்தரித்து வைத்துக் கொள்ளவும். அதன்பின் ஒரு சுத்தமான கல்வத்தில் நான்கு வராகன் எடை வாலைரசத்தை விட்டு முன் கத்தரித்து வைத்துள்ள தங்க ரேக்குத் துண்டுகளைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு அரைத்துக் கொண்டுவர இரசத்துடன் உறவாகி விடும். அப்போது மாசிப்பத்திரி இலைச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் வில்லையாகத் தட்டி உலர்த்திப் பொருத்தமான சிறு அகலில் புடமிடவும். இப்படி அரைத்து, அரைத்து 3 புடமிடத் தங்கச் சாயம் இன்றி நல்ல செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடவும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்கு 1 $^1/_2$ அரிசி எடை, தினம் இரு வேளை தாதுவிருத்திக்குரிய இலேகியங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

மதுமேகம், சயம், காசம், தாது நட்டம், தேக துர்ப்பலம் முதலியன குணமாகும்.

*பத்தியம்*

நல்ல ஆகாரம் உட்கொள்ள வேண்டும்.

## 13. தங்கச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

தங்கரேக்கு, வாலை ரசம் வகைக்கு வராகன் எடை- 2. இவை இரண்டையும் கல்வத்தில் இட்டு ஒருங்கு கலக்கும் வரை அரைத்துப் பின்னர் வராமுள்ளிப் பூவின் சாற்றில் 4 சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி, அகலில் வைத்து மேலகல் மூடி 7 சீலை செய்து காய்ந்தபின், 20 வறட்டியில் புடமிடுக. இங்ஙனம் இரண்டு மூன்று முறை அரைத்துப் புடமிடச் செந்தூரமாகும்.

*பயன்பாடு*

இதனில் அரிசி எடை தாதுவிருத்திக்கு உரிய ஏதேனும் ஒரு இலேகியத்தில் வைத்துத் தினம் இரு வேளை, 20 நாள் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இந்திரியம் இறுகி நல்ல அழகு உண்டாகும். பிணிக்கு ஏற்றவாறு அனுபானங்களில் ஒரு மண்டலம் கொள்ள மதுமேகம், சயம் முதலிய கொடும்பிணிகள் தீரும்.

## 14. தங்கச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

தங்கரேக்கு, வாலைரசம் வகைக்கு வராகன் எடை-5. இரண்டினையும் கல்வத்தில் இட்டு அரைத்துப் பின்னர் வெள்ளைக் காக்கட்டான் வேர்ப்பட்டைச் சாற்றில் 4 சாமம் அரைத்து வில்லை செய்து காயவைத்து, அகலில் இட்டு 7 சீலை செய்து நன்கு காய்ந்தபின், 25 வறட்டியில் புடமிடுக. இங்ஙனம் இரண்டு புடமிடச் செந்தூரமாகும். இது தங்கச் சாயலாக இருப்பின் மேலும் இரண்டொரு புடமிட வேண்டியது அவசியம்.

*பயன்பாடு*

காலை மாலை, உளுந்து அளவு பிணிக்கு ஏற்றபடி, தக்க அனுபானங்களில் கொள்ளவும்.

*தீரும் நோய்*

அக்கினி மந்தம், நீரிழிவு, மேகம், காசம், சயம் முதலியவை நீங்கும். உடல் ஒளிர்வும் தாதுவிருத்தியும் உண்டாகும்.

*பத்தியம்*

மருந்தை உண்ணும் போது இச்சாபத்தியமாக இருக்க வேண்டும்.

## 15. தங்கச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

இரண்டு வராகன் எடை தங்கரேக்கைக் கல்வத்தில் இட்டுத் திருநீற்றுப்பச்சை இலை முப்பத்திரண்டைக் கூட்டி, இரண்டு மணி நேரம் அரைக்க மெழுகு போலாகும். அதனை வெள்ளைக் காக்கட்டான் இலைச் சாறு விட்டு நான்கு சாமம் நன்றாக அரைத்து வில்லை செய்து காய்ந்தபின் பொருத்தமான அகலில் வைத்து மேலகல் மூடி ஏழு சீலை செய்து, இருபத்தைந்து வறட்டியில் புடமிடுக. இப்புடத்திலேயே செந்தூர நிறத்தைக் காண்பினும் அதைக் கல்வத்தில்

இட்டுக் காக்காட்டான் இலைச் சாற்றில் அரைத்து வில்லை செய்து முன்போலவே ஐந்து புடமிடத் திவ்வியமான செந்தூரமாகும்.

பயன்பாடும் பத்தியமும் மேற்கூறியவாறு.

## 16. தங்கச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த பொன் தகட்டின் மேல், பொன்னிமிளையையும் எலுமிச்சம் பழச்சாற்றையும் விட்டு நன்றாக அரைத்து ஒரே சீராகப் பூசி ஒரு அகலில் வைத்து, அதன் வாய்ப் பொருந்தும்படியான வேறொரு அகலை வைத்து, மூடிச் சீலைமண் செய்து புடம் இடவும்.

அதனை மறுபடியும் கல்வத்தில் இட்டு அரசம் பட்டைச் சாறும், எருக்கம்பாலும் விட்டு மத்தித்து அதற்குச் சமனெடை சத்தி செய்த இலிங்கம் கூட்டி நன்றாக அரைக்கவும். பின்பு பூனைக்காலி வேர்ச்சாறு, சிறுபுள்ளடிச்சாறு ஆகியவைகளை விட்டு நான்கு தடவை அரைத்துக் காட்டெருவை (தானாகக் காய்ந்த வறட்டி) அடுக்கிப் புடமிடவும். இவ்வாறு 5 தடவைகள் இடவும். தங்கச் செந்தூரம் கிடைக்கும்.

பயன்பாடும் தீரும் நோய்களும் மேற்கூறியவாறு.

## 17. தங்கச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கு*

சுத்தி செய்த பாதரசம்

சுத்தி செய்த நெல்லிக்காய் கந்தகம்

*செய்முறை*

இவ்விரண்டையும் கல்வத்தில் இட்டு நன்றாகக் கறுப்பாகும் வரை அரைத்துப் பொன் தகட்டின்மேல் பூசவும். இவ்வாறு 7 முறை பூசிவிடவும். பொன் தகட்டில் இக்கலவை ஏறிவிடும். பின்பு இதை ஒரு அகலில் வைத்து மற்றொரு வாய் பொருந்தும்படியான அகலினால் நன்றாக மூடிச் சீலைமண் செய்து யானைப் புடம் இடவும். இவ்வாறு மும்முறை செய்யவும். உயர்ந்த செந்தூரம் கிடைக்கும்.

*பயன்பாடு*

இதில் நெல்லெடை எடுத்துத் தேனுடன் குழைத்து அருந்திவரச் சயரோகம் தீரும்.

## 18. அயவெள்ளிச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த சரிகை வெள்ளி அல்லது சன்னமாக இராவிய வெள்ளிப் பொடி வராகன் எடை -2. புதியதாக இராவிய அயப்பொடி வராகன் -2. இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டு ஒரு கோழிமுட்டையின் வெண் கருவை விட்டு நன்றாக அரைத்து மெழுகு பதத்தில், கடலை அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தவும். அதைக் கரு நீக்கிய ஒரு காலி முட்டை ஓட்டிற்குள் போட்டு, வாய்ப்புறத்தில் மற்றோர் முட்டை ஓட்டைச் செருகி மண்சீலை 5-6 செய்து, 10 வறட்டியில் புடமிடவும். புடம் ஆறினபின் முட்டை ஓட்டிற்குள் அடக்கம் செய்த மாத்திரைகளை மீண்டும் கல்வத்தில் போட்டு ஒரு முட்டையின் வெண்கருவை விட்டு அரைத்து முன்போல் மாத்திரைகள் செய்து, முட்டை ஓட்டில் வைத்துப் புடமிடவும். இப்படி 10 புடமிடச் செந்தூரமாகும். இதை அரைத்துக் குப்பியிலிடுக.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பு அளவு, தினம் இரு வேளை தாதுவிருத்திக்குரிய இலேகியங்களில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

நாட்பட்ட தேக துர்ப்பலம், நரம்பின் தளர்ச்சியால் நேர்ந்த தாது இழப்பு ஆகியன குணமாகும். நல்ல இரத்தம் உண்டாகும்.

## 19. அயச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தமான அயப்பொடியை நல்லெண்ணெய் விட்டு வறுத்துச் சிகைக்காயைக் கொதிக்க வைத்து எடுத்த நீர் விட்டு எண்ணெய் போக அலம்பவும். அதில் மூன்று பலம் பொடியைக் கல்வத்தில் இட்டுப் பழரசம், கோநீர், வெள்ளாட்டு நீர், வேசரி நீர் இவைகளைத் தனித்தனியே விட்டு நான்கு சாமம் அரைத்து, காசளவில் வில்லைகள் செய்து காயவைக்கவும். அடி கனமான ஒரு மட்பாண்டத்தில் நான்கு படி ஆலம் பழுப்பை ஒன்றிரண்டாக இடித்துச் சூரணம் செய்து போட்டு, அதன்மீது முன் சித்தப்படுத்திய வில்லைகளைப் பரப்பி, முன்போலவே சூரணத்தைக் கொட்டிக் கையால் அழுத்தி, அடுப்பின் மேல் வைத்து 5 சாமம் முத்தீயாக (காடாக்கினி, கமலாக்கினி, தீபாக்கினி) எரித்து, ஓர் இரவு

ஆறவைக்கவும். மறுநாள் முன்போல் சூரணத்தினிடையில் மேற்படி வில்லைகளைக் கீழ்மேலாகத் திருப்பி வைத்து 4 சாமம் எரிக்கச் செந்தூரமாகும்.

*பயன்பாடு*

1 முதல் $1^1/_2$ குன்றி அளவு உடல் வன்மைக்குத் தகுந்தபடி தேனில் உண்ணவும்.

*தீரும் நோய்*

சுவாசகாசம், ஈளை, இருமல் முதலியன தீரும். நல்ல இரத்தம் உண்டாகும். மேனி அழகுறும்.

*பத்தியம்*

புளி நீக்கி, இச்சாபத்தியமாக இருத்தல் நலம்.

## 20. கல்நார் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

எருமைக்கொம்பு கல்நார் பலம் 2, மிளகரணை இலை பலம் 2. இவைகளைக் கல்வத்தில் இட்டுப் பொடுதலைச் சாற்றில் நன்றாக அரைத்து வில்லை செய்து உலர்த்தி, அகலில் வைத்துச் சீலை செய்து காய்ந்தபின் 20 வறட்டியில் புடமிடுக. இங்ஙனம் புடத்திற்குப் புடம் 5 வறட்டி அதிகப்படுத்தி, 5 புடமிட நல்ல செந்தூரமாகும்.

*பயன்பாடு*

நாளொன்றுக்கு இரு முறை குன்றி எடை நெய்யில் குழைத்து உண்ணவும்.

*தீரும் நோய்*

மேகம் சம்பந்தமான அழலை, நீர் எரிச்சல், கைகாலெரிச்சல், எலும்புருக்கி, குத்தல் முதலியன நிவாரணமாகும். ஆண் தன்மை அதிகரிக்கும். மாதர்களுக்குச் சிறப்பு அவயவங்கள் சிறந்து, நரம்புக்கூடுகள் பெரிதும் வலுப்படும்.

## 21. கௌரி சிந்தாமணிச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

இரசம், கந்தகம் வகைக்கு ஒரு பலமாகக் கல்வத்தில் இட்டு நான்கு சாமம் அரைக்கக் கறுப்பாகும். அதனுடன் ஒரு பலம் வெங்காரம் கூட்டி ஒரு சாமம் அரைக்கவும். 32 கிழியாக முரட்டுத் துணியில் கட்டி, இரண்டு படி அளவுள்ள

சட்டியில் முக்கால் பாகம் மணல் கொட்டிப் பரப்பி அதனில் ஒன்றின்மீது ஒன்று தட்டாமல் ஊன்றி வாய் வரம்புவரையில் மணல் நிறைத்து, மேலோடு மூடிச் சீலை செய்து வைத்துக் கொள்க. பூமியில் குந்தாணியைப் போல் ஒரு கஜ ஆழமும் அடிப்பாகத்தில் ஒரு சாண் அகலமும் மேற்பாகத்தில் ஒரு கஜம் அகலமும் இருக்கும்படிக் குழி தோண்டி மண் இளகலாய் நீர் விட்டுப் பிசைந்து, உட்புறத்தில் சுத்தமாகப் பூசி உலரவிட்டு அதனில் சாண் உயரம் எரு அடுக்கித் தீ மூட்டவும். புடமானது வெந்து ஆறிய பின் சட்டியிலிருக்கும் மருந்தைப் பக்குவமாக எடுத்து மேல் சாம்பல் போகத் துடைத்துப் பார்க்கப் பூலாப்பழத்தைப் போல் கறுஞ்சிவப்பாக இருக்கும்.

*பயன்பாடு*

உடல் வன்மைக்கு ஏற்றவாறு தக்க அனுபானத்தில் கொள்ள ஐய நோய்கள் தீரும்.

## 22. சுவாசகுடோரி செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்திசெய்த தாளகம் தோலா 1, இரசச் செந்தூரம் தோலா 1, சுத்தி செய்த வீரம் தோலா 1. இவைகளில் முதலிரண்டு சரக்கைக் கல்வத்தில் இட்டு நன்றாய் ஒரு சாமம் அரைத்துப் பின்னர் மூன்றாவது சரக்கைச் சேர்த்து 3 சாமம் அரைத்துச் சிறு குடுவையில் போட்டு ஓடு மூடிச் சீலை செய்யவும். மூன்று சிறு கற்களை அடுப்பு போல் அமைத்து, அதன் மேல் குடுவையை வைத்துக் கீழே ஒரு அகலை வைத்து விளக்கெண்ணெய் விட்டுச் சுட்டுவிரல் கனதியுள்ள திரியால் 3 சாமம் எரித்து ஆறவிட்டுப் பார்க்கச் செந்தூரமாயிருக்கும்.

*பயன்பாடு*

இதனில் இரண்டு அரிசி அளவு தேனில் தினம் ஒரு நேரம், 3 நாள் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

கபம் நிறைந்து வெளிக்கு வராமல் சுவாசம் திண்டாடி, இழுப்பு கண்டு சிரமத்தைக் கொடுக்கும் சுவாசகாசமாக இருந்தாலும் எளிதில் கபத்தைக் கரைத்து வெளியாக்கிச் சுகமடையச் செய்யும். பின்னர் சுவாசகாசத்திற்காக இந்நூலில் கூறப்பட்டுள்ள வேறு எம்மருந்தையும் கொடுத்துப் பூரண குணம் உண்டாக்கலாம்.

*பத்தியம்*

இச்சாபத்தியம். பால் சேர்ந்த கஞ்சி உத்தமம்.

## 23. பூரண சந்திரோதயச் செந்தூரம்

*சரக்கு*

| | |
|---|---|
| தங்கம் | 1 பங்கு |
| இரசம் | 8 " |
| கந்தகம் | 16 " |

*செய்முறை*

இவற்றைச் செம்பரத்தம் பூச்சாறு, கற்றாழைச் சாறு ஆகியவற்றால் ஒவ்வொரு நாள் அரைத்து, மணி போல் உலர்த்திக் காசிக் குப்பியில் வைத்து வாய் மூடி சீலைமண் செய்து வாலுகா யந்திரத்தில் 12 சாமம் எரிக்கவும். ஆறியபின் பார்க்க மாந்தளிர் நிறத்தில் மருந்து இருக்கும்.

*பயன்பாடு*

திப்பிலி, சாதிக்காய், சர்க்கரை, சமுத்திரா, சோழி விதை, கஸ்தூரி ஆகியவற்றைக் குப்பியில் உள்ள மருந்திற்கு $^{1}/_{4}$ பங்கு எடுத்து சுத்திசெய்து சூரணித்துச் செந்தூரத்துடன் பணவெடை அளவு, தாம்பூலத்துடன் அருந்த வேண்டும்.

*தீரும் நோய்*

சயசுரம், வெட்டை தீரும். தாது விருத்தியும் தேக வன்மையும் தோன்றும். அழகு தரும். பெண்கள் பால் இச்சை உண்டாகும்.

*பத்தியம்*

கைப்பு, புளிப்பு ஆகாது. பால், நெய், மருந்துப்பு சேர்க்கவும்.

## 24. பூரண சந்திரோதயச் செந்தூரம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| சுவர்ணப் பற்பம் | 5 வராகன் எடை |
| சுத்தி செய்த பாதரசம் | 40 " |
| சுத்தி செய்த தாளகம் | 10 " |

சுத்தி செய்த கந்தகம் 30 வராகன் எடை

*செய்முறை*

முதலில் இரசத்தையும், கந்தகத்தையும் ஒரு சுத்தமான கல்வத்தில் போட்டு நன்றாகக் கறுப்பாகும் வரை அரைக்கவும். பின்பு தாளகத்தையும் சுவர்ணப் பற்பத்தையும் ஒன்று கூட்டி, கற்றாழைச்சாறு விட்டு 4 சாமம் அரைக்கவும். இதை வில்லைகளாகத் தட்டிக் காயவைத்து, மறுபடியும் செம்பருத்திப் பூச்சாறு விட்டு 4 சாமம் அரைக்கவும். சிறுசிறு வில்லைகளாகத் தட்டிக் காயவைத்துக் கொள்ளவும். இவைகளைப் பட்டுத் துணியில் சுற்றிச் சீலைமண் செய்து, வளையல் குப்பியில் இட்டு (காசிக்குப்பி) மறுபடியும் சீலைமண் செய்து அதை ஒரு குண்டுச்சட்டிக்குள் வைக்கவும். குப்பியின் வாயை மூடிவிட்டு குண்டுச் சட்டிக்குத் தக்க ஒரு சில்லிட்டு வைத்து மணல் சொரியவும். இச்சட்டியை அடுப்பின் மேலேற்றி 3 விறகால் (மூன்று விரல் கனமுள்ளவை) நாலு சாமத்திற்குத் தீபாக்கினியாக எரிக்கவும். பின்பு நான்கு சாமம் கமலாக்கினியாக எரிக்கவும். இப்படி 12 சாமங்கள் எரித்துப் பூசை செய்தபின் குப்பியை உடைத்துச் செந்தூரத்தை எடுத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், சாதிக்காய், மிளகு ஆகியவைகளை ஒரு பணவெடை எடுத்துச் சூரணித்து, அத்துடன் இச் செந்தூரத்தை அரைக்கால் பணவெடை கூட்டிக் காலையில் வெற்றிலையில் கொள்ளவும். மாலையில் தேனில் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சயம், காசம் ஆகியன தீரும். திரிகடுகுச் சூரணத்துடன் சாப்பிடச் சுவாசகாசம், இளைப்பு, உப்புசம், ஈளை, புகைச்சல் முதலியன குணமாகும்.

### 25. நாகச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

சுத்தி செய்த துத்தநாகம் 5 பலம் எடுத்துத் தகடாகத் தட்டி, இலுப்பெண்ணெயும் பசுவின் நெய்யும் தனித்தனியே ஒரு கரண்டி அளவு எடுத்துக் கலந்து, தகட்டின்மேல் பூசவும். அதை ஒரு சட்டியில் இட்டு அடுப்பின் மேல் வைத்து உருக்கவும். அது உருகியபின் அதை வெள்ளாட்டுப் பாலில் சாய்க்கவும். இவ்வாறு 20 தடவை செய்யவும்.

ஒரு புதுச் சட்டியை எடுத்து அதில் சுக்கு, ஓமம், வெடிப்பு ஆகியவைகளை வகைக்கு 5 பலம் எடுத்துச் சூரணித்துப் போட்டு, அதை ஒரே சீராக நிரவி விடவும். அதன்மேல் மேலே சொன்னபடி சுத்தி செய்த துத்தநாகத்தைப் போட்டு, அடுப்பின்மேல் ஏற்றவும். சிவப்பு நாயுருவியைச் சமூலமாக எடுத்துச் சிறுசிறு துண்டுகளாக்கிக் கொண்டு, சிறுகச் சிறுகப் போட்டுச் சட்டியில் இருக்கும் நாகத்துடன் வறுக்கவும். முருக்கம் பூவை ஒத்த சிவப்பு நிறமான செந்தூரம் கிடைக்கும்.

*பயன்பாடு*

இச்செந்தூரத்தில் ஒரு பணவெடை ($3^1/_2$ குன்றி) எடுத்து, அதனுடன் மிளகு, சுக்கு, இரண்டையும் சமனெடை எடுத்து வெதுப்பிச் சூரணித்த தூளில் ஒரு வெருகடி அளவு எடுத்துத் தேனிலிட்டுக் குழைத்துக் காலையிலும் மாலையிலும் 40 நாளைக்குச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

ஈளை, இருமல், காசம், சுவாசம் நெஞ்சிலுண்டாகும் நோய்கள் முதலியவை நீங்கும்.

## 26. சுத்த மண்டூரச் செந்தூரம்

*சரக்கும் செய் முறையும்*

இரண்டு பலம் மண்டூரத்தைச் சுத்திசெய்து கல்வத்தில் இட்டுக் கறுப்புப் பூனைக்காய்ஞ்சொறி சாற்றினால் 7 நாள் அரைத்து வில்லை செய்யவும். காய்ந்த வில்லைகளை அகலில் வைத்து, மேல் அகல் மூடிச் சீலை செய்து காய்ந்தபின், 30 வறட்டியில் புடமிடுக. இங்ஙனம் 10 புடமிட நல்ல செந்தூரமாகும்.

*பயன்பாடு*

1 முதல் $1\,^1/_2$ குன்றி எடை, தேனிலேனும் நெய்யிலேனும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

சுவாசகாசம், பாண்டு முதலிய பிணிகளும் உதிரக் குறைபாட்டால் உண்டாகும் எல்லா நோய்களும் நீங்கும்.

*பத்தியம்*

கூடியவரை புளியைக் குறைத்து, இச்சாபத்தியம் கொள்ளல் வேண்டும்.

## 27. பஞ்சரத்தினச் செந்தூரம்

*சரக்கு*

| | |
|---|---|
| அயம் | 1 தோலா |
| காந்தம் | 1 " |
| தாளகம் | 1 " |
| இரசம் | 1 " |
| தங்கம் | 1 வராகன் எடை |

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட ஐந்து சரக்குகளில் முதலில் இரசத்துடன் தங்கத்தைச் சேர்த்து அரைத்து நன்கு கலந்து பின் மற்ற சரக்குகளையும் சேர்த்துக் குமரிச் சாற்றில் நான்கு சாமம் அரைத்து, ஒரே வில்லையாகத் தட்டிக் காயவைத்து அகலில் அடக்கிச் சீலை செய்து காய்ந்தபின் இருபத்தைந்து வறட்டியில் புடம் வைக்கவும். மருந்தைக் கல்வத்தில் இட்டு மேனிச் சாற்றில் அரைத்து முன்போல் புடமிடவும். இங்ஙனமே இம்மருந்தை முற்கூறப்பபட்ட ஒவ்வொரு மூலிகையினாலும் மாற்றிமாற்றி அரைத்து ஐந்து புடமிட நல்ல செந்தூரமாகும்.

*பயன்பாடு*

வேளைக்கு 1/2 அல்லது 1 குன்றி எடை, நெய்யிலேனும் தேனிலேனும் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சயம், சுவாசகாசம் முதலியவற்றையும் அதனால் உண்டான துர்ப்பலத்தையும் குணப்படுத்தும். சயரோகத்தால் உண்டான சுரத்தையும் இது பரிகரிக்கும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 28. சயகுலாந்தகச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

தாளகம் பலம் ஒன்றை முற்றிய வெண்பூசணிக்காய் நீரில் தோலாந்திரமாக எரிக்கவும். இவ்விதமாகவே செங்கிளுவைச் சாற்றினாலும் செய்யவும். சுத்தியான

தாளகத்தின் எடைக்குச் சமன் இரசக்கற்பூரம், மனோசிலை சேர்த்து எருக்கம் பாலால் அரைத்து, வில்லை தட்டிக் குகையில் இட்டு, இலகுபுடமாகப் போட, பற்பம் சாம்பல் நிறமாக இருக்கும். அந்தப் பற்பத்தின் எடைக்குச் சம அளவு பவழம், கல்நார் ஆகிய இரண்டையும் சேர்த்து முன்போலவே எருக்கம் பாலால் ஆட்டிப் புடமிடவும். புடமிட்டு எடுத்த மருந்தெடைக்கு, இலிங்கம் $^1/_4$ பங்கும் தங்கம் $^1/_2$ பங்கும் கந்தி $^1/_4$ பங்கும் காந்தம் 1 பங்கும் கொண்டு, குமரி நீராலும் முருக்கம்பூ நீராலும் அரைத்துப் புடமிடவும். இவ்வாறே மறுமுறை ஒரு புடமும் போட்டு எடுக்கச் செந்தூரமாகும்.

*பயன்பாடு*

தக்க அளவில் திரிகடுகு, தேன் முதலியவற்றில் அனுபானித்துக் கொடுக்கச் சயம், காசம், சுவாசம், கபநோய்கள் தீரும்.

*பத்தியம்*

வெள்ளாட்டுப் பால் கூட்டவும். மருந்துண்ணும் நாள் அளவு 10.

## 29. வெள்ளிச் செந்தூரம்

*சரக்கும் செய்முறையும்*

ஐந்து பலம் கந்தகத்தைப் பொடித்து ஒரு சட்டியில் இட்டு, ஒரு பலம் வெள்ளியைத் தகடு தட்டிச் சுருட்டி அதன் மத்தியில் முழுகும்படி அமர்த்தி, மூடி கொண்டு மூடி, சிரட்டைஓடு 100 கொண்டு எரித்து எடுக்கச் செந்தூரமாகும். இதை மிக்க கவனத்தோடு செய்யவும்.

*பயன்பாடு*

ஒரு நெல்லரிசி அளவு அனுபானமறிந்து கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சுரம், சன்னிபாதம், பாண்டு, காமாலை, குன்மம், சூலை, சயம், பிடிப்பு, தேமல், மேகநீர் ஆகியன நீங்கும்.

## 30. இராசமிருகாங்க இரசம்

| | |
|---|---|
| இரசப்பற்பம் | 3 பலம் |
| சுவர்ணப் பற்பம் | 1 " |
| வெள்ளீயப் பற்பம் | 4 " |

| | |
|---|---|
| தாமிரப் பற்பம் | 4 பலம் |
| முத்துப் பற்பம் | 1 " |
| சுத்தி செய்த மனோசிலை | 1 " |
| சுத்தி செய்த கந்தகம் | 1 " |
| சுத்தி செய்த தாளகம் | 1 " |

*செய்முறை*

இவைகளைச் சுத்தமான கல்வத்தில் இட்டுத் தனித்தனியாக நன்றாக நுணுக்கிக் கொண்டு, பின்பு கவனமாக ஒன்று கலந்துகொண்டு ஒரு பெருங்கிளிஞ்சலுக்குள் வைத்து வேறொரு கிளிஞ்சலினால் நன்றாக மூடி விடவும். பின்பு அந்தக் கிளிஞ்சலின் வாயை, வெங்காரத்தை ஆட்டுப்பால் விட்டு அரைத்த விழுதினால் மூடிவிடவும். இதை நன்றாகக் காயவைக்கவும்.

ஒரு புதுப்பானையில் 4 விரட்கடை அளவு உப்பு போட்டு ஒரே சீராக நிரவிவிடவும். அதன் மேல் கிளிஞ்சலை வைத்து மறுபடியும் உப்பை 4 விரலளவு இருக்கும்படி போட்டுப் பானையின் வாயக்குத் தகுந்தபடி ஒரு மூடிபோட்டுச் சீலைமண் செய்யவும்.

சீலைமண் காய்ந்தபின் யானைப்புட ம் இடவும். புடம் காய்ந்தவுடன் பானையைத் திறந்து உள்ளிருக்கும் கிளிஞ்சலைக் கவனமாக எடுத்துக் கல்வத்தில் வைத்து நன்றாக அரைத்து வைத்துக்கொண்டு, ஒரு மூங்கில் குழாயில் வைத்துப் பதனம் பண்ணவும்.

*பயன்பாடு*

தக்க அனுபானத்தில் இம்மருந்தை 3 $^1/_2$ குன்றி அளவு எடுத்து உட்கொள்ள, கப நோய்கள் தீரும்.

***பத்தியம்***

பசுவின் பால், பசுவின் நெய் இவைகளைச் சேர்த்துச் சாதம் சாப்பிடவும். கத்தரிப் பிஞ்சும் சேர்த்துக் கொள்ளலாம்.

## 31. இராசமிருகாங்க இரசம் (வேறு முறை)

***சரக்கு***

| | |
|---|---|
| சுத்தி செய்த பாதரசம் | 1 வராகன் எடை |
| சொர்ணப் பற்பம் | 1 " |

| | |
|---|---|
| சுத்தி செய்த மனோசிலை | 2 வராகன் எடை |
| சுத்தி செய்த தாளகம் | 2 " |

சுத்தி செய்த நெல்லிக்காய் கந்தகம் 2 வராகன் எடை

*செய்முறை*

இவைகளைச் சூரணித்துக் கலவத்தில் இட்டு, வெள்ளாட்டின் பால் விட்டு நன்றாக அரைக்கவும். பின்னர் பொரித்த சோழி, வெங்காரம் இவ்விரண்டையும் தண்ணீர் விட்டு அரைத்துக் குகையாகச் செய்து உலர்ந்தபின் மேலே சொன்ன விழுதை அதற்குள் வைத்துச் சோழி, வெங்காரக் கலவையினால் மூடிவிடவும். இதை ஒரு புதுச் சட்டியில் வைத்து வேறொரு அகலினால் நன்றாக மூடிச் சீலைமண் செய்து காய வைத்து யானைப் புடம் இடவும். பின்னர் இதைத் தூள் செய்து வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இம்மருந்தில் 4 குன்றி நிறை எடுத்து மிளகு, திப்பிலி இவைகளின் சூரணம் சேர்த்து நெய்யுடன் கூட்டி உட்கொள்ளவும். ஐய நோய்கள் தீரும்.

## 32. பூரண சந்திரோதயம்

*சரக்கு*

| | | |
|---|---|---|
| தங்கம் | 1 வராகன் எடை | |
| வாலைரசம் | 8 | " |
| சுத்தி செய்த கந்தகம் | 16 | " |

*செய்முறை*

முதலில் வாலைரசத்தைக் கல்வத்தில் விட்டுச் சுருள் தங்கரேக்கைப் பொடிப் பொடியாகக் கத்தரித்துப் போட்டு அரைக்கவும். இவைகள் இரண்டும் நன்றாய் உறவான பின் கந்தகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு அரைத்து எல்லாம் உறவாகிக் கறுப்பு நிறமாக இருக்கும்போது சேதப்படாமல் சுரண்டி எடுத்து வைத்துக்கொள்ளவும். அதன்பின் சிறு கமலாப்பழம் அளவுள்ள மட்குடுவை யையும் அதன் வாய்க்குப் பொருத்தமான அகலையும் சாதம் வடித்த கஞ்சியில் ஒரு வாரம் போட்டு ஊறவிட்டு அலம்பி எடுத்து வெயிலில் உலர்த்தி, அதனில் முன் அரைத்துச் சித்தப்படுத்திய தூளைப் போட்டு, புளியாரைக் கீரைச்சாற்றை அரை குடுவை கொள்ளும் அளவிற்கு விட்டு வாய்க்கு அகல் கொண்டு மூடி, மண்சீலை

ஏழு செய்து உலர்த்தி எடுத்துக் கொள்ளவும். பின்பு இரண்டு படி அளவு கொள்ளத்தக்க ஒரு மண்தோண்டியில், வெடி அடங்க வறுத்து எடுத்தச் சோற்றுப்பை 2 விரற்கடை கனம் இருக்கும்படி பரப்பி நடுவில் குடுவையை வைத்துத் தோண்டியின் வாய்க்குப் பொருத்தமான மண் சாணத்தைக் கொண்டு மூடி சீலை செய்து அடுப்பில் வைத்து முத்தீயாக 4-சாமம் எரிக்கவும். அதன் பின் காடாக்கினியாக இரண்டு சாமம் எரித்து ஆறவிடுக. மறுநாள் மட்குடுவையைத் திறந்து பார்க்க மருந்தானது உருகிச் சிவந்து இருக்கும். அப்பொழுது குடுவையிலும் அதன் வாய் மூடியிலும் பற்றியுள்ள மருந்தை எல்லாம் சேதப்படாமல் சுரண்டி எடுத்துக் கல்வத்தில் போட்டு அரைக்கச் சிவந்திருக்கும். இதைச் சீசாவில் பத்திரப்படுத்துக. எரிப்பின் பேதத்தால் சிறிது கறுத்திருப்பின் மீண்டும் அந்தக் குடுவையில் போட்டு வாய்மூடிச் சீலை செய்து முன் போல் உப்பில் வைத்துப் பின்னும் இரண்டு சாமம் எரித்தெடுக்க, உயர்தரமான சிவப்பு நிறத்தோடு இருக்கும். ஆனால் எடையில் சிறிது குறையும்.

*பயன்பாடு*

இந்தச் செந்தூரத்தில் வேளைக்குத் துவரம்பருப்பு அளவு காலை மாலை, தாது விருத்திக்கு உரிய இலேகியங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய*

உடல் வலுவின்மை, விந்து வெளிப்படுதல், மக்கட் பேரின்மை ஆகியன தீரும்.

*பத்தியம்*

சத்துள்ள ஆகாரங்களை வேளை தவறாமல் உட்கொள்ளவும்.

*குறிப்பு*

இந்தச் செந்தூரத்தைத் தேனில் கொடுக்கச் சுரம், நீர்க்கோவை, குளிர், உடல் உளைச்சல், வாத, கப நோய்கள் குணமாகும்.

### 33. பூரண சந்திரோதயம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| தங்கம் | 1 வராகன் எடை |
| வாலை ரசம் | 8 " |
| சுத்தி செய்த கந்தகம் | 16 " |

*செய்முறை*

முதலில் வாலை ரசத்தைக் கல்வத்தில் இட்டுச் சுருள் தங்கரேக்கைப் பொடிப் பொடியாகக் கத்தரித்துப் போட்டு அரைக்கவும். இவைகள் இரண்டும் நன்றாய் உறவான சமயம் கந்தகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு அரைத்து எல்லாம் உறவாகிக் கறுப்பு நிறமாக மாறியபின் செம்பருத்திப் பூச்சாற்றிலாவது அல்லது செம்பருத்திப் பூக்குடிநீரிலாவது நான்கு சாமம் அரைக்கவும். அதன்பின் செவ்வல்லி பூச் சாற்றில் இரண்டு சாமமும், பூமாதுளம் பூச்சாற்றில் இரண்டு சாமமும் அரைத்து, வெயிலில் நான்றாய் உலர்த்திப் பொடியாக்கிச் சிறு கமலாப் பழம் அளவுள்ள காசிக்குப்பியிலாவது, அது கிடைக்கப் பெறாத சமயம் நெருப்புக்கு நிற்கக்கூடிய கழுத்து நீண்ட புட்டியிலாவது போட்டு அந்தப் புட்டிக்கு மேலே 7-8 மண்சீலை செய்து உலர்த்தி வைத்துக் கொள்க.

அப்பால் $1\ ^1/_2$ அல்லது 2 படி அளவு கொள்ளத்தக்க ஒரு மண்பானையில் இரண்டு விரற்கடை அளவு பெருமணலைக் கொட்டிப் பரப்பி நடுவில் சீலைசெய்த குப்பியயை வைத்து வாய்க்குப் பஞ்சுகொண்டு அடைத்து,

வாய்வரம்பிற்கு வட்டமாக மணல் கொட்டிப் பரப்பி வாயடைப்பைத் திறந்து விடவும். இந்தப் பானையை அசையாமல் காலை நேரத்தில் அடுப்பில் வைத்து நான்கு சாமம் வரையில் கிரமப்படி முத்தீயாக எரித்துக் கொண்டு வருக. இந்தச் சந்தர்ப்பத்தில் 2-3 மணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு நீண்ட குடைக்கம்பியைக் கொண்டு குப்பியின் வாய் அடைபடாமலிருக்கும் பொருட்டு உட்செலுத்திக் கிளறிக் கொடுத்துக் கொண்டிருக்கவும். நான்கு சாமத்திற்குச் சமீபித்தவுடன் பின்னும் தீயை அதிகப்படுத்தி எரித்து, அடிக்கடி குடைக்கம்பியைக் கொண்டு கிளறிக் கொடுக்கவும். எப்பொழுது குடைக்கம்பியின் முனை சிவந்து காட்டுகிறதோ அப்போது உள்ளிருக்கும் மருந்து செந்தூரமாய்விட்டதென்று உணர்க. அந்தச் சமயம் குடைக்கம்பியைக் கொண்டு கிளறிக் கொடுக்கும்போது மருந்து தட்டுப்படாது. புட்டியின் அடியில் கரகரப்புத் தோன்றும். அப்போது எரிப்பதை நிறுத்தி, அடுப்போடே ஆறவிட்டு, மறுநாள் புட்டியில் தூள் சிறிதும் இல்லாதபடி எடுத்துக் கல்வத்தில் போட்டு அரைத்துக் குப்பியிலிடுக.

*பயன்பாடு*

பச்சைக் கற்பூரம், கோரோசனை, குங்குமப்பூ, கிராம்பு, சாதிக்காய் ஆகியவற்றில் வகைக்கு வராகன் எடை 1 எடுத்து, மொத்த எடைக்குச் சம அளவு முன் முடித்த பூரணசந்திரோதயச் செந்தூரத்தைக் கூட்டிப் பன்னீர் விட்டு நான்கு சாமம் அரைத்துக் குன்றி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திவைத்துக்

கொள்க. இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகத் தினம் இரு வேளை பொடி செய்து பசுவின் பாலில் போட்டுக் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சயம், காசம், சுவாசம், இருமல், மேகம், தாதுநட்டம் ஆகியன தீரும். தங்க நிறமான தேகமும் கண்களைப் பரிக்கத்தக்க ஒளியும் உண்டாகும்.

*பத்தியம்*

வேளை தவறாமல் நல்ல ஆகாரம் கொள்ளவும்.

## மாத்திரைகள்

### 1. அதிமதுராதி மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| அதிமதுரத்தூள் | 1 பலம் |
| வெண்மிளகுத்தூள் | 1 " |
| பொரித்த எண்ணெய் வெங்காரம் | 1 " |

கழுவிச் சுத்தப்படுத்தியசோற்றுக்கற்றாழைச்சோறு 3 பலம்.

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் கல்வத்தில் போட்டு, ஈரம் வற்றி மெழுகு ஆகும்படி அரைத்துப் பட்டாணி அளவு மாத்திரைகள் செய்து உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இம்மாத்திரையில் ஒன்றை 4 மணி நேரத்திற்கு ஒருமுறை வாயில் இட்டுச் சப்பி, அதிலிருந்து கரைந்து வரும் திரவத்தை விழுங்கிக்கொண்டு வரவேண்டும்.

*தீரும் நோய்*

கபம் சம்பந்தமான இருமல்கள் தீரும்.

*பத்தியம்*

சீதளப் பண்டங்களை நீக்கி, மற்றவைகளை உண்ணவும்.

## 2. காச குலாந்தக மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| இலிங்கம் | 1/4 பலம் |
| மனோசிலை | 1/4 " |
| கறுநாபி | 1/4 " |
| மிளகு | 1/4 " |
| தாளகம் | 1/4 " |
| பொரித்த வெங்காரம் | 1/4 " |
| சுக்கு | 1/4 பலம் |
| திப்பிலி | 1/4 " |

*செய்முறை*

மேற்கூறப்பட்ட எட்டு சரக்குகளில் இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவற்றைச் சூரணித்து, மற்றுள்ள சரக்குகளுடன் கல்வத்தில் போட்டு இஞ்சிச்சாறு விட்டு நான்கு சாமம் நன்றாய் அரைத்து மெழுகு பதத்தில், சிறு குன்றி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இம் மாத்திரையைத் தினம் இரு வேளையாக மூன்று அல்லது ஐந்து நாள் வரையில் சிற்றரத்தைக் குடிநீர், தாய்ப்பால், இஞ்சிச்சாறு போன்ற அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

சுவாசம், காசம், ஈளை, சுரம் முதலியவைகள் தீரும்.

*பத்தியம்*

புளி தள்ளி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

*குறிப்பு*

இம்முறையில் வீரம் பலம் 1/4 கூட்டிக்கொள்ளும்படி வீரமாமுனிவர் கூறி உள்ளார்.

இம்மாத்திரையைச் செய்யும் போது சரக்குச் சுத்தியைக் கவனத்தில் வைக்கவும்.

## 3. சங்கு மாத்திரை என்னும் பேதி மாத்திரை

*சரக்கு*

சாதிக்காய்
சுக்கு
ஓமம்
திப்பிலி
கிராம்பு
கஸ்தூரி மஞ்சள்
கறுஞ்சீரகம்
சுட்ட வசம்பு
பொரித்த பெருங்காரம்

இவைகள் வகைக்குக் கழஞ்சு 1. வெள்ளைக் காக்கட்டான் வேர்ப்பட்டை கழஞ்சு -2.

*செய்முறை*

இவைகளை எல்லாம் கல்வத்தில் போட்டு வெந்நீர் விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகு பதத்தில் கடலை அளவு மாத்திரைகள் செய்து, நிழலில் உலர்த்திச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

ஒரு வருடத்திற்குட்பட்ட குழந்தைகளுக்கு 1/2 மாத்திரை, ஒரு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு ஒரு மாத்திரை வீதம் தினம் இருவேளை 3-5 நாள் வெந்நீரில் கொடுக்கவும். இதனால் இரண்டொரு தடவை மலம் போகும். அதிகமாகப் பேதியானால் சிறிது அளவைக் குறைத்துக் கொள்ளவும். மலம் சரிவர வெளியாகாவிடின் சிறிது அளவை அதிகப்படுத்திக் கொள்ளவும்.

***தீரும் நோய்***

நெஞ்சு கபம், இருமல், கக்கல், மலக்கட்டு, சன்னி தோடம், சுரம், வலி, மாந்தம், வயிற்றுவலி முதலியவைகள் தீரும்.

***பத்தியம்***

பால் உண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் புளி தள்ளி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 4. கற்பூராதி மாத்திரை

*சரக்கு*

பச்சைக் கற்பூரம்

செஞ்சந்தனம்

சகஸ்திரபேதி

வெட்டிவேர்

கண்டில் வெண்ணெய்

| | | |
|---|---|---|
| இவைகள் வகைக்கு | 1 வராகன் எடை | |
| அதிமதுரம் | 3 | " |
| நெற்பொரி | 6 | " |

*செய்முறை*

இவைகளை எல்லாம் இடித்துச் சூரணமாக்கிக் கல்வத்தில் போட்டுத் தாய்ப்பால் விட்டு அரைத்துக் கழற்சிக்காய் அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

அதிகச் சுரமாக இருக்கும்போதும் கடினமான தலைவலி, நாவறட்சி உள்ள போதும், கண்கள் சிவந்து தேகத்தில் எரிச்சல் மிகுந்து வாய்ப் பிதற்றும் போதும், தூக்கம் இல்லாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருக்கும் போதும் இந்த மாத்திரையில் பாதியைத் தாய்ப் பாலில் உரைத்து நெற்றி, கன்னம், உச்சந்தலை முதலிய இடங்களில் பற்றிடவும். உடனே சுரம் இறங்கும். நித்திரை உண்டாகும். இவ்வாறு இருமுறை போடுவதற்குள் எதிர்பாராத அளவு சுகத்தைத் தரும். ஒருமுறை பற்று போட்டபின் மறுமுறை பற்று போடுவதாக இருப்பின் அவ்விடங்களைச் சுத்தப்படுத்திவிட்டுப் பற்று போடவும். இது வெளிமருந்தாக மட்டுமே பயன்படும்.

## 5. விஷ்ணுசக்கர மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| இரசம் | கழஞ்சு 1 |
| இலிங்கம் | " |

| | |
|---|---|
| கந்தகம் | கழஞ்சு 1 |
| நாபி | " |
| காந்தம் | " |
| அரிதாரம் | " |
| மனோசிலை | " |

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் கல்வத்தில் இட்டுப் பழச்சாற்றினால் மூன்று சாமம் அரைத்து, மிளகு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் இரு வேளை பிணிக்குத் தக்கவாறு தேன், திரிகடுகு, இஞ்சிரசம் முதலிய அனுபானங்களில் கொள்ளவும்.

*தீரும் நோய்*

பக்கசூலை, வாதரோகம், பதிமூன்று வகைப்பட்ட சன்னி தோடங்கள் தீரும்.

*பத்தியம்*

புளி நீக்கி ஆகாரம் கொள்ளல் வேண்டும்.

**6. விஷ்ணுசக்கர மாத்திரை (வேறு முறை)**

*சரக்கு*

நாபி

சூதம்

கெந்தி

மனோசிலை

காந்தம்

இவைகள் வகைக்கு வராகன் எடை 1.

கடுகுரோகணி

அரிசித்திப்பிலி

மிளகு

இந்துப்பு

சுக்கு

இவைகள் வகைக்கு வராகன் எடை - 2.

*செய்முறை*

மேற் கூறப்பட்ட பத்து சரக்குகளில் சுத்தி செய்யவேண்டியவைகளைச சுத்தி செய்தும், இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவற்றைச் சூரணித்தும், ஒரு மிக்கக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு 2-3 சாமம் அரைத்துப் பயறு அல்லது உளுந்து அளவு மாத்திரைகள் திரட்டி நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்த மாத்திரையில் வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் தேன், இஞ்சிச்சாறு முதலியவற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

*தீரும் நோய்*

கபால சூலை, பீனிசம், பித்தவாயு, வாதவலி, மகோதரம், கபம், சோகை, கழிச்சல், அதிசாரம், அதிக வியர்வை, சுரம், கண், தலை, இடுப்பு முதலிய இடங்களில் பற்றிய வலி ஆகிய யாவும் தீரும்.

## 7. கப நிவாரண மாத்திரை

*சரக்கு*

வில்வமர வேர்ப்பட்டை

கற்பூரவள்ளி இலை அல்லது அதன் பட்டை

நெற்பொரி

கோரோசனை

மனோசிலை

ஏலரிசி

சீரகம்

சிற்றாமுட்டி வேர்ப்பட்டடை

குங்குமப்பூ

தேவதாரு கட்டை

ஆடாதோடை வேர்ப் பட்டை

முருங்கை வித்து

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் ஒரு அளவாகக் கல்வத்தில் போட்டு முதலில் தும்பையிலைச் சாற்றிலும் பின்னால் தாய்ப் பாலிலும் நன்கு அரைத்துத் தூதுவளங்காய் அளவு மாத்திரைகள் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

கபமானது நுரையீரலில் அதிகமாகச் சிக்குண்டு சுரம் தணியாமல் இருக்கும்போது சில மாத்திரையைத் தும்பையிலைச் சாற்றில் உரைத்துத் தாய்ப்பால் விட்டுக் குழைத்து மார்புக்குப் (நுரையீரலுக்குச் சமீபமாக) பூசவும். இப்படித் தினம் 2-3 வேளை பற்றிட்டுக் கொண்டுவரக் கபத்தை எளிதில் கரைத்துவிடும். இது வெளி மாத்திரையாகும்.

## 8. மருத்துவாமிர்த மாத்திரை

*சரக்கு*

அதிமதுரம்

ஏலம்

சகஸ்திரபேதி

மாசிக்காய்

இரசக் கற்பூரம்

சாதிகோஷ்டம்

கோரோசனை

சண்பகமொட்டு

இலவங்கப்பத்திரி

இவைகள் வகைக்கு வராகன் எடை $1\,^1/_4$.

*செய்முறை*

மேற் கூறப்பட்ட ஒன்பது சரக்குகளில் இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவைகளைச் சூரணித்து, இரசக்கற்பூரத்தைச் சுத்திசெய்து

எல்லாவற்றையும் கல்வத்தில் போட்டு வைத்துக் கொள்ளவும். அப்பால் 1/2 பலம் வெட்டிவேர், 1/2 பலம் விலாமிச்சம் வேர் ஆகியவைகளைப் பஞ்சுபோல் நசுக்கி ஒரு பாண்டத்தில் போட்டு, 1/4 படி நீர் விட்டு அடுப்பில் வைத்துச் சிறுக எரித்து வீசம்படி அளவு சுண்டிய சமயம் வடிகட்டவும். அதனில் துளசிச்சாறு, மாசிப்பத்திரிச் சாறு வகைக்கு 2-3 அவுன்ஸ் வீதம் விட்டுக் கலக்கி, முன் சித்தப்படுத்தி வைத்துள்ள கல்வத்தில் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு 2 சாமம் அரைத்து மெழுகு பதமாகத் திரளும்போது வெந்தயம் அளவாக மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு 1-2 அல்லது 3 மாத்திரை வீதம் தினம் ஒருபொழுது 2-5 நாள் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

- ❖ மாசிப்பத்திரி இலையை ஒரு கைப்பிடி அளவு புதுச் சட்டியில் போட்டுச் சலசலப்பாக வறுத்துத் தண்ணீர் விட்டுக் காய்ச்சிய குடிநீரில் கொடுக்கச் சிங்கு மாந்தக்கணை தீரும்.
- ❖ இலவங்கப்பூவை வறுத்து நீர்விட்டுக் காய்ச்சிய குடிநீரில் கொடுக்க மாந்தத்தில் காணும் பேதி குணமாகும்.
- ❖ தாய்ப்பாலில் கொடுக்க மேல்வயிறு பொருமி குடல் புரண்டு புரண்டு எழுந்து அடங்கும் குடல்படுவன் குணமாகும்.

## 9. சாந்த சந்திரோதய மாத்திரை

*சரக்கு*

| | | |
|---|---|---|
| இரசக் கற்பூரம் | 1 | வராகன் எடை |
| பொரித்த வெங்காரம் | 1/2 | " |
| கப்பு மஞ்சள் தூள் | 3 | " |

*செய்முறை*

இவைகளைக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு இரண்டு சாமம் நன்கு அரைத்து மெழுகு பதமாகத் திரளும்போது பயறு அல்லது உளுந்து அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்று வீதம் தினம் இரு வேளை, மூன்று நாள் தேனில் கொடுக்கவும். நோய் வலுத்திருப்பின் துளசிச்சாறு, கம்மாறு வெற்றிலைச்சாறு, இஞ்சிச்சாறு, தாய்ப் பால் முதலிய அனுபானங்களில் கொடுத்தால் மிக்க நலத்தை உண்டாக்கும்.

*தீரும் நோய்*

குழந்தைகட்குக் காணும் சுரம், சலதோஷம், மாந்தம், இருமல், அசீரணம் முதலியவை தீரும்.

**பத்தியம்**

பால் உண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் இச்சாபத்தியமாக இருத்தல் நன்று. சீதளப் பண்டங்களை முற்றிலும் நீக்க வேண்டும்.

**10. உத்தாமணி மாத்திரை**

**சரக்கு**

திப்பிலி
கடுகு
ஓமம்
ஆமையோட்டுப் பற்பம்
பூண்டு
பொரித்த பெருங்காயம்
நாயுருவி விதை

**செய்முறை**

மேற்கூறப்பட்ட ஏழு சரக்குகளில் இடித்துச் சூரணம் செய்ய வேண்டியவற்றைச் சூரணித்து, மற்றச் சரக்குடன் கூட்டிக் கல்வத்தில் போட்டு உத்தாமணி இலைச்சாறு விட்டு நன்கு அரைத்து மெழுகு பதத்தில் கடலை அளவு மாத்திரைகள் செய்து பத்திரப்படுத்தவும்.

**பயன்பாடு**

குழந்தைகட்கு வேளைக்கு ஒரு மாத்திரை வீதம், தினம் இரு வேளை தேன், தாய்ப் பால் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும்.

**தீரும் நோய்**

பேதி, வாந்தி, அசீரணம், மாந்தம், வயிற்றுப் பொருமல், நெஞ்சுக் கபம் முதலியவை தீரும்.

**பத்தியம்**

முன் முறையில் கூறியதேயாகும்.

**11. சயகுலாந்தக மாத்திரை**

*சரக்கு*

வாலைரசம்
இலிங்கம்
கறுஞ்சீரகம்
பவழப் பற்பம்
மான்கொம்புப் பற்பம்
அப்பிரகப் பற்பம்
தங்கச் செந்தூரம்
கந்தகம்
உருத்திராட்சம்
கறுநாபி
வெள்ளிப்பற்பம்
முத்துப் பற்பம்
பொரித்த வெங்காரம்
தாம்பரச் செந்தூரம்

இவைகள் வகைக்கு வராகன் எடை -1.

*செய்முறை*

மேலே குறிப்பிட்டுள்ள பதினான்கு சரக்குகளில் முதலில் வாலைரசம், சுத்தி செய்த கந்தகம், இலிங்கம் ஆகிய மூன்றையும் கல்வத்தில் போட்டு நன்கு அரைத்து இரசம் உருமாறிய பின், உருத்திராட்சம், கறுஞ்சீரகம், சுத்தி செய்த கறுநாபி முதலியவற்றின் சூரணத்தையும் மற்றுமுள்ள செந்தூரப் பற்பங்களையும் கூட்டிப் பழச்சாறு விட்டு ஒரு சாமம் நன்றாய் அரைத்துப் பச்சைப் பயறு அளவாக மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகக் காலையும் மாலையும் தகுந்த அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

சய சுரம், இருமல், இளைப்பு முதலியவகைள் நீங்கும்.

*பத்தியம்*

இச்சாபத்தியமாக, நல்ல ஆகாரம் கொள்ள வேண்டும்.

## 12. குங்குமப்பூ மாத்திரை

*சரக்கு*

சுக்கு
வெண்மிளகு
ஓமம்
கோஷ்டம்
இலிங்கம்
கோரோசனை
சாம்பிராணிப்பதங்கம்
திப்பிலி
இலவங்கம்
ஏலம்
வால்மிளகு
வெங்காரம்

குங்குமப்பூ

இவைகள் வகைக்கு வராகன் எடை 1.

*செய்முறை*

மேற் கூறப்பட்ட சரக்குகளில் சூரணிக்க வேண்டியவற்றைச் சூரணித்து, இதரச் சரக்குகளுடன் கல்வத்தில் போடவும். மூன்று அவுன்ஸ் கொதி நீரில், மூன்று குன்றி எடை குங்குமப்பூவைப் போட்டு 2-3 மணி நேரம் ஊறவிட்டுப் பிசைந்து வடிகட்டிக் கொஞ்சம் கொஞ்சமாகக் கல்வத்தில் விட்டு அரைத்து மெழுகுபதத்தில். உளுந்து அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வேண்டும்போது குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு மாத்திரையை வேளைக்கு ஒன்றாக, தினம் இரு வேளை தேன், தாய்ப்பால் முதலிய அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

சுரம், சலதோஷம், மலச்சிக்கல், வியர்வை, சீதளம் முதலியவைகள் குணமாகும்.

## 13. சிரோரத்தின மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | 1 பலம் |
| சாம்பிராணி | 1/2 " |
| சுக்கு | 1/2 " |
| இலவங்கம் | 1/4 " |
| ஓமம் | 1/4 " |
| வெங்காரம் | 1/2 " |
| மிளகு | 1/2 " |
| சாதிக்காய் | 1/2 " |
| கற்பூரம் | 1/2 " |
| பூசும் மஞ்சள் | 1/4 " |

*செய்முறை*

இவற்றை எல்லாம் சூரணித்துக் கல்வத்தில் போட்டுத் தாய்ப்பால் விட்டு அரைத்து மெழுகு பதத்தில் சுண்டைக்காய் அளவு மாத்திரைகள் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

வேண்டும்போது ஒரு மாத்திரையைத் தாய்ப்பாலில் குழைத்து நெற்றிப் பொறி, கன்னம் முதலிய இடங்களில் தளமாகப் பூசிவரவும்.

*தீரும் நோய்*

சீதளநீரை வற்றச்செய்து தலைவலி, தலைபாரம் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

*பத்தியம்*

சீதளப் பண்டங்களையும் நோய்க்காகாத பண்டங்களையும் நீக்கவும்.

### 14. பாலசஞ்சீவி மாத்திரை

*சரக்கு*

சுக்கு
மிளகு
திப்பிலி
வெங்காரம்
இலிங்கம்

இவைகள் வகைக்கு வராகன் எடை -1.

*செய்முறை*

இலிங்கத்தைச் சுத்தி செய்தும் வெங்காரத்தைப் பொரித்தும் மற்றச் சரக்குகளை இடித்துச் சூரணித்தும் கல்வத்தில் போட்டுப் பழச்சாறு விட்டு ஒரு சாமம் அரைத்துப் பயறு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்துக.

*பயன்பாடு*

இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகக் குழந்தைகளுக்குத் தினம் இரு வேளை, மாசிப்பத்திரி பிட்டவியல் சாற்றில் கொடுத்து வருக.

*தீரும் நோய்*

சுரம், இருமல், தோடம் குணமாகும்.

## 15. மகா வசந்த குசுமாகர மாத்திரை

*சரக்கும் செய்முறையும்*

பொன், அயம், முத்து, பவளம், அப்பிரகம், காந்தம், வங்கம், நிமிளை, கந்தி, செம்பு ஆகியவைகளின் பற்பங்களையும் நாபியையும் சம அளவு எடுத்துக் கல்வத்தில் இட்டுக் குமரிச்சாற்றினால் 3 நாள் அரைத்துத் திரண்ட பிறகு முத்துச்சிப்பியினில் வைத்து, மற்றொரு முத்துச்சிப்பியினால் பொருந்த மூடி, வெங்காரத்தையும், குன்றிமணிப் பருப்பையும் பழச்சாற்றினால் அரைத்து மேற்படி முத்துச்சிப்பிக்குக் கவசம் இட்டு, உலர்ந்த பின் மேலும் கவசித்து உலர்த்தவும். நன்றாக இறுகி உலரும் வரை மேற்படியாகக் கவசம் இடவும். இதை மணல் மறைவில் எரித்துப் பதம் வந்த பிறகு ஆறவிட்டு எடுத்து, கவசத்தை நீக்கிச் சிப்பியுடன் கல்வத்திட்டுப் பொடித்து, செங்கழுநீர்ப் பூச்சாறு, கோங்கிலவம் பூச்சாறு, தாமரைப் பூச்சாறு, மாதுளம் பூச்சாறு இவைகளில் தனித்தனியாக நன்றாக அரைத்த பிறகு வெட்டிவேர்க் குடிநீர், விலாமிச்சம் வேர்க் குடிநீர் ஆகியவைகளில் முறையே ஒவ்வொரு நாள் அரைத்து, மருந்து எடைக்கு $^1/_2$ பங்கு கஸ்தூரி, $^1/_2$ பங்கு குங்குமப்பூ, $^1/_{16}$ பங்கு பச்சைக்கற்பூரம் சேர்த்து, வெட்டிவேர்க் குடிநீரால் 3 நாள் அரைத்துக் குன்றி அளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தவும்.

*பயன்பாடு*

- ❖ மாத்திரையைச் சர்க்கரையில் கொடுக்கப் பயித்தியமும்
- ❖ தேனில் கொடுக்கக் கபநோய்களும்
- ❖ அரத்தையும் சுக்கும் சேர்ந்த குடிநீரில் கொடுக்க அசீரணமும்
- ❖ வாய்வுகளுக்கு அசுவகந்திச் சூரணமும்
- ❖ இஞ்சிச் சாற்றில் காசங்களும்
- ❖ மஞ்சளும் திப்பிலியும் சேர்ந்த குடிநீரில் கொடுக்கச் சுவாசகாசங்களும்
- ❖ கடுக்காய், உப்பு, இலவங்கம் சேர்ந்த சூரணத்தில் கொடுக்கச் சயநோயும்
- ❖ மிளகும் சர்க்கரையும் சேர்ந்த சூரணத்தில் கொடுக்கச் சுரமும் மனக்கலக்கமும்

- ❖ பசுவின் நெய்யில் கொடுக்க அசீரணப் பித்தமும்
- ❖ இளைப்பு நோயில் தேற்றான் விதைச் சூரணமும்
- ❖ எலும்புருக்கி நோயில் நெல்லிவிதைச் சூரணமும்
- ❖ விளாம்பழத்தில் வீக்கமும்
- ❖ கொடிவேலி வேர்ப்பட்டைக் குடிநீரில் மூலமும்
- ❖ சீந்திற் சர்க்கரையில் பிரமேகமும்
- ❖ வெள்ளரிவிதை, சிலாசத்துப் பற்பம், சர்க்கரை சேர்ந்த அனுபானத்தில் கொடுக்க நீர்க் கட்டும்
- ❖ காட்டாத்திப் பூக் குடிநீரில் வழங்க அதிசாரமும்
- ❖ கசகசாப் பொடியில் ஊழியும்
- ❖ வெதுப்பிப் பொடித்த சுக்குத்தூளில் கிராணியும்
- ❖ நெல்லி விதை, சிவதை சேர்ந்த சூரணத்தில் வயிற்றுவலியும்
- ❖ திப்பிலி, இந்துப்பு சேர்ந்த பொடியில் மந்தாக்கினியும்
- ❖ பசு மூத்திரத்தில் சோபையும்
- ❖ முப்பலைச் சூரணத்தில் பாண்டும்
- ❖ கரிப்பான் கற்கத்தில் காமாலையும்
- ❖ கார்போகியில் குட்டமும்
- ❖ படிகாரப் பொடியில் மார்புநோயும்
- ❖ எவாச்சாரத்தில் குன்மமும்
- ❖ நொச்சி, இஞ்சி சேர்ந்த குடிநீரில் சன்னியும்
- ❖ குடசப் பாலை, இலவங்கம் சேர்ந்த பொடியில் சூதகவாயுவும்
- ❖ எருமைப்பாலில் அபஸ்மாரமும்
- ❖ வெள்ளைக் காக்கண பூச்சாற்றில் பயித்தியங்களும் தீரும்.

இன்னும் பிற நோய்களும் தக்க அனுபானங்களில் கொடுக்கத் தீரும் என்று கூறப்பட்டுள்ளது.

## 16. மகா வசந்த குசுமாகர மாத்திரை (வேறு முறை)

*சரக்கு*

தங்கச் செந்தூரம்
அப்பிரகச் செந்தூரம்
நிமிளைச் செந்தூரம்

முத்துப்பற்பம்

காந்தச்செந்தூரம்

கந்தகம்

அயச்செந்தூரம்

வெள்வங்கப் பற்பம்

நாபி

பவளப் பற்பம்

தாம்பிரச்செந்தூரம்

இவைகள் வகைக்கு வராகன் எடை 2.

*செய்முறை*

இவற்றைக் கல்வத்தில் போட்டுச் சோற்றுக் கற்றாழைச் சாறு விட்டு நான்கு சாமம்அரைக்கவும். மருந்தை வழித்துப் பொருத்தமான ஒரு சோடி முத்துச் சிப்பியைக் கொண்டு வந்து ஒன்றுக்குள் அடக்கம் செய்து மற்றோர் சிப்பியால் மூடவும். வாய் பொருத்தத்திற்கு வெங்காரமும் குன்றிமணிப் பருப்பும் கூட்டிப் பழச்சாற்றால் அரைத்துப் பூசிக் கவசமிட்டுச் சுண்ணாம்புச் சீலை செய்து வாலுகாயந்திரத்தில் வைத்து 2-3 சாமம் எரிக்கவும். ஆறிய சிப்பியின் மேல் உள்ள கவசத்தை நீக்கி, சிப்பியுடன் கல்வத்தில் போட்டுச் செங்கழுநீர்ப்பூ, கோங்கு இலவம்பூ, தாமரைப்பூ, பூமாதுளம்பூ ஆகியவற்றின் சாற்றாலும் வெட்டிவேர், விலாமிச்சம் வேர் முதலியவற்றின் குடிநீராலும் ஒவ்வொரு சாமம் அரைக்கவும். மருந்தின் மொத்த எடைக்கு எட்டில் ஒரு பாகம் குங்குமப்பூவும், பதினாறில் ஒரு பாகம் பச்சைக் கற்பூரமும் கூட்டி, வெட்டிவேர்க் குடிநீரில் ஒரு சாமம் அரைத்துக் குன்றி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகத் தினம் இரு வேளை தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சுரம், இருமல், நீரேற்றம், காசம், தொண்டைக்கம்மல், கபசுரம் முதலியவைகள் குணமாகும்.

*பத்தியம்*

நோய்க்கு ஏற்றவாறு கஞ்சி இனங்களைச் சேர்க்கவும்.

## 17. இலகு வசந்த குசுமாகர மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| இலிங்கம் | 1 பலம் |
| இலவங்கம் | 1 " |
| கோஷ்டம் | 1 " |
| அதிமதுரம் | 1 பலம் |
| வெங்காரம் | 1 " |
| திப்பிலி | $^1/_2$ " |
| அக்கிராகாரம் | $^1/_2$ " |
| குங்குமப்பூ | 1 வராகன் எடை |
| கோரோசனை | $^1/_2$ " |
| பச்சைக் கற்பூரம் | $^1/_2$ " |

*செய்முறை*

மேற்கூறப்பட்ட சரக்குகளில் சூரணிக்க வேண்டியவைகளைச் சூரணித்து மற்ற சரக்குகளுடன் கல்வத்தில் போட்டு இஞ்சிச்சாறு, தாய்ப்பால் இவைகளில் ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு நாள் அரைத்து மெழுகு பதத்தில், பயறு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

வேண்டும்போது இந்த மாத்திரையை வேளைக்கு ஒன்றாகத் தினம் இரு வேளை இஞ்சிச் சாறு, தேன், தாய்ப்பால் போன்ற அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

பழைய சுரம், கபம், காசம், தாகம், தும்மல், ஏப்பம், தலைவலி, பிடரிவலி முதலியவைகள் குணமாகும்.

*பத்தியம்*

நோய்க்கு ஏற்றவாறு எளிதில் சீரணிக்கக் கூடிய ஆகாரம் கொடுக்கவும்.

## 18. இருதா மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| மிளகு | 2 வராகன் எடை |
| குங்குமப்பூ | 1 " |
| பச்சை சதாப்பு இலை | 8 எண்ணிக்கை |
| கோரோசனை | 1 வராகன் எடை |
| உரித்த வெள்ளைப்பூண்டு | 1 " |

*செய்முறை*

இங்கே கூறப்பட்ட சரக்குகள் ஐந்தையும் கல்வத்தில் இட்டுக் கை ஓயாமல் ஒரு சாமம் அரைக்கவும். மெழுகு பதத்திற்கு வரப் போதிய ஈரம் இல்லாவிடின் நோயற்ற தாயின் பால் சிறிது சேர்த்து அரைத்துப் பச்சைப்பயிறு அளவில் மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திப் பத்திரமாக வைக்கவும்.

*பயன்பாடு*

ஒரு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு வேளைக்கு ஒரு மாத்திரை விகிதம் தினம் ஒன்றுக்கு இரண்டு அல்லது மூன்று வேளை தாய்ப்பாலில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சுரம், வலி, மாந்தம், இருமல் முதலிய பிணிகள் தீரும்.

*பத்தியம்*

தாய் இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 19. கோரோசனை மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| கோரோசனை | $^1/_2$ வராகன் எடை |
| குங்குமப்பூ | $^1/_2$ " |
| கஸ்தூரி | 1 " |
| பச்சைக்கற்பூரம் | $^1/_2$ " |
| சுக்கு | பலம் அரைக்கால் |
| அதிமதுரம் | " |

| | |
|---|---|
| அக்கிராகாரம் | பலம் அரைக்கால் |
| ஏலம் | " |

*செய்முறை*

மேற் கூறப்பட்ட சரக்குகளைக் கல்வத்தில் போட்டு மாசிப்பத்திரிச் சாறு, குங்குமப்பூ, சந்தனம், வெட்டிவேர் இவைகளின் குடிநீரால் தனித்தனியே ஒவ்வொரு சாமம் அரைத்துப் பயறு அளவு மாத்திரைகளாகத் திரட்டி நிழலில் உலர்த்துக.

*பயன்பாடு*

குழந்தைகளுக்கு வயதுக்குத் தக்கபடி $^{1}/_{2}$- 1 ஆகத் தேன், தாய்ப்பால், இஞ்சிச் சாறு முதலியவற்றில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சன்னி, தொண்டைக் கட்டு, தோடசுரம் முதலிய பிணிகள் நீங்கும்.

*பத்தியம்*

குழந்தையினது நோயின் தன்மைக்கு இசைந்தவாறு புளி நீக்கியும் நீக்காமலும் இச்சாபத்தியமாகத் தாய் இருத்தல் நன்று.

## 20. இலவங்காதி மாத்திரை

*சரக்கு*

| | | |
|---|---|---|
| கிராம்பு | 6 | வராகன் எடை |
| மிளகு | 4 | " |
| பூரம் | 1 | " |
| இலிங்கம் | 1 | " |
| இரசம் | 1 | " |
| கந்தகம் | 1 | " |
| வெங்காரம் பொரித்தது | 2 | " |
| சுத்தித்த வாளம் | 10 | " |

*செய்முறை*

இங்கே கூறிய சரக்குகள் எட்டினையும் கல்வத்தில் இட்டு, இரண்டு பலம் கடுக்காய்த் தோலை அரைப்படி நீரில் போட்டு, அரைக்கால் படியாகக் காய்ச்சி

வடித்தக் குடிநீரில் இரண்டு சாமம் அரைத்து மெழுகு பதத்தில், உளுந்து அல்லது மிளகு அளவு மாத்திரைகள் செய்து, நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

குழந்தைகளுக்கு வியாதிக்கு ஏற்றவாறு அனுபான பேதம் செய்து கொடுக்கவும்.

*தீரும் நோய்*

மாந்தம், சுரம், இழுப்பு, சன்னி தோடம் முதலியன நீங்கும். தவிர இம்மாத்திரைகளை மாதத்திற்கு இரண்டு முறை விரேசனம் (பேதி மருந்து) கொடுத்துவர எத்தகைய நோயும் அணுகவொட்டாமல் பாதுகாக்கும்.

## 21. கற்பூர மாத்திரை

**சரக்கு**

| | |
|---|---|
| ஏலரிசிச் சூரணம் | 1 வராகன் எடை |
| சுத்திசெய்த கந்தகம் | 1 " |
| கற்பூரம் | 1 " |
| சிற்றண்டத்தைலம் | துளி 120 ($^1/_4$ அவுன்ஸ்) |

*செய்முறை*

இங்கே கூறிய நன்கு சரக்குகளைக் கல்வத்தில் இட்டு அரைத்து முப்பது மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

ஒரு வருடத்துக்கு உட்பட்ட குழந்தைகட்கு 1/2 மாத்திரையும் அதற்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு 1 மாத்திரையும் தேனிலாவது, தாய்ப் பாலிலாவது தினம் இரு வேளை மூன்று நாள் கொடுக்கவும்..

*தீரும் நோய்*

குழந்தைகளுக்கு உண்டாகும் கக்குவான் இருமல் குணமாகும்.

*பத்தியம்*

ஆகாரம் உட்கொள்ளும் குழந்தைகளாக இருப்பின் உப்பு, புளி நீக்கல் வேண்டும். பால் உண்ணும் குழந்தைகளுக்குத் தாய் புளி நீக்கி, இச்சாபத்தியம் கொள்ளல் வேண்டும்.

## 22. சுவர்ணபூபதி மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| கந்தகம் | 1 பலம் |
| வாலை இரசம் | 1 " |
| கறுநாபி | 1 பலம் |
| பவழம் | 1 " |
| படிகாரம் | 1 " |
| வெங்காரம் | 1 " |
| மனோசிலை | 1 " |
| பாடாணம் | 1 " |

*செய்முறை*

இந்த கூறப்பட்ட எட்டுச் சரக்குகளையும் கல்வத்தில் இட்டுப் பழரசத்தில் மூன்று நாளும், குமரிச்சாற்றில் மூன்று நாளும் அரைத்து ஒரே வில்லையாகத் தட்டி உலர்த்திடுக. ஒரு சட்டியில் இரண்டங்குல உயரமிருக்கும்படி மேல் தோல் சீவிய குமரி மடலைப் போட்டு, அதன் மீது முன்னே தட்டிய வில்லையை வைத்து அதன் மேல் முன்போலவே குமரிமடலைப் போட்டு மேல் சட்டி மூடி, முத்தீயாக இருபத்து நான்கு மணி நேரமும் எரிக்கவும். பின் ஆறவிட்டுத் திறந்து கற்றாழைமடல் சாம்பல் உட்பட எல்லாவற்றையும் சுரண்டி எடுத்துக் கல்வத்தில் இட்டு, அதனோடு தங்கரேக்கு, வெள்ளிரேக்கு, இலிங்கம், பவழம், உருத்திராக்கம், கெட்டிமுத்து, அக்கிராகாரம், பச்சைக் கற்பூரம் ஆகியவைகளை வகைக்கு ஒன்றேகால் வராகன் எடை சேர்த்து, தாய்ப்பால், பூமாதுளம் பூச்சாறு, கறுத்துளசிச்சாறு முதலியவற்றால் ஒவ்வொரு நாள் அரைத்துச் சிறு வில்லைகளாய்த் தட்டி நிழலில் உலரவைத்துப் பூவரசம் பழுப்பிலையில் வைத்து, நூலில் கட்டி இருபது நாள் வரை தானியப்புடம் வைக்கவும். பின்னர் சுகந்த பனி நீரால் நான்கு சாமம் அரைத்துப் பச்சைப் பயறு அளவு மாத்திரை செய்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

ஒரு மாத்திரையை வியாதிக்கு இசைந்த அனுபானங்களில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சன்னி தோடம், ஈளை, காசம், நீரிழிவு, மகோதரம், கவுசி, பாண்டு, முகவாதம், எலும்புருக்கி, முதலிய கொடிய நோய்கள் குணமாகும்.

*பத்தியம்*

புளி நீக்கி, இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

*குறிப்பு*

இம்மாத்திரை மிக்க நன்மை தரத் தக்கதேனும் அதிகக் கவனமின்றி பயன்படுத்தினால் பலவிதத் தீமைகள் ஏற்பட வாய்ப்புண்டு. உடலின் தன்மையையும் நோயின் வன்மை மென்மையையும், கால நிலையையும் உய்த்துணர்ந்து, அதிக அளவாகவும் நீண்ட நாட்களும் கொடுக்காமல், இடைவிட்டு இடைவிட்டு விளைவுகளைச் செவ்வையாகக் கவனித்துக் கொடுக்க வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது.

## 23. சுவாசகாச மாத்திரை

*சரக்கு*

| | | |
|---|---|---|
| கிராம்பு | 1 | தோலா |
| பொரித்த வெங்காரம் | 1 | " |
| வெளுக்க வறுத்த துருசு | 1 | " |
| வெள்ளைப் பாடாணம் | 1 | " |
| மூசாம்பரம் | 1 | " |
| திப்பிலி | 1 | " |
| அபினி | 1/2 | " |

*செய்முறை*

இந்த கூறப்பட்ட ஏழு சரக்கினையும் கல்வத்தில் இட்டு, வெள்ளாட்டுப் பிச்சியினின்று எடுத்த நீரினால் மெழுகு பதமாக அரைத்துப் பச்சைப்பயறு அளவில் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

சீதளத்தினால் மார்பில் கோழை மிகுந்து இருமலினாலாவது இழுப்பினாலாவது துன்பப்படும்போது, மூன்று அல்லது நான்கு மணி நேரத்திற்கு ஒரு மாத்திரையாக வாயில் போட்டு, விழுங்காமல் நாவினால் சுவைத்து, உமிழ் நீரைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கவும்.

*தீரும் நோய்*

கோழை கரைந்து எளிதில் வெளிப்பட்டு இரண்டு,மூன்று நாட்களுக்குள் பூரண குணமடையும்.

**24. குக்கிலாதி மாத்திரை**

*சரக்கு*

சுக்கு
திப்பிலி
மிளகு
வாய்விளங்கம்
கோரைக்கிழங்கு
செவ்வியம்
கடுக்காய்த் தோல்
நெல்லிக்காய்
தான்றிக்காய்த் தோல்
கடுகுரோகணி
மஞ்சள்
கொடிவேலி வேர்
தேவதாரம்
ஏலக்காய்
புக்கர மூலம்
வசம்பு
மரமஞ்சள்
இலவங்கப்பட்டை
இந்துப்பு
வளையலுப்பு
கறியுப்பு
வெட்பாலை அரிசி

மூக்கிரட்டை வேர்

யானைத்திப்பிலி

திப்பிலிமூலம்

*செய்முறை*

இவைகளை வகைக்கு $^1/_2$ பலம் வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து, சுத்தி செய்த குக்கில் 13 பலம் எடுத்துச் சூரணத்துடன் கலந்து நன்றாக ஒன்று சேரும் வரை இடித்து, இலந்தைக்கொட்டை அளவு மாத்திரை செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

இதை நெய்யிலோ, தேனிலோ சாப்பிடவும்.

*தீரும் நோய்*

உடம்பு வீக்கம், சயம், காசம், சுவாசம், அக்கினி, மாந்தம் குன்மம், ஆசன நோய்கள், மூலம், வயிற்றிலுள்ள கட்டிகள், பொருமல், மகோதரம், பாண்டு, கிராணி, தோல் நோய், கபம், ஈளை முதலிய பலவித கொடூர நோய்களும் தீரும்.

## 25. திரிகடுகு மாத்திரை

*சரக்கு*

சுக்கு

மிளகு

சாதிக்காய்

சிற்றரத்தை

கோரைக்கிழங்கு

கற்கடகசிங்கி

அக்கிராகாரம்

நெல்லிவற்றல்

தான்றித்தோல்

மஞ்சிட்டிக் கிழங்கு

திப்பிலி

கிராம்பு

பொரித்த இந்துப்பு
சிறுநாகப்பூ
தாளிசப்பத்திரி
முசுருமுசுட்டை
சுத்தி செய்த காந்தம்
கடுக்காய்த் தோல்
திப்பிலிமூலம்

**செய்முறை**

இவைகளை ஒன்றுகூட்டிக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொண்டு, கல்வத்தில் இட்டுக் கையாந்தகரைச் சாறு விட்டு 3 சாமங்கள் அரைக்கவும். பின்பு, வெள்ளிரேக்கையும் தங்கரேக்கையும் சேர்த்து இம்மூன்றையும் வேறொரு கல்வத்தில் இட்டுக் கையாந்தகரைச் சாறு விட்டு ஒன்றாகும் வரை அரைத்தபின், முன்சொன்ன விழுதையும் சேர்த்து ஒன்று கலந்து நன்றாக அரைத்து மாத்திரைகளாக உருட்டிக்கொள்ளவும்.

*பயன்பாடு*

திப்பிலித்தூள் 1 வராகன் எடையுடன் இம்மாத்திரையில் ஒன்றை வைத்துத் தேனில் குழைத்துச் சாப்பிட ஐய நோய் தீரும்.

## 26. சுவர்ணமாலினி வசந்தம்

*சரக்கு*

| | |
|---|---|
| சுத்தி செய்த பொன் | 1 பலம் |
| சுத்தி செய்த முத்து | 2 " |
| சுத்தி செய்த இலிங்கம் | 3 " |
| மிளகு | 4 " |
| சுத்தி செய்த வெள்ளைத்துத்தம் | 8 " |

*செய்முறை*

இவைகளை ஒரு சுத்தமான கல்வத்தில் இட்டுப் பசுவின் வெண்ணெய் சேர்த்து நன்றாக அரைக்கவும். பின்பு எலுமிச்சம் பழச்சாறு வார்த்து 3 சாமங்கள் அரைத்துப் பணவெடை உள்ள ($3\ ^1/_2$ குன்றி) மாத்திரைகளாக உருட்டி வைத்துக் கொள்ளவும்.

*தீரும் நோய்*

இதிலொரு மாத்திரையைத் தேனுடன் குழைத்து உட்கொள்ள சயம், இருமல் முதலானவை தீரும்.

## 27. அகத்தியர் குளிகை

*சரக்கு*

| | |
|---|---|
| சுத்தி செய்த பாதரசம் | 1 வராகன் எடை |
| விடத்தேர் வேர் | 1 " |

*செய்முறை*

இவ்விரண்டையும் கல்வத்தில் இட்டு மல்லிகைப் பூ இதழ்களைக் கசக்கிப் பிழிந்த சாறு விட்டு, 4 சாமங்கள் வரை (ஒரு பகல் பொழுது) அரைக்கவும். பின்பு இதனை மிளகளவுள்ள மாத்திரைகளாக உருட்டி, பீங்கான் பாத்திரத்தில் வைத்துச் சுத்தமான கொம்புத்தேன் ஊற்றவும்.

*பயன்பாடு*

இதில் வேளை ஒன்றுக்கு 1 மாத்திரை வீதம் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

20 நாட்கள் சாப்பிட்டுவரச் சயரோகம் நீங்கித் தாதுவிருத்தி உண்டாகும்.

*பத்தியம்*

பால், நெய் முதலானவைகளை மிகுதியாகச் சேர்த்துக்கொள்ளவும்.

## 28. முருங்கைப்பூ மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| முருங்கைப்பூ | 2 பலம் |
| உளுந்து | 1/2 " |
| எள்ளு | 1/2 " |
| பூனைக்காலி விதை | 3 வராகன் எடை |
| நீர்முள்ளி வித்து | 3 " |
| கஞ்சா விதை | 3 " |

| | | |
|---|---|---|
| ஞாழல் வித்து | 3 வராகன் எடை | |
| சாதிக்காய் | 3 | " |
| குரோசாணி ஓமம் | 3 | " |
| கண்டத்திப்பிலி | 3 | " |
| சாதிப்பத்திரி | 3 | " |
| சாரப்பருப்பு | 3 | " |
| கிராம்பு | 3 | " |
| நன்னாரிவேர் | 3 | " |
| கறுஞ்சீரகம் | 3 | " |
| அதிமதுரம் | 3 | " |
| அமுக்கராக்கிழங்கு | $^{1}/_{2}$ பலம் | |
| கடலை | $^{1}/_{2}$ | " |
| முள்ளங்கி விதை | 3 வராகன் எடை | |

*செய்முறை*

இவைகளை நன்கு உலர்த்திக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும். ஒரு புதுப்பானையில் தேங்காய்ப் பால் 3 படி விட்டு அதன் வாய்க்கு வேடு கட்டவும். அதன் மேல் மேற்சொன்ன சூரணத்தை வைத்து மேலே வேறொரு சட்டியினால் மூடிச் சீலைமண் செய்யவும். பின்பு இதனை அடுப்பின் மேலேற்றி 4 நாழிகை வரை எரித்து இறக்கவும்.

பின்னர் இச்சூரணங்களைத் தேங்காய்ப் பால் விட்டு நன்றாக அரைத்து 1 $^{1}/_{4}$ வராகன் எடை உள்ள உருண்டைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

**பயன்பாடு**

பசுவின் நெய், பால், இளநீர் இவைகள் ஏதேனுமொன்றில் ஒரு உருண்டை சாப்பிடவும்.

*தீரும் நோய்*

தாது விருத்தி உண்டாகும்.

## 29. பூரண சந்திரோதய மாத்திரை

### சரக்கும் செய்முறையும்

சுத்தித்த இரசம் 8 பங்கு, சுத்தித்த கந்தகம் 16 பங்கு, தங்கரேக்கு 1 பங்கு ஆக இந்த 25 பங்கையும் கல்வத்திட்டுப் பொடி செய்து செம்பருத்திப் பூச்சாற்றால் ஒரு நாளும், கற்றாழைச் சாற்றால் இரண்டு நாளும் நன்றாக அரைத்துக் கடலை அளவு மாத்திரைகள் செய்யவும். அவற்றை வெயிலில் உலர்த்திப் பொடி செய்து, ஏழு சீலை செய்த காசிக்குப்பியில் அடைத்துக் குப்பி வாயை நடுவில் துளையிடப்பட்ட பலப்பக்கல் அடைப்பானால மூடி, கல்சுண்ணாம்பும், வெல்லமும் சேர்த்தரைத்த சாந்தால் அடைப்பான் பொருத்து வாயைச் சீலைசெய்து 7 நாள் உலர்த்தவும். ஒரு சட்டியில் பாதியிருக்கும்படி மணலைக் கொட்டி, அதன்மீது குப்பியை வைத்துப் பிறகு குப்பியின் கழுத்துவரை நாற்பக்கமும் மணலைக் கொட்டி, மேற்சட்டி கொண்டு மூடிப் பொருத்து வாயைச் சீலை செய்து, அடுப்பின் மீது வைத்து, முதல் 4 சாமம் தாமரைப் பூ எரி இட்டு, பிறகு காடாக்கினியாக இருபது சாமம் எரித்துக் குளிர ஆறவிடவும். மருந்தை எடுத்துப் பார்க்க மாந்தளிர் நிறமாக இருக்கும். இம் மருந்தின் எடைக்குப் பச்சைக் கற்பூரம் 1/4 பங்கு, சாதிப்பத்திரி 1/2 பங்கு, குங்குமப் பூ 1/8 பங்கு, சாதிக்காய் 1/8 பங்கு, கஸ்தூரி 1/2 பங்கு ஆக எல்லாம் சேர்த்து, செம்பருத்திப்பூச் சாறு விட்டு நன்றாக அரைத்துப் பயறளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தவும்.

### பயன்பாடு

வெண்ணெய், சர்க்கரை, இஞ்சிச்சாறு ஆகிய ஒன்றில் குளிகையை அனுபானித்து உண்ணவும்.

### தீரும் நோய்

சயம், எட்டுவகை குன்மங்கள், சுவாசகாசம், பாண்டு, சோபை, 13 வகை சன்னிகள், இந்திரிய நட்டம் ஆகியவைகள் தீரும்.

## 30. சுவாச குடோரி மாத்திரை

*சரக்கு*

வெள்ளெருக்கம் பூ

மிளகு

*செய்முறை*

இவற்றைச் சரி நிறையாகக் கல்வத்திட்டு நன்றாக அரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து, நிழலில் உலர்த்தவும்.

*பயன்பாடு*

ஒன்று அல்லது இரண்டு மாத்திரையைத் தாளிசப்பத்திரிக் குடிநீரில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

சுவாசம், இருமல், காசம் தீரும்.

## 31. நீர்க் கோவை மாத்திரை

*சரக்கு*

கப்பு மஞ்சள் -1 பங்கு, கஸ்தூரி மஞ்சள் -1 பங்கு, பொரிகாரம், சாம்பிராணி, மிளகு, சுக்கு, சாதிக்காய் இவ்வைந்தும் வகைக்கு $^1/_2$ பங்கு. ஓமம், இலவங்கம், கற்பூரம் இம்மூன்றும் வகைக்கு $^1/_4$ பங்கு.

*செய்முறை*

இவைகளைப் பொடித்துக் கல்வத்திட்டுப் பழச்சாற்றால் இரண்டு சாமம் நன்றாக அரைத்து, இலந்தை விதை அளவு மாத்திரைகள் செய்து, நிழலில் உலர்த்தவும்.

*பயன்பாடு*

தாய்ப்பாலில் இழைத்துத் தலையில் பற்றிடவும்.

*தீரும் நோய்*

தலைவலி, சலதோடம் நீங்கும்.

## 32. சிந்தாமணி மாத்திரை

*சரக்கு*

வெள்ளிப் பற்பம்
தங்கப் பற்பம்
சங்குப் பற்பம்
முத்துப் பற்பம்

தாமிரப் பற்பம்

தாளகப் பற்பம்

பவழப் பற்பம்

மனோசிலை பற்பம்

அப்பிரகப் பறபம்

அயப் பற்பம்

வச்சிரப் பற்பம்

கந்தகப் பற்பம்

*செய்முறை*

இவற்றைச் சமம் எடுத்துக் கொடிவேலிக் குடிநீர், எருக்கம்பால், கள்ளிப்பால், காட்டுக் கருவைச் சாறு ஆகியவற்றால் தனித்தனியே 21 நாள் அரைக்கவும். சிவந்த நிறத்தில் உள்ள இதைப் பலகரையில் அடைத்து மூடி, சந்து வாய்க்கு எருக்கம்பாலை விட்டு வெங்காரத்தை அரைத்துப் பூசிக் காயவைத்து உலை மூடியில் வைத்து மேலோடு மூடி, 7 சீலைமண் செய்து காயவைத்து. 1000 வறட்டியில் புடமிடவும். ஆறியபின் பலகரையுடன் எடுத்துக் கல்வத்தில் இட்டு அரைக்க வேண்டும். இந்த எடைக்கு இரசப் பற்பம் சம அளவு சேர்க்கவும். இவை அனைத்தும் சேர்ந்த எடைக்கு வைக்கிரந்தப்பற்பம் $^{1}/_{4}$ பங்கு சேர்த்து. முருங்கை வேர்க் குடிநீரில் 7 முறை பாவனை செய்யவும். பின் பற்பங்களை முருங்கை வேர்க் குடிநீரில் போட்டு வெயிலில் காய வைத்து, காய்ந்த பிறகு மீண்டும் முருங்கை வேர்க் குடிநீர் ஊற்றிக் காயவைத்துக் கொள்ள வேண்டும்.

இதனுடன் எள், வெங்காரம், நாபி, மிளகு, சுக்கு, திப்பிலி, சாதிக்காய், இலவங்கம், கடுக்காய் ஆகியவற்றை 1/4 பங்கு சேர்த்துப் பொடித்து, மாதுளம் பழச்சாறு, இஞ்சிச்சாறு ஆகியவற்றால் அரைத்து 1 பலம் அளவிற்கு உருட்டி நிழலில் உலர்த்தி எடுத்துக்கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்கள்*

சுவாசகாசம், சயம், தோடம், சன்னி, பாதசுரம், குன்மம் நீங்கும். நீண்ட நாள் வாழச் செய்யும்.

## 33. கஸ்தூரி மாத்திரை

*சரக்கு*

| | |
|---|---|
| கஸ்தூரி | 1 பங்கு |
| குங்குமப்பூ | 2 " |
| கோரோசனை | 3 " |

*செய்முறை*

இவற்றைக் கல்வத்தில் இட்டுத் தாய்ப்பால் விட்டு அரைத்துக் குன்றிமணி அளவு மாத்திரை செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

சன்னிதோடம், பித்தச் சுரம், சேத்துமச் சுரம், வாய்வு.

## 34. வாதராட்சசம்

*சரக்கு*

| | |
|---|---|
| கந்தகம் | 7 பலம் |
| இரசம், அயம் வகைக்கு | 5 " |
| நாபி, சாதிலிங்கம், | |
| வெங்காரம் வகைக்கு | 2 " |
| மனோசிலை, காந்தம் வகைக்கு | 1 " |

*செய்முறை*

இவற்றை முறைப்படி சுத்தி செய்து கல்வத்தில் இட்டுக் கொடிவேலிக் குடிநீர் விட்டு ஒருநாள் அரைத்து, உளுந்தளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி எடுத்துக்கொள்ள வேண்டும்.

*பயன்பாடு*

இஞ்சிச் சாறு, அரத்தைக் குடிநீர் ஆகிய அனுபானங்களில் 15 நாள் கொள்ளவும்.

*தீரும் நோய்*

வாய்வு, சேத்துமம், சுரம், சன்னி முதலியன தீரும்.

## 35. பிரதாப மார்த்தாண்ட மாத்திரை

*சரக்கு*

வெங்காரம்

சுத்தித்த நேர்வாளம்

நாபி

வகைக்கு 1 பங்கு.

சாதிலிங்கம் 2 பங்கு

*செய்முறை*

இவற்றைச் சுத்தித்துக் கல்வத்தில் இட்டுக் கறிவேப்பிலைச்சாறு, கையாந்தகரைச்சாறு இவற்றால் தனித்தனியாக அரைத்துப் பயறளவு மாத்திரை செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

*பயன்பாடு*

இம் மாத்திரையைக் குறிப்பிட்ட அனுபானத்தில் உண்ண, குறிப்பிட்ட நோய் குணமாகும் என்று சித்த மருத்துவ நூல்கள் குறிப்பிடுகின்றன. அதனைப் பட்டியலில் காணலாம்:

| அனுபானம் | தீரும் நோய் |
|---|---|
| வெல்லச்சாறு | தாபச்சுரம் |
| இஞ்சிச்சாறு | சீதச்சுரம் |
| நொச்சிச்சாறு | வெப்பு |
| சீரகக் குடிநீர் | அத்தி வெப்பம் |
| சர்க்கரை | ஆமிலப் பித்தம் |
| நெய், சர்க்கரை | பாண்டு, சயம் |
| திப்பிலித்தூள், தேன் | சுவாசகாசம் |
| மிளகு, ஆமணக்கு ஈர்க்குக் குடிநீர் | சூசிகாவாய்வு |
| திப்பிலித்தூள், நெய் | சயகாசம் |

## 36. நீலகண்ட இரசம்

*சரக்கு*

| | |
|---|---|
| சுத்தி செய்த பாதரசம் | 1 பலம் |
| சுத்தி செய்த கந்தகம் | 1 " |
| லோகபற்பம் | 1 " |
| செம்புப் பற்பம் | 1 " |
| சுத்தி செய்த நாபி | 1 " |
| இலவங்கப்பத்திரி | 1 " |
| ஏலக்காய் | 1 " |
| சித்திரமூலம் | 1 " |
| வாய்விளங்கம் | 1 " |
| அரேணுகம் | 1 " |
| கோரைக் கிழங்கு | 1 " |
| கண்டத்திப்பிலி | 1 " |
| சுக்கு | 1 " |
| நெல்லிமுள்ளி | 1 " |
| கடுக்காய்த் தோல் | 1 " |
| தான்றிக்காய்த் தோல் | 1 " |
| சுத்திசெய்த நேர்வாளம் | 1 " |
| மிளகு | 1 " |
| சிறுமூலம் | 1 " |

*செய்முறை*

முதலில் கடைச் சரக்குகளை எடுத்து இடித்துச் சூரணம் செய்து துணியால் நன்கு சலித்துக் கொள்ளவும். பின்பு ஒரு கல்வத்தில் இரசத்தையும், கந்தகத்தையும் போட்டு நன்றாகக் கறுப்பாகும் வரை அரைத்துப் பின்பு பற்ப வகைகளையும் சூரணத்தையும் ஒன்று கலந்து தண்ணீர் விட்டு நன்றாக அரைத்துக் கடலைப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்யவும். இதை நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

திப்பிலித்தூளுடன் தேன் கூட்டி, ஒரு மாத்திரையைக் காலையில் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

காசம், சயம் சுவாசகாசம் முதலானவை தீரும்.

## 37. மகாராச மிருகாங்கம்

*சரக்கு*

| | |
|---|---|
| வச்சிரம் | 1 பங்கு |
| அரிதாரம் | 1 " |
| இரசம் | 3 " |
| தங்கம் | 6 " |
| கோமேதகம் | 4 " |
| முத்து | 7 " |

நீலமணி, காந்தம், அயம், அப்பிரகம், புட்பராகம், பவளம், மரகதம், இராச வர்த்தம், வைக்கிராந்தம், கெருடபட்சி, ஏமமாட்சிகம் ஆகியவை வகைக்கு 2 பங்கு.

*செய்முறை*

இவற்றைக் கல்வத்தில் இட்டு எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து உருண்டை செய்து துணியில் கட்டி, ஒரு அகலப் பானையில் காடி விட்டு, அக்காடியில் மூழ்கும்படி இட்டு ஒரு சாமம் எரித்து இறக்கி உலர்த்தவும். பின் அதை ஒரு பொட்டணமாகக் கட்டி, ஒரு பானையில் இரண்டு விரலளவு உப்பு போட்டு, அதன் மேல் வைத்து மேலும் சிறிது உப்பு போட்டு உலைமூடியினால் அப்பானையை மூடி, 7 சீலைமண் செய்து அடுப்பில் வைத்து ஒரு நாள் எரித்து இறக்கி ஆறிய பின் மருந்தை மட்டும் எடுத்து எலுமிச்சம் பழச் சாற்றால் 1 வராகன் எடை அளவு உருட்டி, நிழலில் உலர்த்திக் கொள்ள வேண்டும்.

*தீரும் நோய்*

காசம், சுவாசம், சயம், சன்னி பாதம், தோடம்.

# சிறு மருந்து வகைகள்

## 1. புகைச்சல், இருமல் மருந்து

*சரக்கும் செய்முறையும்*

முசுமுசுக்கை இலையை ஒரு குத்தளவு எடுத்து ஒரு பாத்திரத்தில் போட்டு அவித்து, அத்துடன் 10 மிளகையும் சேர்த்து நன்றாக அரைத்து, எருமை வெண்ணெய் ஒரு எலுமிச்சைஅளவு எடுத்து அதனுடன் மத்தித்து, சாதத்துடன் கலந்து சாப்பிடவும்.

*தீரும் நோய்*

புகைச்சல், இருமல் தீரும்.

## 2. ஈளை, இருமலுக்குக் கையாந்தகரை மருந்து

*சரக்கும் செய்முறையும்*

கையாந்தகரையைக் கொண்டு வந்து நன்றாக ஆய்ந்து கல்லுரலில் இட்டு இடித்துப் பிழிந்த சாறு 4 படி.

சுக்கு, மிளகு, இந்துப்பு, திப்பிலி, கடுகு, நெல்லிமுள்ளி, சடாமாஞ்சில், தான்றிக்காய்த் தோல், கண்டங்கத்தரி வேர், கற்கடகசிங்கி, தேவதாரம், சிறுதேக்கு.

இச்சரக்குகளை வகைக்கு $1\,{}^{1}/_{4}$ வராகன் எடை வீதம் எடுத்து மேற்படி சாறு விட்டு அம்மியில் இட்டு அரைத்து அடுப்பின் மேலேற்றி எரித்து அது இறுகிய பதமான பின் இறக்கவும்.

*தீரும் நோய்*

காலை வேளையில் சாப்பிட ஈளை, இருமல் முதலிய நோய்கள் தீரும்.

## 3. முடக்கொத்தான் மருந்து

*சரக்கு*

| | |
|---|---|
| முடக்கொத்தான் சாறு | ${}^{1}/_{2}$ படி |
| வெள்ளைப் பூண்டின் பல் | 5 எண்ணிக்கையில் |

*பயன்பாடு*

இவைகளை அரைத்துக் குழப்பித் தினம் காலை வேளையில், 3 நாளைக்குக் குடிக்கவும்.

*தீரும் நோய்*

இருமல், ஈளை, இரைப்பு முதலிய நோய்கள் தீரும்.

## 4. ஆடுதீண்டாப்பாளை மருந்து

*சரக்கும் செய்முறையும்*

ஆடுதீண்டாப் பாளையைச் சமூலமாகக் கொண்டு வந்து அதை அம்மியின் மேல் வைத்து எலுமிச்சங்காய் அளவு அரைத்து, வெள்ளாட்டுப் பாலுடன் குழப்பி, மூன்று நாளைக்குக் காலை வேளையில் மாத்திரமே குடித்துவரவும்.

*தீரும் நோய்*

எலிக்கடி, இரைப்பு முதலிய நோய்கள் தீரும்.

*பத்தியம்*

உப்பு, புளிப்பு முதலான சுவையுள்ள பதார்த்தங்களைத் தள்ளுவதுடன் மேலும் 3 நாளைக்கு மறு பத்தியம் பிடிக்க வேண்டும். வேண்டிய அளவு பசுவின் பாலைச் சேர்த்துக் கொள்ளவும்.

## 5. இலைக்கள்ளி வேர்ப்பட்டை மருந்து

இலைக்கள்ளி வேர்ப்பட்டையைக் கோழி முட்டையின் வெள்ளைக்கருவை விட்டரைத்துச் சட்டியில் பொரித்துச் சாப்பிட நீர்க்கோவை தீரும்.

## 6. இருமலுக்கு மருந்து

*சரக்கு*

பனை வெல்லம் ஒரு சிறங்கை

| | | |
|---|---|---|
| மிளகு | 1 வராகன் எடை | |
| திப்பிலி | 1 | " |
| சுக்கு | 1 | " |

*செய்முறை*

இவைகளை ஒன்று சேர்த்து இடித்துப் பிசைந்து கொள்ளவும். ஒரு சிறங்கை அரிசி எடுத்து ஊறவைத்து இடித்துச் சிறுசிறு குகைகளாகச் செய்து,அக்குகைக்குள் வைத்து உருட்டவும். ஒரு சட்டியில் பசுவின் நெய் விட்டு அடுப்பின் மேலேற்றி அது கொதிக்கையில் மேலே சொன்ன குகைகளைப் போடவும். அவை வேகும் போது 4 கோழி முட்டைகளின் வெள்ளைக் கருவை மாத்திரம் அதனுடன் போட்டு வறுத்துக் கிளறி இறக்கிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

இரவில் நோயாளி சாப்பிட்டபின், இம்மருந்தைத் தின்று நித்திரைக்குச் செல்லவும்.

*தீரும் நோய்*

இருமல் தீரும்.

## 7. கடுகுரோகணி மருந்துகள்

*1. சரக்கு*

| | |
|---|---|
| கடுகுரோகணி | $^1/_8$ வராகன் எடை |
| செவ்வாழைப் பழம் | 1 |
| தேத்தான்கொட்டை | $^1/_4$ பலம் |

*பயன்பாடு*

இவைகளை ஒன்று கலந்து 3 நாட்களுக்குச் சாப்பிடவும்.

*2. சரக்கு*

| | |
|---|---|
| தூதுவளைச் சாறு | 1 பலம் |
| தேன் | 1 " |
| கடுகுரோகணிச் சூரணம் | $^1/_8$ வராகன் எடை |

*பயன்பாடு*

3 நாட்கள் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

சய நோய் தீரும்.

*குறிப்பு*

இம்மருந்துகளைச் சேர்த்தால் மலம் கழியும்.

## 8. இருமலுக்குச் சிறு மருந்துகள்

❖ தூதுவளை சமூலத்தை வெயிலில் உலர்த்திப் பொடித்து நெய்யில் உண்ண, இருமல் தீரும்.

❖ இண்டிலை, முருக்கிலை, இசங்குக் கிழங்கு, தூதுவளை, சுக்கு ஆகியவற்றைச் சம அளவு இடித்துச் சூரணித்து வெந்நீரில் உண்ண, இருமல் தீரும்.

❖ கண்டங்கத்தரி விதையைப் பொடி செய்து புகை பிடிக்க, இருமல் தீரும்.

❖ நெல்லிமுள்ளி, திப்பிலி, நெற்பொரி, சுக்கு ஆகியவற்றில் சமஅளவு எடுத்துப் பொடி செய்து, தேன் அல்லது நெய்யில் உண்ண இருமல், ஈளை தீரும்.

## 9. செவ்வகத்தி மருந்து

செவ்வகத்திப் பூவைக் கல்லுரலில் இடித்துச் சாறு பிழிந்து, திப்பிலியைத் தூள் செய்து அதனுடன் கலக்கி, 3 நாளைக்கு அதிகாலையில் உட்கொள்ள, இருமல் குணமாகும்.

# கற்ப வகைகள்

## 1. தேற்றான் கற்பம்

*சரக்கும் செய்முறையும்*

தேற்றான் கொட்டைகளை வெயிலில் உலர்த்தவும். பின்பு அதன் மேலுள்ள தோலைச் சீவிக் கல்லுரலில் இட்டு இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

காலை நேரங்களில் வெருகடி அளவு நல்லெண்ணெயுடன் குழப்பிச் சாப்பிட, இருமல் தீரும்.

## 2. தேற்றான் கற்பம் (வேறு முறை)

*சரக்கும் செய்முறையும்*

தேற்றான் பட்டையை உலர்த்திக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்துகொண்டு, மூவிரல் அளவு எடுத்துத் தேன் விட்டுக் குழைத்துச் சாப்பிடவும். அல்லது

அழுகண்ணிச் சாறு, காராம் பசுவின் பால், பசுவின் நெய், தேன் இவைகளைச் சம அளவு எடுத்துக் குழைத்து ஒரு மண்டலம் (40 நாட்கள்) சாப்பிடவும். உடல் பலமடையும்.

## 3. நொச்சிக் கற்பம்

*சரக்கு*

| | |
|---|---|
| தேன் | $^1/_2$ சின்னபடி |
| நொச்சிச்சாறு | 1 மரக்கால் |

*செய்முறை*

இவ்விரண்டையும் ஒரு புதுப்பானையில் விட்டு நன்றாக மூடி பூமிக்குள் புதைத்து விடவும். 40 நாட்கள் சென்றபின் அதை எடுத்து, 1/2 பலமளவு தினந்தோறும் உட்கொள்ளவும். அல்லது நொச்சியின் வேரை எடுத்து உலர்த்திச் சூரணித்துக் கொண்டு, அதனுடன் பசுவின் நெய் சேர்த்து உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

உடம்பு தேறும். பலமும் உண்டாகும்.

## 4. தேவதாளிக் கற்பம்

- ❖ தேவதாளி இலையை அரைத்து உள்ளங்காலில் பூசிக் கொண்டு நடக்க விந்து கட்டும்.
- ❖ இதன் சமூலத்தை நன்றாக அரைத்து உடலில் பூசிக்கொண்டால் வெட்டு, குத்து காயங்கள் ஏற்படாது.
- ❖ இதன் சாற்றை உட்கொள்ள உடம்பு நன்றாக ஆகி, நிறமும் மாறும்.
- ❖ தேவதாளியைச் சமூலமாக எடுத்து நிழலில் உலர்த்தி இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும். இதனுடன் நல்லெண்ணெய் , சர்க்கரை ஆகியவைகளைக் கூட்டி உட்கொள்ள மூலநோய் தீரும்.

- ❖ வெல்லத்துடன் சாப்பிடக் குட்ட நோய் தீரும்.
- ❖ நெய்யுடன் குழைத்து உண்ணக் காது நோய்கள், பல்வலி முதலானவை தீரும்.

### 5. சுக்காதிக் கற்பம்

*சரக்கு*

சுக்கு

திப்பிலி

கடுக்காய்த் தோல்

*செய்முறை*

இம்மூன்றையும் சரி எடை எடுத்து இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். அதில் தண்ணீர் சிறிது விட்டு, அம்மியின் மேல் வைத்து நன்றாக அரைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

அவ்விழுதில் ஒரு கொட்டைப் பாக்களவு எடுத்துத் தேனில் குழைத்துச் சாப்பிடவும்.

*தீரும் நோய்*

இருமல் தீரும்.

## புகை வகைகள்

### 1. ஊமத்தைப் புகை

ஊமத்தைச் செடியைக் காய், பூ, வேர், இலை, தண்டு ஆகியவற்றுடன் பிடுங்கிவந்து, அதை நன்றாகக் காயப்போட்டு, கல்லுரலில் இட்டு இடித்துக் காகிதத்தில் சுருட்டிக் கொளுத்தி, அதன் புகையை பிடிக்கக் கபாலப்புற்று, இருமல், ஈளை, தலைவலி, மூக்கினின்று நீரொழுகல், சுரம், பீனிசம் முதலியன தீரும்.

### 2. எருக்கங்கோல் புகை

எருக்கஞ் செடியிலேயே உலர்ந்த குச்சிகளைக் கொண்டுவந்து, சிறுசிறு துண்டுகளாக்கி ஒரு சட்டியில் இட்டு நன்றாகக் கரியாகும்வரை வறுத்துக் கொள்ளவும். இதற்குச் சம அளவு புதிய கல் சுண்ணாம்பைக் கூட்டிச் சிறிது நீர்

சேர்த்து மைபோல் அரைத்துக் கொள்ளவும். இக்கற்கத்தை ஒரு முழ நீளம் உள்ளதும், ஒரு சாண் அகலம் உள்ளதுமான வெள்ளைத் துணியில் ஒரே சீராகத் தடவி நிழலில் உலர்த்திச் சுருட்டி ஒரு திரியாகத் திரித்துக் கொள்ளவும். பீனிச நோய் உள்ளவர்கள் இத்திரியைக் கொளுத்தி அணைத்து, இதனின்றெழும்பும் புகையை இரு நாசிகளிலும் காலை, மாலை இரு வேளையிலும் முகரவும். பீனிசங்கள் தீரும்.

### 3. குப்பைமேனிச்சாறு புகை

குப்பைமேனிச் சாறு பிழிந்து, அதிலொரு மெல்லிய வெள்ளைத் துணியை நனைத்து நன்றாகக் காயவைக்கவும். இதை ஒரு எருக்கங்குச்சியில் சுற்றி வேப்பெண்ணெயில் தோய்த்துக் கொளுத்தவும். அதனின்று புகை எழும்பும். அதை முகர்ந்து வரவும். பீனிச நோய் குணமாகும்.

### 4. கந்தகாதிப் புகை

கந்தகம், துருசு ஆகிய இரண்டையும் சம எடை எடுத்துப் பொடித்து ஒரு மெல்லிய துணியில் ஒரே சீராகப் பரப்பிச் சுருட்டி, அத்திரியை கொளுத்தவும். அதனின்று எழும்பும் புகையை மூக்கில் கொள்ளவும். நீர்ப் பீனிசங்கள் தீரும்.

### 5. நாகனந்திப் புகை

3 வராகன் எடை சுத்தியான சிறுகண் நாகத்தை ஒரு புதுச் சட்டியில் இட்டு அடுப்பின் மேலேற்றிடவும். அது உருகும் தருவாயில் 3 வராகன் எடை சுத்தியான பாதரசம் விட்டு, வெற்றிலைச்சாறும் ஒரு உழக்கு விடவும். இதைப் பின்பு அடுப்பிலிருந்து இறக்கி ஆறவைக்கவும். இதைத் தூள்செய்து, அதனுடன் சுத்தி செய்த மிருதார்சிங்கி, சுத்தியான இலிங்கம் ஆகிய இவ்விரண்டையும் வகைக்கு ஒரு வராகன் எடை எடுத்துக் கல்வத்தில் இட்டுப் பொடித்துக் கொள்ளவும். ஒரு மெல்லிய துணியைக் கையாந்தகரைச் சாற்றில் தோய்த்து, நிழலில் காயவைத்து 6 பாகங்களாகக் கிழித்து மேலே சொல்லிய தூளைச் சமமமாகப் பரப்பி 6 திரிகளாகச் சுருட்டவும். இத்திரிகளைக் குப்பைமேனிச் சாற்றில் நனைத்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும். இத்திரியைக் கொளுத்தி அதிலிருந்து எழும்பும் புகையை முகரவும். இவ்வாறாகத் தினம் காலையிலும் மாலையிலும் புகையை முகர்ந்து, 4 நாளைக்கு நிறுத்தவும். மறுபடியும் 3 நாளைக்கு மற்றொரு திரியைக் கொளுத்தவும். 15 நாளைக்கு வெந்நீரில் குளிக்கவும். பீனிசங்கள் தீரும்.

## 6. மஞ்சளாதிப் புகை

மஞ்சள், கடுகுரோகணி, வசம்பு ஆகியவற்றைச் சமம் எடுத்துத் தூள் செய்து, ஒரே சீராக ஒரு வெள்ளைத் துணியில் பரப்பித் திரியாகத் திரித்துக்கொள்ளவும். இதை ஒரு விளக்கில் கொளுத்திக்கொண்டு அதிலிருந்து எழும் புகையை முகரவும். மூக்கிலிருந்து இரத்தம் ஒழுகுதல், ஒற்றைத் தலைவலி ஆகியன தீரும்.

## 7. மருங்காரைப் புகை

மருங்காரைப் பழங்களைக் கொண்டுவந்து அதன் சாற்றில் ஒரு வெண்மையான துணியைத் தோய்த்து உலர்த்தவும். இவ்விதம் மூன்று தடவை செய்து அத்துணியைத் திரியாகச் செய்து கொளுத்தி அவித்து அதிலிருந்து எழும் புகையை நாசியில் பிடித்தால் கடுமையான தலைவலி, துர்நாற்றம், காலையிலும் மாலையிலும் தோன்றும் பீனிசம் முதலியன குணமாகும்.

## 8. இரசாதிப் புகை

*சரக்கு*

சுத்தம் செய்த பாதரசம்
சுத்தம் செய்த சாதிலிங்கம்
சுத்தம் செய்த குத்திருக்கம் (பூனைக்கண் குங்கிலியம்)
சுத்தம் செய்த கந்தகம்
மிருதார்சிங்கி
வெள்ளைப் பாடாணம்

*செய்முறை*

முதலில் இரசத்தையும் கந்தகத்தையும் கல்வத்தில் இட்டு நன்றாகக் கறுக்கும் வரை அரைத்துப் பின்பு மற்ற சரக்குகளை ஒவ்வொன்றாகப் போட்டு அரைத்துக் கொள்ளவும். இச்சூரணத்தை ஒரு பட்டுத்துணியில் பரப்பி, ஒரே சீராகச் சுருட்டிப் பசு நெய்யில் தோய்த்துக் கொளுத்தி அணைத்துவிடவும். இப்போது இதிலிருந்து எழும்பும் புகையை முகரவும். பீனிசம் குணமாகும்.

*பத்தியம்*

கோழிமுட்டை, பசுவின் பால், ஆமணக்கெண்ணெய், முருங்கையிலை, அத்திக்காய் ஆகியவற்றைக் கூட்டி வரவும்.

### 9. வெற்றிலைச்சாறு மிளகுப் புகை

*சரக்கும் செய்முறையும்*

வெற்றிலைச் சாற்றினால் ($^1/_4$ சேர்), மிளகு $^1/_2$ பலத்தை அம்மியில் நன்றாகக் குழம்பாகும்வரை அரைத்துக் கொள்ளவும். ஒரு வெண்மையான துணியை ஒரு சாண் அகலமும் ஒரு முழ நீளமும் உள்ளதாக எடுத்து மேற்சொன்ன குழம்பில் நன்றாக முழுகும்படி தோய்த்துக்கொள்ளவும். இதை மறுநாள் எடுத்து உலர்த்தவும். மறுபடியும் குறட்டைப் பழத்தைக் கொண்டுவந்து அதன் கண்ணைத் திறந்து அதன் சாற்றில் மேல் சொன்ன சீலையை இட்டுப் பத்து நாட்கள் வைக்கவும். பின்பு இதை உலர்த்திக் கொண்டு பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

தினந்தோறும் காலை, மாலை இரு வேளைகளிலும் மேற்படி துணியிலிருந்து திரிக்கப்பட்ட திரியைக் கொளுத்தி, அதினின்று எழும்பும் புகையை முகர்ந்து வரவும். பலவித பீனிசங்களும் தீரும். 10 நாள் உபயோகிக்கவும்.

## நசிய மருந்துகள்

### 1. திப்பிலியாதிப் பொட்டணம்

*சரக்கு*

திப்பிலி, முருங்கை விதை, வாய்விளங்கம், மிளகு.

*செய்முறை*

இந்நான்கு சரக்குகளையும் சமம் எடுத்து இடித்து ஒரு மெல்லிய துணியில் முடித்து அதை முகர்ந்துவரவும்.

*தீரும் நோய்*

இதனால் தலைபாரம், பீனிசம், நீர்ப்பாய்ச்சல் முதலியவைத் தீரும்.

### 2. மாங்கொட்டையாதிப் பற்றும் நசியமும்

மாங்கொட்டைப் பருப்பை அரைத்து ஒரு எலுமிச்சங்காய் அளவு எடுத்து உச்சந் தலையிலும் உள்ளங்கையிலும் அப்பிவைக்கவும். செவ்வலரிப் பூவை நசுக்கிப் பிழிந்து அதன் சாற்றைத் தினம் இருவேளை (காலை, மாலை) மூக்கில் நசியம் இடவும். 10 நாளைக்குச் செய்யவும். இரத்தம் நிற்கும்.

### 3. அருகம்புல் நசியம்

அறுகம்புல் சாற்றினால் சீந்தில் கொடியை அரைத்து, அதன் சாற்றை ஒரு பாத்திரத்தல் வைத்துக்கொண்டு, மூக்கில் தினம் காலையிலும், மாலையிலும் நசியம் இடவும். இவ்வாறு செய்துவர இரத்தம் உடனே நிற்கும்.

### 4. இஞ்சிச்சாறு நசியம்

இஞ்சித் துண்டைத் தாய்ப்பால் விட்டு நசுக்கித் துணியில் இட்டு, இரு நாசிகளிலும் தினம் இரு வேளை 3 துளிகள் வீதம் பிழியவும். ஒருத்தலைவலி, பீனிசங்கள் தீரும்.

### 5. எருக்கம்பழுப்பு நசியம்

எருக்கம் பழுப்பு மூன்றை எடுத்துக் கொண்டு, மிளகு 6 எண்ணிக்கையில் வைத்துச் சுருட்டி உமிக்காந்தலில் வேகும்படி செய்து எடுத்து நசுக்கிச் சாறு பிழிந்து, அதை எந்தப் புறத்தில் ஒரு தலைவலி உண்டோ அதற்கு எதிர்ப்புறத்து நாசியில் நசியம் செய்யவும். தினம் இருவேளை காலையிலும் மாலையிலும் 3 துளிகள் விடவும். வலிகள் தீரும்.

### 6. குங்குமாதி நசியம்

*சரக்கு*

குங்குமப்பூ
திப்பிலி
மிளகு
சுக்கு

இச்சரக்குகளை வகைக்கு 1 வராகன் எடை எடுத்து இடித்துச் சூரணிக்கவும்.

கையாந்தகரைச் சாறு
நொச்சில் சாறு
கழற்சிக்கொடிச் சாறு
சாறடைச் சாறு
குப்பைமேனிச் சாறு
ஆதண்டைச் சாறு
முசுமுசுக்கைச் சாறு

*செய்முறை*

இவைகள் வகைக்குக் கால்சேர் வீதம் எடுத்துச் சூரணவகைகளுடன் கல்வத்தில் இட்டு ஒவ்வொரு சாறாக விட்டு நன்றாக அரைக்கவும். அவ்விழுதை 11 உருண்டைகளாக உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். அவ்வுருண்டையில் ஒன்றை எடுத்து அதை மூன்றிலொரு பங்கு செய்து வெந்நீரில் கரைத்துக் காலை, மாலை இருவேளையிலும் மூன்று துளிகள் வீதம் மூக்கில் நசியம் செய்யவும்.

*தீரும் நோய்*

பீனிசங்கள் தீரும்.

## 7. குங்குமாதி நசியம் (வேறு முறை)

ஒரு தேங்காயை உடைத்துத் திருகி, அதனுடன் புளியங்கொட்டைத் தோல் 1/8 சேர் சேர்த்து மதிலொட்டி இலை, துரிசு இலை ஒரு குன்றியளவு எடுத்து, இந்நான்கையும் ஒன்றாகப் பிசறிக் கடும் வெயிலில் ஒரு பக்கமாகச் சாய்த்து வைத்தால் பால் வரும். அதைப் பிழிந்து வைத்துக்கொண்டு, தினம் காலை, மாலை 3 துளி வீதம் மூக்கிலிட்டு நசியம் செய்யவும். இவ்வாறு 7 நாள் செய்யச் சகல பீனிசங்களும் தீரும். காதிலிடக் காதடைப்புத் தீரும்.

## 8. குங்குமாதி நசியம் (வேறு முறை)

*சரக்கு*

சர்க்கரை

குங்குமப்பூ

சாதிக்காய்

மாதுளம்பூ

*செய்முறை*

இந் நான்கு சரக்குகளையும் இடித்து நெய்யுடன் கூட்டிப் பதமாக எரித்து மூக்கில் விடப் பீனிசங்கள் தீரும்.

### 9. குங்குமாதி நசியம் (வேறு முறை)

*சரக்கு*

| | |
|---|---|
| பசுவின் நெய் | $^1/_2$ படி |
| கஸ்தூரி | 2 பணவெடை |
| குங்குமப்பூ | 2 " |
| கோரோசனை | 3 வராகன் எடை |
| வாய்விளங்கம் | 3 " |

*செய்முறை*

இச்சரக்குகளைச் சுத்தமான கல்வத்தில் இட்டுப் பொடித்து, நெய்யில் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பதமாக எரித்து வடிக்கவும்.

இந்நெய்யை வேண்டும்போது வெந்நீரில் வைத்து உருக்கி நாசிகளில் 3 துளிகள் வீதம் நசியம் இடவும். நீர்ப்பாய்ச்சல் தீரும்.

### 10. சாறணை வேர் நசியம்

*சரக்கு*

சாறணை வேர், சர்க்கரை, இந்துப்பு, மிளகு

*செய்முறை*

இவைகளைச் சமமெடுத்து நன்றாக நசுக்கிப் பசுவின் நெய், தாய்ப்பால் இவ்விரண்டுடன் கூட்டித் துணியில் இட்டு மூக்கில் நசியம் செய்யவும்.

*தீரும் நோய்*

இதனால் நீர்க்கோவை, மூக்கடைப்பு, மூக்கில் அரிப்பு ஆகியவைகள் தீரும்.

### 11. சிறுகீரை நசியம்

சிறுகீரைச் சமூலத்தைத் தாய்ப்பால் விட்டு நசுக்கிப் பிழிந்த சாற்றை நசியமிடப் பீனிசம் தீரும்.

### 12. சுண்டையிலை நசியம்

*சரக்கு*

சுண்டையிலை, பொன்னாங்காணி, வெள்ளுள்ளி, சிறுகீரை வேர்.

*செய்முறை*

இந்நான்கையும் அம்மியில் வைத்துத் தாய்ப்பால் விட்டு நசுக்கி ஒரு மெல்லிய துணியில் இட்டு, இரு நாசிகளிலும் நசியம் செய்யவும்.

*தீரும் நோய்*

தினம் இருவேளை வீதம் 10 நாளைக்குச் செய்தால், இரத்தம் விழுதல் நிற்கும்.

## 13. வெங்காய நசியம்

*சரக்கு*

| | |
|---|---|
| ஒற்றையாக இருக்கும் வெங்காயம் | ஒன்று |
| வெற்றிலைக் காம்பு | ஒரு சிறங்கை |
| மிளகு | மூன்று |

*செய்முறை*

இவைகளை ஒன்று கூட்டி நசுக்கி மூக்கில் நசியம் செய்யவும். பின்பு வெள்ளாட்டின் புழுக்கை (காய்ந்தது) ஒன்றை ஒரு ஊசியில் கோர்த்து, விளக்கில் கொளுத்தி அதிலிருந்து எழும்பும் புகையைத் தினம் காலை, மாலை இரு வேளை மூக்கினால் கொள்ளவும். இதனாலும் இரத்தம் நில்லாவிடில், மூன்று நாட்கள் சென்றபின் ஊமத்தஞ் சாற்றை நாசியிலிடவும். இரத்தம் நிற்கும்.

## 14. வெள்ளாட்டுப் பால் நசியம்

வெள்ளாட்டுப் பாலும், தேனும், சர்க்கரையும் சமனாகக் கலந்துகொண்டு, காலையிலும் மாலையிலும் நசியமிடவும். மூக்கிலிருந்து இரத்தம் விழுந்தால் அது தீரும்.

## 15. கடுகுரோகணித் தேன்

*சரக்கு*

கடுகுரோகணி
சுக்கு
திப்பிலி
வெளிச்சைப்பிசின்

கடுகு

வசம்பு

*செய்முறை*

இவைகளை வகை ஒன்றுக்கு 1 வராகன் எடை எடுத்துப் பொடித்து, 1 ஆழாக்குத் தேனில் கலந்து, அடுப்பின் மேலேற்றிப் பதமாகக் காய்ச்சி வடித்துக்கொண்டு, இரண்டு நாளைக்கொரு தடவை இரு நாசிகளிலும் 3 துளிகள் வீதம் காலையிலும் மாலையிலும் நசியம் செய்ய, மண்டை வலி, மூக்குநீர்ப் பாய்ச்சல், பீனிசங்கள் தீரும்.

## உருண்டை வகைகள்

### 1. தூதுவளையாதி உருண்டை

*சரக்கு*

தூதுவளை இலை

திப்பிலி

ஆடாதோடை இலை

கண்டங்கத்தரி இலை

துளசி இலை

*செய்முறை*

இவைகளைச் சம எடை எடுத்துக் கொள்ளவும். ஒரு சட்டியில் அரைவாசி நீர் விட்டு அதன் வாயை ஒரு வெள்ளைத் துணியினால் வேடு கட்டி, அதன்மேல் மேற்படி இலைகளை வைத்து மேலே ஒரு பாத்திரத்தினால் மூடிப் பிட்டவியலாக அவிக்கவும். பின்பு அந்தப் பச்சிலைகளைப் பிழிந்து கொள்ளவும்.

சுக்கு

கடுக்காய்த்தோல்

திப்பிலி

மிளகு

இந்நான்கு சரக்குகளையும் பொன் வறுவலாக வறுத்துச் சூரணம் செய்து, மேற்படி சாறு விட்டு அம்மியின் மேல் வைத்து மை போல் அரைத்து உருண்டை செய்துகொள்ளவும்.

*பயன்பாடு*

பாக்களவு எடுத்துக் கொண்டு நெற்பொரி மாவில் புரட்டி வாயில் அடக்கக் கபம் முறியும். அல்லது தேனில் ஒரு உருண்டையைக் குழைத்துச் சாப்பிடக் கபம் தீரும்.

## 2. தூதுவளம் பழ உருண்டை

**சரக்கு**

தூதுவளம் பழ விதை

அதன் மேல் தோல் (பொரித்தது)

சீரகம்

மிளகு

திப்பிலி

கிராம்பு

*செய்முறை*

இச் சரக்குகளை வகை ஒன்றுக்கு 1 வராகன் எடை வீதம் எடுத்துக் கொள்ளவும்.

சீவிய தேற்றான் கொட்டை 4 வராகன் எடையும் எடுத்து எல்லாவற்றையும் ஒரு சட்டியில் இட்டுப் பொன் வறுவலாக வறுத்துக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்து கொள்ளவும். பின்பு வேண்டிய அளவு சுத்தத் தேனை விட்டுப் பிசைந்து, தேற்றான் கொட்டை அளவு உள்ள உருண்டைகளாகச் செய்து கொள்ளவும்.

*தீரும் நோய்*

தினம் ஒரு உருண்டை வீதம் வாயில் அடக்கிக் கொண்டு, உமிழ் நீரை உட்கொள்ள இரைப்பு, இருமல் முதலியவை தீரும்.

## 3. சாதிலிங்காதி உருண்டை

*சரக்கு*

சுத்தி செய்த சாதிலிங்கம்

சுத்தி செய்த கந்தகம்

சுத்தி செய்த பாதரசம்

சுத்தி செய்த நாபி
சுத்தி செய்த வெள்ளித்தூள்
பொரித்த வெங்காரம்
சுக்கு
திப்பிலி
மிளகு
அபினி

**செய்முறை**

இவைகளை வகைக்கு ஒரு வராகன் எடை எடுத்துக் கல்வத்தில் இட்டு முதலில் பாதரசத்தையும் கந்தகத்தையும் நன்றாகக் கறுப்பாகும்வரை அரைத்துத் தூள் செய்து, மற்ற சரக்குகளையும் போட்டு நொச்சிச்சாறு, துளசிச்சாறு, கரிசலாங்கண்ணிச்சாறு, இவைகளினால் தனித்தனியே 3 சாமம் அரைத்து மிளகு அளவு உருண்டைகள் செய்து நிழலில் உலர்த்தவும்.

*பயன்பாடு*

இதை வேளைக்கு ஒரு உருண்டை வீதம் உட்கொள்ளக் காசம், இரைப்பு, இருமல் முதலியவைகள் தீரும்.

**4. பாதரசாதி உருண்டை**

*சரக்கு*

பாதரசம்
ஏலக்காய்
சுத்தி செய்த கந்தகம்
திப்பிலிமூலம்
கண்டத் திப்பிலி
சுத்தி செய்த நாபி
காட்டுமிளகு
சுத்தி செய்த இரும்புத்தூள்
செங்கழுநீர்க் கிழங்கு

கொடி வேலிவேர்

பெரிய லவங்கப்பட்டை

கடுக்காய்த் தோல்

கோஷ்டம்

நெல்லி வற்றல்

தாமிரப் பற்பம்

தான்றிக் காய்த் தோல்

சிறுநாகப்பூ

கிராம்பு

பெருங்கோரைக் கிழங்கு

தாளிசப் பத்திரி

*செய்முறை*

இவைகளைச் சம எடையாக எடுத்துக் கொள்ளவும். முதலில் பாதரசத்தையும் கந்தகத்தையும் கல்வத்திலிட்டு நன்றாகக் கறுப்பாகும் வரை அரைத்துக் கொள்ளவும். பின்பு உலோகத் தூள்களையும் போட்டு அரைக்கவும். கடைச் சரக்குகளை வெயிலில் உலர்த்திக் கல்லுரலில் இட்டுச் சூரணித்து உலோகங்களுடன் கூட்டி, எலுமிச்சம் பழச்சாறு விட்டு நன்றாக ஒரு நாள் முழுதும் அரைத்து, கடலை அளவு உருண்டைகளாகச் செய்து கொள்ளவும். நிழலில் உலர்த்திக் கொண்டு தக்க அனுபானங்களில் கொடுக்கவும்.

*தீரும் நோய்*

காசம், சுவாசம், சயம், பிரமேகம், மகோதரம், பாண்டு, சூலை, மூத்திரக் கிரிச்சிரம், அரோசகம், கிராணி, மூடகர்ப்பம் (கருப்பையிலிருந்து சிசு வெளிவராமல் சிக்கிக் கொள்ளுதல்), கிருமிகள், பைத்தியம், குன்மம், வாத, பித்த, கப நோய்கள் எல்லாம் தீரும்.

## வடக வகைகள்

### 1. தாளிசப் பத்திரி வடகம்

*சரக்கு*

தாளிசப்பத்திரி
சுக்கு
செவ்வியம்

இவைகள் வகைக்கு 2 பலம்.

கடுக்காய்
ஏலக்காய்
நெல்லிக்காய்
தான்றிக்காய்
மிளகு
திப்பிலி மூலம்
சிறுநாகப்பூ
பச்சிலை

*செய்முறை*

இவைகள் வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துச் சூரணித்துக் கொள்ளவும். வெல்லம் 110 பலத்தைத் தண்ணீர் விட்டுக் கரைத்து வடிகட்டிக் கொண்டு, அடுப்பின் மேலேற்றிப் பாகாக்கிக்கொண்டு, புளியம் புறணி சுட்ட சாம்பல் 10 பலம் போட்டு, பாகு திரளும் பக்குவத்தில் முன்னால் சித்தமாக்கி வைக்கப்பட்டிருக்கும் சரக்குகளின் தூளையும் போட்டுக் கிண்டி வரவும். கடிப்பக்குவமான பதத்தில் இதை இறக்கி வைத்துக்கொண்டு, 3 காசெடை அளவு வடகமாகப் பிடித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினந்தோறும் ஒரு வடகம் வீதம் காலையில் கொள்ளவும்.

*தீரும் நோய்*

சுவாசம், பாண்டு, காசம், காமாலை, மேல் மூச்சு, மந்தாக்கினி, வெப்புப்பாவை, மருந்தீடு முதலியவைகள் தீரும்.

## 2. தாளிசப்பத்திரி வடகம் (வேறு முறை)

*சரக்கு*

தாளிசப் பத்திரி
செவ்வியம்
மிளகு

இவைகள் வகைக்கு ஒரு பலம்.

திப்பிலி மூலம்
திப்பிலி

இவைகள் வகைக்கு 2 பலம்.

சுக்கு 3 பலம்
சிறுநாகப்பூ
ஏலக்காய்
விலாமிச்சைவேர்
இலவங்கப்பட்டை
இலவங்கப்பத்திரி

இவைகள் வகையொன்றுக்கு $^1/_4$ பலம்.

*செய்முறை*

இச்சரக்குகளைக் கல்லுரலில் இடித்துத் தூள் செய்து கொண்டு, மொத்த நிறைக்கு இரட்டிப்பு வெல்லத்தை எடுத்துப் பாகாக்கிக்கொண்டுக் கிளறி அதைக் கழற்சிக்காயளவு வடகங்களாகச் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் ஒரு வடகம் வீதம் உட்கொண்டு வரவும்.

*தீரும் நோய்*

வாதம், பித்தம், அரோசகம், கபச்சுரம், சயம், காசம், குன்மம், வீக்கம், மகோதரம், கிராணி முதலியவை தீரும்.

### 3. தாளிசப்பத்திரி வடகம் (வேறு முறை)

*சரக்கு*

தாளிசப்பத்திரி

சிறுநாகப்பூ

கூகைநீறு

கிராம்பு

சித்திரமூலம்

இவைகள் வகை ஒன்றுக்கு ஒரு பலம்.

மிளகு, திப்பிலிமூலம் இரண்டும் வகைக்கு 2 பலம்.

சுக்கு 3 பலம்.

*செய்முறை*

இவைகளை எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் இடித்து வஸ்திரகாயம் செய்து கொள்ளவும். இதில் சிறிது பசுநெய்யை விட்டுப் பிசறிக்கொண்டு, ஒரு சட்டியில் பசுவின் பாலை விட்டு வேடுகட்டி, அதன் மேல் முன்சொன்ன தூளை இட்டுச் சர்க்கரை 3 சேரும் போட்டுக் கலந்து, அடுப்பின் மேலேற்றிப் பிட்டாகச் சுடவும். பின்பு இது ஆறியவுடன் தேன் விட்டுப் பிசைந்து கொள்ளவும்.

*பயன்பாடு*

கழற்சிக்காய் அளவெடுத்துத் தக்க அனுபானத்தில் சாப்பிடவும்,

*தீரும் நோய்*

சுரம், தாபம், மார்வலி, ஈளை, இருமல், எலும்புருக்கி, பெரும்பாடு, சத்தி, குன்மம், அரோசகம், கிராணி, அதிசாரம், பாண்டு, அசீரணம் முதலிய நோய்கள் தீரும்.

### 4. சாறணையாதி வடகம்

*சரக்கு*

சாறணை வேர்

கொடிவேலி வேர்

மிளகு

புளியம்புறணி சுட்ட சாம்பல்

சுக்கு
சீரகம்
தாளிசப்பத்திரி
கண்டங்கத்தரி வேர்
திப்பிலி
ஏலக்காய்
பச்சிலை
கிராம்பு

*செய்முறை*

இச்சரக்குகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துக் கல்லுரலில் இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும். 60 பலம் வெல்லத்தைத் தூளாக்கி வேண்டிய அளவு நீர் விட்டு அடுப்பின் மேலேற்றிப் பாகாக்கி, அதில் முன் சொன்ன சூரணத்தைப் போட்டுக் கிளறி, சூடாறும் முன் இந்த இலேகியத்தைப் பாக்கு அளவுள்ள வடகங்களாகச் செய்து கொள்ளவும்.

*பயன்பாடு*

அதிகாலை வேளையில் ஒரு வடகத்தைத் தேனில் குழைத்துச் சாப்பிடவும். இவ்வாறு 40 நாளைக்கு உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இருமல், ஈளை முதலான நோய்கள் தீரும்.

## மெழுகு வகைகள்

### 1. கவுசிகர் சௌபாக்கியக் குழம்பு என்னும் மெழுகு

***சரக்கு***

கடுக்காய்
பொரித்த பெருங்காயம்
மனோசிலை
கடுகுரோகணி
கடுகு

பொரித்த வெங்காரம்

திப்பிலி

நாபி

இந்துப்பு

அரிதாரம்

சூதம்

சீரகம்

இவைகள் வகைக்கு வராகன் எடை 1.

வாளம் வராகன் எடை 12

*செய்முறை*

முதலில் வாளத்தைக் கிரமப்படி சுத்தி செய்து, இளஞ்சூட்டில் வெதுப்பி வைத்துக்கொள்ளவும். மற்ற பன்னிரண்டு சரக்குகளில் சுத்தி செய்ய வேண்டியவற்றைச் சுத்தி செய்து நன்கு இடித்துச் சூரணம் செய்து ஒருமிக்கக் கலக்கவும். அவற்றைக் கல்வத்தில் போட்டு உத்தாமணி இலைச்சாறு விட்டு ஒரு நாள் கை ஓயாமல் அரைத்து மெழுகு பதமாக இருக்கும்போது, ஐந்து வராகன் எடை தென்னங் குடுக்கைக் கரியையும் ஐந்து வராகன் எடை பனங்கருப்பட்டியையும் சேர்த்துத் தேங்காய்ப்பால் விட்டு மெழுகு பதமாக அரைத்து வழித்து வைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

தினம் ஒரு வேளை காலை நேரத்தில் 2 குன்றி எடை கொடுக்க 5-6 முறை பேதியாகும். உடல் வன்மைக்கு ஏற்றவாறு அளவை அதிகப் படுத்தவும். பேதி அதிகமாயின் அளவைக் குறைத்துக் கொடுக்க வேண்டும். இது பேதியாகும் மெழுகு ஆதலால் 3 தினத்திற்கு மேல் கொடுக்கக் கூடாது. தேகம் துர்ப்பலமாய் இருப்பின் ஒரு நாள் விட்டு ஒரு நாள் 2 முறை பேதியாகும்படி குறைந்த அளவில் கொடுத்து வருக. இப்படி 3 முறை கொடுப்பது நலம்.

*தீரும் நோய்*

அசாத்தியம் என்று கைவிட்ட காலத்தில் எந்த நோயாய் இருந்தாலும் இந்த மெழுகை மூன்று நாள் கொடுத்து, இரண்டொரு நாள் கழிந்தபின் நோய்க்கேற்ற எந்த மருந்தைக் கொடுத்தாலும் வசப்படும். இதை மருத்துவர்கள் கவனத்தில் வைக்க வேண்டும். இந்த மெழுகை எந்த அனுபானத்தில் (துணை மருந்து)

கொடுத்தால் என்ன நோய் குணமாகும் என்று சித்த மருத்துவ நூல்கள் விளக்கியுள்ளன. அவை பின்வருமாறு:

- சத்தி தோடங்களான நாவில் உண்டாகும் வெள்ளை அக்கரம், கறுத்த அக்கரம், முன்னெழுந்தோடம் முதலியவற்றிற்கு $1^1/_2$ குன்றி எடை மெழுகை நாவில் தேய்த்து வெந்நீர் அருந்தக் கொடுக்கவும்.
- சந்தி சுரம், குளிர் சுரம் முதலியவற்றிற்கு வெந்நீர், கடுக்காய்க் குடிநீர் சுக்குக் குடிநீர், சீரகக் குடிநீர், ஏலம், மிளகுக் குடிநீர் ஆகியவற்றில் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு அனுபானம் செய்து கொடுக்கவும்.
- வயிற்று வலி, வயிற்று உப்புசம் முதலியவற்றிற்குக் கொன்றைக் கொழுந்தும் கடுக்காய்ப் பொடியும் கூட்டி அரைத்துச் சிற்றாமணக்கெண்ணெயில் கலக்கி அதில் இந்த மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- இருமல், உளைமாந்தை, வாந்தி முதலியவற்றிற்கு ஊசல் பட்டையை அரைத்து மோரில் கலக்கி அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- கக்கல், இருமல் முதலியவற்றிற்குச் சிற்றாமணக்கெண்ணெயில் தாய்ப்பால் கூட்டிக் கலக்கி அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்..
- குட்டம், விப்புருதிவாயு முதலியவற்றிற்குப் பறங்கிச் சக்கை சூரணம் கூட்டிக் கொடுக்கவும்.
- ஈளை, இருமல் இரைப்பு முதலியவற்றிற்கு ஆடாதோடை, சிற்றரத்தை இவ்விரண்டையும் அரைத்துக் காச்சிய பசுவின் பாலில் கரைத்துச் சிறிது சூடாக இருக்கும்போது, பசுவின் வெண்ணெய் சிறிது சேர்த்து அதில் இந்த மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- விப்புருதி நோய் பதின்மூன்றுக்கும் தூதுவளைச் சாற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.
- சத்திக் குன்மத்திற்குத் தகரை இலைச்சாற்றில் கொடுக்கவும்.
- பித்தக் குன்மத்திற்குப் புளியாரைச் சாற்றில் கொடுக்கவும்.
- வாதக் குன்மத்திற்கு வல்லாரைச் சாற்றில் கொடுக்கவும்.
- எரி குன்மத்திற்கு இளநீர், சீரகம், நெய், பால் கூட்டி அதனில் இம் மெழுகைக் கொடுக்கவும்.

- ❖ வளி குன்மத்திற்குச் சிற்றாமணக்கெண்ணெயில் கொடுக்கவும்.
- ❖ அண்டவாதத்திற்கு வெள்ளாட்டுப் பால் அல்லது வெள்ளாட்டு வெண்ணெயில் அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ சூலைவலி, எரிச்சல், குண்டிக்காய் நோய் முதலியவற்றிற்குக் காய்ச்சிய ஆவின் பால், நெய், சர்க்கரை கூட்டி அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ குட்டரோகங்களுக்குக் காய்ச்சிய பசுவின் நெய்யில் கற்கண்டைத் தூள் செய்து போட்டு, அதில் இம்மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ சூதகவாயுவுக்குச் சுக்குக் குடிநீரில் சீரகப்பொடியைப் போட்டாவது அல்லது வெள்ளைப் பூண்டு, சுக்கு, மிளகு, சீரகம் கூட்டிச் செய்த குடிநீரிலாவது இந்த மெழுகைக் கொடுக்கவும்.
- ❖ சூலை நோய்க்குப் பறங்கிச் சக்கை சூரணத்தில் நெய் விட்டுப் பிசறி, அதில் இம்மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ மூலரோகத்திற்குத் தாய்ப்பால், சிற்றாமணக்கெண்ணெய் கூட்டி அதில் இம் மெழுகைக் கொடுக்கவும்.
- ❖ மூலவாயுவுக்குப் பால், நெய், மோர் முதலியவற்றில் கொடுக்கவும்.
- ❖ இரத்த மூலத்திற்குப் பன்றி நெய்யில் கொடுக்கவும்.
- ❖ மூலக்கிராணிக்குப் பசுவின் பால், நெய் இவற்றில் கொடுக்கவும்.
- ❖ சீழ்மூலத்திற்குச் செம்மறி ஆட்டுக்கொழுப்பு, உருக்கின நெய் ஆகியவற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ மூலத்தினால் முக்கல், கடுப்பு, முளை வளர்தல், ஆசனம் தாமரைப்பூ போல் விரிதல் முதலியவற்றிற்கு, இந்த மெழுகைச் சீலையில் தடவி, திரியாகச் சுருட்டிக் கொளுத்தி அதிலிருந்து வரும் புகையை ஆசன வாய்க்குக் காட்டவும்.
- ❖ ஆண் குறியின் முனையில் வருகிற தாமரைச் சிலந்தி, பவுத்திரக் கண்டமாலை, அக்குள் சிலந்தி, தொண்டைச் சிலந்தி, தொப்புள், மார்பு, ஆண் பெண்களின் தனத்தில் கிளைக்கும் புண், முதுகில் வரும்படியான பிளவை, அரையான், தொடைவாழை, பத்து, பாதத்தில் வரும் மேகரணம், சதா கச்சையை அணிவதால் வரும் ஆறாத புண்

முதலியவற்றிற்கு இந்த மெழுகைச் சீலையில் தடவித் திரியாகச் சுருட்டிக் கொளுத்தி அதிலிருந்து கிளம்பும் புகையை நோயுள்ள இடத்தில் படும்படியாகச் செய்யவும்.

- ❖ மூக்கு நீர்வடிதல், முகவாதம், பீனிசம், மண்டையிடி, கபாலசூலை முதலியவற்றிற்கு முன்போல் திரிசெய்து கொளுத்திப் புகையை மூக்கு வழியாக உள்ளுக்குச் செலுத்தவும்.
- ❖ நரம்புப்புண், பல்லரணை, கன்னக்கிரந்தி, பல்வலி, தொண்டைப் புண் முதலியவற்றிற்கு முன்போல் புகையை வாய்வழியாக உள்ளுக்குச் செலுத்தவும்.
- ❖ மலம், சலம் அடைத்து வேதனை மிகுந்தால் அரைக்காற்படி உத்தாமணியிலைச் சாற்றில் கொடுக்கவும். அல்லது தலைமயிர் சுட்ட சாம்பலில் கொடுக்கவும்.
- ❖ கறுங்குட்டம், கைகால் குறைதல் முதலியவற்றிற்குக் கறுநொச்சியிலை சாற்றில் உள்ளுக்குக் கொடுப்பதுமின்றி, இம் மெழுகைச் சிறிது சாற்றில் கரைத்து மேல் பூச்சாகப் புண்ணின் மீதும் தடவவும்.
- ❖ பலவிதக் குட்டத்திற்குத் தென்னம் வெல்லத்தில் வைத்துக் கொடுக்கவும்.
- ❖ காமாலை, சோகை, மகோதரம், பாண்டு முதலியவற்றிற்கு, ஆமணக்கெண்ணெயில் சிறிது கோமியம் சேர்த்து அதில் மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ பலவித விடங்களுக்குக் கடுக்காய்ப் பொடியைச் சிறிது ஆமணக்கெண்ணெயில் கலந்து, இம்மெழுகை அனுபானம் செய்து கொடுக்கவும்.
- ❖ வலி, சன்னி, வாதரோகம் முதலியவற்றிற்கு, தழுதாழைச் சாற்றில் கொடுக்கவும்.
- ❖ சந்து சூலை, சர்வாங்கவாதம் முதலியவற்றிற்குக் கழுதை நீரில் கொடுக்கவும்.
- ❖ கடூரமான வாதரோக்ங்களுக்குக் கழுதைச் சாணப்பாலில் கொடுக்கவும்.
- ❖ சந்து வாதம் 12 க்கும் இஞ்சிச்சாறு அல்லது சுக்குக் குடிநீரில் கொடுக்கவும்.

- விப்புருதி நான்கு வகைகளுக்கும் முருக்கிலைச் சாற்றில் கொடுக்கவும்.
- வெறிநாய், எலிக்கடிக்கு எருக்கிலைச் சாற்றில் கொடுக்கவும்.
- நீர்வண்டு, பொன்வண்டு, ஆறுகால் வண்டு, பூவண்டு முதலிய நச்சு வண்டு கடிகளுக்கு எருக்கிலைச் சாற்றில் கொடுக்கவும்.
- செம்மூக்கன், கொம்பேறி விரியன், மண்டலி முதலிய பாம்பு கடிகளுக்குப் பயறு அளவு மெழுகைக் கண்களுக்குக் கலிக்கம் தீட்டி. எருக்கிலைச் சாற்றில் அனுபானம் செய்து கொடுக்கவும்.

*பத்தியம்*

நோயின் வன்மை, மென்மைக்கு ஏற்றவாறு கடும்பத்தியமும் இச்சாபத்தியமும் இருத்தல் நன்று.

## 2. கற்பூர மெழுகு

*சரக்கு*

| | |
|---|---|
| மாதுளம் வேர்ப்பட்டை | 2 பலம் |
| வால்மிளகு | " |
| கற்பூரம் | " |
| கரும்பு வெல்லம் | " |
| கிராம்பு | " |

*செய்முறை*

ஏழு எலுமிச்சம் பழத்திலிருந்து சாறு பிழிந்து ஒரு பழகின மண் ஓட்டில் இட்டு, அதில் கற்பூரத்தைப் பொடி செய்து போட்டு அடுப்பில் வைத்துச் சிறிது எரித்துச் சுண்டிக் குழம்பு பதம் வரும் சமயம், ஆறவிட்டு வழித்து ஒரு சுத்தமான கல்வத்தில் போட்டு, வெல்லம் நீங்கலாகச் சூரணிக்க வேண்டிய மூன்று சரக்குகளையும் சூரணித்துப் போட்டு மெழுகு பதம் வரும்படி நன்கு அரைக்கவும். இம்மருந்து வறட்சி கண்டிருப்பின் கொஞ்சம் கொஞ்சமாக வெல்லத்தைக் கூட்டி அரைக்கவும். நல்ல மெழுகு ஆகும். இதை வழித்து வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

*பயன்பாடு*

இந்த மெழுகில் வேளைக்கு 2-3 குன்றி அளவு தினம் இரு வேளை கொடுத்து வருக.

*தீரும் நோய்*

சலதோடம், நீர்ப்பீனிசம், தும்மல், பசியின்மை, புளியேப்பம், தலைவலி முதலியவைகளும் சீதள சம்பந்தமான பல பிணிகளும் குணமாகும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம். சீதளப் பண்டங்களை நீக்கி அன்னம் கொள்ளவும்.

## 3. தாமிர மெழுகு

*சரக்கு*

சுத்தி செய்த தாமிர அரப்பொடி வராகன் எடை- 5. வீரம், பூரம், கந்தகம், இரசம், இலிங்கம் தனித்தனியே வராகன் எடை- 1.

*செய்முறை*

இவைகளை எல்லாம் கல்வத்தில் இட்டு அரைத்து ஒரு பீங்கானில் இட்டு, 7 அல்லது 10 எலுமிச்சம்பழச்சாறு விட்டு 24 மணி நேரம் வைக்கவும். மறுபடியும் முன்போல் பழச்சாறு விட்டுக் கலக்கி 24 மணி நேரம் சென்ற பின் பழச்சாற்றை வடித்து விடுக.

இங்ஙனம் 7 முறை செய்யப் பச்சை நிறமான களிம்பு பழச்சாற்றில் தோன்றாது. ஒருக்கால் ஐயமுண்டாயின் இரண்டொரு முறை அதிகமாகச் செய்துகொண்டு பின்னர் அதனை வெயிலில் உலர்த்திக் கல்வத்தில் இட்டுத் தேனைச் சிறிது சிறிதாக விட்டு மெழுகு பதமாக 8 சாமம் அரைத்துப் பத்திரப்படுத்துக.

*பயன்பாடு*

தினம் இரு வேளை 1/2 முல் 3/4 குன்றி அளவு, 5 அல்லது 7 நாள் பனைவெட்டில் வைத்து உண்ணவும்

*தீரும் நோய்*

குன்மம், பெருவயிறு, பிடிப்பு, விரணம், சுவாசகாசம், திமிர், தடிப்பு, வாத ரோகங்கள் தீரும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 4. தாமிர மெழுகு (வேறு முறை)

*சரக்கு*

சுத்தி செய்த தாமிர அரப்பொடி பலம்- $2^1/_2$. சுத்தி செய்த கந்தகம் பலம்-ஒன்றேகால்.

*செய்முறை*

ஒரு பீங்கானில் தாமிரப் பொடியை எடுத்துக் கொள்ளவும். கந்தகத்தை 7 எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்துக் குழம்பாக வழித்துக் கொள்ளவும். நாயுருவி கறுந்துளசி ஆகியவற்றின் சாறை அரைக்காற்படி எடுத்துக்கொள்ளவும். இம்மூன்றையும் கலந்து வெயிலில் வைத்து, நீரெல்லாம் சுண்டின பதத்தில் கல்வத்தில் இட்டு, அதனோடு 3/4 வராகன் எடை பச்சைக் கற்பூரம் சேர்த்துத் தேன் விட்டு மெழுகு பதமாக 4 சாமத்திற்குக் குறைவின்றி அரைத்துப் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இதனைத் தினம் இரு வேளை, மிளகு அளவு 3 அல்லது 5 நாள் உண்ணவும்.

*தீரும் நோய்*

குன்மம், பெருவயிறு, பிடிப்பு, விரணம், சுவாசகாசம், திமிர், தடிப்பு, வாதம், முதலிய பலவும் தீரும். ஒரு முறையில் குணம் ஏற்படாவிடின் 14 நாள் இடைவிட்டு மறுமுறை உட்கொள்ளவும்.

*குறிப்பு*

இதனை ஒரு முறை உட்கொண்ட பின், இரண்டு நாள் கழித்துத் தேக திடத்துக்கு ஏற்றபடி இரு முறை பேதியாகச் சிற்றாமணக்கெண்ணெயை உட்கொள்ளுதல் சாலவும் நன்று. தாமிரபூபதி மாத்திரைக்கு இம்மெழுகைப் பயன்படுத்திக் கொள்வது வழக்கம்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## 5. மிருத்தியுஞ்செய இரசம்

*சரக்கு*

சுத்திசெய்த தாளகம், சுத்திகரித்த கந்தகம், சுத்திகரித்த இலிங்கம் வகைக்கு வராகனெடை 2. திப்பிலி, கிராம்பு, மிளகு ஆகியவற்றின் சூரணம் வகைக்குப் பலம் 1. கோரோசனை வராகன் எடை $1\,^1/_2$, குங்குமப்பூ வராகன் எடை3, பச்சைக் கற்பூரம் வராகன் எடை 1 1/2, கஸ்தூரி வராகன் எடை 1.

*செய்முறை*

தாளகத்தைக் கல்வத்தில் இட்டு நன்றாக அரைத்து அதனுடன் மற்றச் சரக்குகளை மேலே கூறிய முறையே ஒன்றன்பின் ஒன்றாய்ச் சேர்த்து அரைத்துத் தேன் விட்டு, மெழுகு பதமாய் 4 சாமம் அரைத்துச் சிமிழில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

உழுந்து பிரமாணம் வெற்றிலையில் தடவி மென்று தின்னவும்.

*தீரும் நோய்*

சர்வசீதளம், சுரம், சன்னி, கப சம்பந்தமான உபத்திரவம், வாயு சம்பந்தமான நோய்கள் எல்லாம் தீரும்.

*பத்தியம்*

இச்சாபத்தியம்.

## கோவையிலைப் பற்று

நாமக்கோவை இலையை இடித்து நன்றாகப் பிசைந்து தலையில் பற்றாகப் போட்டுவர இரத்தப் பீனிசம், சாமத்திற்குச் சாமம் உண்டாகும் இருமல் முதலியவை தீரும்.

## புழுங்கலரிசிமிளகுப் பிட்டு

*சரக்கு*

மிளகு
சீரகம்
புழுங்கலரிசி

*செய்முறை*

இவை வகைக்கு ஒரு சேர் எடுத்து ஒரு இரும்புச் சட்டியில் விட்டு இளவறுப்பாய் வறுத்துக்கொள்ளவும். பின்பு கல்லுரலில் இட்டு இடித்துப் பனைவெல்லம் 8 பலம் சேர்த்துப் பசுவின் நெய் ஒரு உழக்குக் காய்ச்சி அதில் ஒரு சிறங்கை அளவு இச்சூரணத்தை இட்டுப் பொரித்துச் சாப்பிடவும். இம்மாதிரி 3 தினங்கள் உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

இருமல், குத்துவலி, குடற்புரட்டு, சீழ்விழுதல், தலைவலி, நெஞ்சுவலி, சுரம், வாய்நீர் சுரத்தல், விலாவலி, புகைச்சல், உடம்பின் நாற்றம், சயரோகம், கோழைவிழுதல், சீழுடன் நீர்விழுதல் முதலான நோய்கள் தீரும்.

**பாற்கடுக்காய்**

*சரக்கு*

சுக்கு, திப்பிலி, பாற்கடுக்காய்.

*செய்முறை*

இவைகள் வகைக்கு 40 எண்ணிக்கையில் எடுத்து ஒரு பானையில் போட்டு, 4 படி வல்லாரைச் சாறு விட்டு ஊற வைத்து அடுப்பின் மேலேற்றிச் சாறு சுவறும்வரை வற்றவைத்து, மறுபடியும் 4 படி வல்லாரைச் சாறும், வெள்ளாட்டுப் பால் 2 படியும் விட்டுச் சுண்டவைக்கவும். தேன் 1 நாழி விட்டு ஒன்று கலந்து ஒரு பானையில் வைத்து ஒரு மூடியால் மூடி நெற்குவியலுக்குள் 20 நாட்கள் புதைத்து வைக்கவும்.

*பயன்பாடு*

சயரோகி தினம் ஒரு கடுக்காயுடன் குழம்பில் சுமார் 2 1/2 வராகன் எடை அளவும் எடுத்து உட்கொள்ள, 40 நாட்களுக்குள் நோய் குணமாகும். பசியும் உண்டாகும்.

**நிலப்பனை கோவா**

*சரக்கு*

நிலப்பனைக் கிழங்கு

பூனைக்காலி விதை

நெருஞ்சிக்காய்

சிறுகாஞ்சொறி விதை

*செய்முறை*

இவைகளைச் சரி அளவு எடுத்து இடித்துச் சூரணித்து வஸ்திரகாயம் செய்யவும். இதற்குச் சரி அளவு சர்க்கரை கூட்டி பசுவின் பாலுடன் சேர்த்துக் குழம்பாக்கி வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் தினந்தோறும் ஒரு பாக்களவு எடுத்து உட்கொள்ளவும். தாது விருத்தி உண்டாகும்.

**ஓம கல்கம்**

*செய்முறை*

ஓமத்தை அரைத்து வெந்நீரில் கலந்து அத்துடன் எவச்சாரம், தேன் கூட்டி அருந்த வேண்டும்.

*தீரும் நோய்*

உப்புசம், மேல் சுவாசம்.

**சாதிப்பத்திரிக் கல்கம்**

*சரக்கு*

சாதிப்பத்திரி

ஓமம்

நீர்முள்ளி விதை

சாதிக்காய்

*செய்முறை*

இவைகன்ளப் பசுவின் பால் விட்டு நன்றாக அரைத்துத் தேற்றான் கொட்டையின் அளவு எடுத்துப் பாலிலோ அல்லது சர்க்கரையிலோ சாப்பிடவும்.

கோழிமுட்டை வெள்ளைக் கருவுடன் இஞ்சிச்சாறு, வெங்காயச்சாறு, தேன் இவைகளை ஒன்றாகச் சேர்த்துக் குழப்பி 3 நாட்கள் காலையில் சாப்பிடவும். தாதுவிருத்தி உண்டாகும்.

**காடி**

*சரக்கு*

முருங்கை இலை

மாவிலங்கை இலை

அமுக்கரா இலை

*செய்முறை*

இவைகளை வகைக்கு ஒருபிடி எடுத்துச் சிறுக அரிந்து ஒரு மரக்கால் காடிக்கு, 1 மரக்கால் சுத்த நீர் விட்டு ஒன்றாக்கி அடுப்பின் மேலேற்றி நன்றாக (1 சேராக) வற்ற வைக்கவும்.

*பயன்பாடு*

நாள் ஒன்றுக்கு மூன்று முறை உட்கொள்ள, நீர்க்கோவை குணமாகும்.

## இலேபனத்திற்கு வெண்ணெய்

*சரக்கும் செய்முறையும்*

வெள்ளாட்டுப் பால் 2 படி எடுத்து நன்றாகக் காய்ச்சி வெள்ளை அரளி வேர்த் தூள் 1/2 பலம் சூரணம் செய்து போட்டு, மோர் விட்டுப் பிறை குத்தவும். மறுநாள் தயிராகத் தோய்ந்தபின் இதைக் கடைந்து வெண்ணெயை எடுத்து அதனுடன் கிராம்பு, அபின், சாதிக்காய், சாதிப்பத்திரி ஆகியவைகள் வகைக்கு 1 வராகன் எடை வீதம் எடுத்து இடித்துச் சூரணம் செய்து, நன்றாக மத்தித்து வைத்துக்கொள்ளவும்.

*பயன்பாடு*

இதில் $3\,{}^{1}/_{2}$ குன்றி நிறை எடுத்து ஒரு வெற்றிலையில் வைத்துக் காலையில் உட்கொள்ளவும். இந்த மருந்தையே குறியின் மேல் போடவும். இவ்வாறு 7 நாட்கள் செய்து, புளிப்பு, புகையிலை முதலான பதார்த்தங்களை நீக்கவும். தாதுவிருத்தி உண்டாகும்.

**முருங்கைப்பால்**

*சரக்கு*

முருங்கைப் பிஞ்சு, முருங்கைக் கொழுந்து, கீழாநெல்லிச் சமூலம்.

*செய்முறை*

இம்மூன்றையும் சமனெடை எடுத்துத் தேங்காய்ப் பால் விட்டு நன்றாக அரைத்துக் கொள்ளவும்.

*பயன்பாடு*

எலுமிச்சங்காய் அளவு எடுத்து அடுப்பின் மேல் வைத்துக் காய்ச்சி அருந்தவும். உடல் பலமடையும், தாதுவிருத்தி உண்டாகும்.

**சிவனார் அமிர்தம்**

*சரக்கும் செய்முறையும்*

இருவி, இரசம், கறுநாபி, நெல்லிக்காய்கந்தகம், சுக்கு, மனோசிலை, வெங்காரம், அரிசித் திப்பிலி ஆகிய இவைகள் வகைக்கு 1 பலம். மிளகு 8 பலம். இவைகளை முறைப்படி சுத்தி செய்து, தனித்தனியே சூரணமாக்கி, கல்வத்தில் இட்டு 7 நாட்கள் விடாமல் அரைத்திடவும். இது கறுப்பு நிறத்தை அடையும்.

*பயன்பாடு*

துணை மருந்தின் சிறப்பால் 80 வகை வாதம், 40 வகை பித்தம், 20 வகை கபம், 5 வகை சுவாசம், குட்டம், குன்மம், சன்னி, மூலநோய், சயம், பெருவயிறு ஆகியவைகள் தீரும்.

அரணை, தேள் முதலிய கடிவிடங்கள், குமரகண்டவலி ஆகியவைகட்கு மேற்படி மருந்தை ஆக்கிராணம் (நசியம்) இடத் தீரும்.

*குறிப்பு*

சிலர் இருவியைச் சேர்த்தும் சேர்க்காமலும் செய்கின்றனர். இருவியைச் சேர்ப்பின் பத்தியம் கடுமையாகக் காக்கவேண்டும் எனபர்.

**தாளகக் கருப்பு**

***சரக்கு***

சுத்தி செய்த தாளகம் பலம் $^1/_2$

முப்பு பலம் $^1/_2$

பூவரசங்கொழுந்து இலை

அல்லது வெண்தாமரைப்பூவிதழ் பலம் 4

*செய்முறை*

முதலில் தாளகத்தைக் கல்வத்தில் போட்டு இரண்டு மணி நேரம் அரைத்து நன்றாய்ப் பொடியான பின் முப்பு கூட்டி அரைக்கவும். இவ்விரண்டும் கலந்து உறவான சமயம் பூவரசங் கொழுந்திலையையாவது அல்லது தாமரைப் பூவிதழையாவது கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு இரண்டு சாமத்திற்கு அரைத்து மெழுகு பதத்தில் வில்லை தட்டி உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து வெயிலில் நன்றாய் உலர்த்தவும். அகலின் மொத்த எடைக்கு எட்டு எடை வறட்டித் துண்டுகளின் இடையில் வைத்துத் தீ மூட்டவும். புடம் ஆறினபின் வில்லையைப் பார்க்கக் கறுத்திருக்கும். இதை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

*பயன்பாடு*

இதில் வேளைக்கு $^1/_2$ -1 குன்றி எடை தினம் இரு வேளை நெய், தேன், அதிமதுரக் குடிநீர், சிறுகாஞ்சொறி வேர்க் குடிநீர் போன்ற அனுபானங்களில் கொடுத்து வரவும்.

*தீரும் நோய்*

சுரம், முறைச்சுரம், சயம், காசம், இரைப்பு, இருமல், துட்டரணம், குட்டம் முதலியவைகள் குணமாகும்.

*பத்தியம்*

புளி தள்ளி, இச்சாபத்தியம்.

*குறிப்பு*

தாளகத்திற்கு உண்டாண துர்க்குணம் இதற்குக் கிடையாது. தாளகச் செந்தூரம் முதலியவற்றிற்கு இணையாகக் கொடுக்கலாம்.

## தாளகக் கருப்பு (வேறு முறை)

*சரக்கு*

சுத்தித்த தாளகம் 1 பங்கு, நத்தைத் தசை 2 பங்கு.

*செய்முறை*

தாளகத்தைக் கல்வத்தில் இட்டு நன்றாகப் பொடித்து, நத்தைத் தசையைச் சிறிது சிறிதாகக் கூட்டி நன்றாக அரைத்து வில்லை தட்டி, இலகு புடமிடக் கறுப்பு நிறத்தை அடையும். பொடித்துக் குப்பியிலிடவும்.

*பயன்பாடு*

½ முதல் ஒரு குன்றிமணி அளவு தேனில் கொடுக்கக் காசம், சுவாசம் ஆகியவைகள் தீரும்.

**சர்ப்பராச சமனம்**

*சரக்கு*

துருசு

இரசம்

மணிப்புங்கன் காயின் மேல்தோல் வகைக்கு தோலா-1. சுத்தி செய்த வாளம் தோலா-3.

*செய்முறை*

இவைகளைக் கல்வதில் போட்டு 4 சாமம் நன்றாய் அரைத்துப் பின்பு இரும்பு வாணலியில் இட்டு நெருப்பனலில் வைத்துக் காந்தாமல் கறுகாமல் எடுத்துக் கொம்பு டப்பியில் பத்திரப்படுத்துக.

*பயன்பாடு*

தேக திடத்திற்குத் தக்கவாறு மிளகு அல்லது குன்றி அளவு பனைவெட்டில் கொடுக்கவும். ஒரு வேளைக்கு மேல் தேவையிராது. பிராணன் நீங்கி விட்டதாகக் கூறும் நிலையிலும், பிரம்பால் பலமாய் அடித்தத் தோல் தடிப்பெழும்பில் உச்சியைக் கீறி இந்த மெழுகில் குன்றி அளவு எடுத்துத் தேய்க்க, சிறிது நேரத்தில் சுவாசமுண்டாகும். உடனே கடுகு அளவு மெழுகைத் தாய்ப்பாலில் மத்தித்துக் கண்களுக்குக் கலிக்கம் தீட்டவும். பின்னர் குன்றி அளவு மெழுகை உள்ளுக்குக் கொடுக்கவும்.

*பத்தியம்*

உப்பில்லாமல் வெறும் கஞ்சியைச் சிறு அளவாகக் கொடுத்தல் வேண்டும். அன்று நித்திரை செய்ய விடக் கூடாது. மறுநாள் தயிர்சாதம் கொடுக்கவும். உப்பு கூட்டலாம்.

## ஆடாதோடை மணப்பாகு

*சரக்கும் செய்முறையும்*

சுத்தமான ஆடாதோடை இலை 20 பலம் எடுத்துச் சிறுக அரிந்து, 4 படி நீர் விட்டு 1படியாகச் சுண்டக்காய்ச்சியபின் வடிகட்டி, 23 பலம் சீனி கூட்டிக் காய்ச்சிப் பதத்தில் எடுத்துக் கொள்க.

*பயன்பாடு*

இதில் கால் முதல் அரை பலம் எடுத்து, காய்ந்து ஆறிய நீர் இரண்டு பங்கு சேர்த்துக் கலக்கி உட்கொள்ளவும்.

*தீரும் நோய்*

கபாதிக்கம், வாததோடம், இருமல், பற்பல சுரம், வயிற்று நோய் ஆகிய இவைகளை நீக்கும்.

## சுக்காதி மணப்பாகு

*சரக்கு*

சுக்கு
மிளகு
தூதுவளை
திப்பிலி
சீந்தில் கொடி

*செய்முறை*

இவைகளைச் சமமாக எடுத்து இடித்து 3 படி தண்ணீர் விட்டு அடுப்பின் மேல் ஏற்றி, எட்டிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும்.

*பயன்பாடு*

பசுவின் நெய் அல்லது தேனில் குழைத்துச் சாப்பிட, காசநோய் தீரும்.

## முசுமுசுக்கை வேர் அடை

முசுமுசுக்கை வேரை அம்மியில் வைத்துத் தண்ணீர் விட்டரைத்து, அரிசி மாவுடன் சேர்த்துப் பிசைந்து அடை தட்டிச் சுட்டுத் தினம் காலை வேளையில் சாப்பிடவும். இப்படி 3 நாள் சாப்பிட, இருமல் நிற்கும்.

**கையாந்தகரை அடை**

கையாந்தகரை, நாயுருவி, கறுந்தக்காளி, தூதுவளை, எருக்குமொட்டு, வேலிப்பருத்தி இலை, நொய்யரிசி இவற்றைச் சம அளவு அரைத்து அடை சுட்டு உண்ண, கணைநோய் நீங்கும்.

**ஆதார நூல்கள்**

1. யூகி வைத்திய சிந்தாமணி.
2. சித்த மருத்துவம்.
3. சித்த மருத்துவாங்க சுருக்கம்.
4. நோய் நாடல் நோய் முதல் நாடல் பகுதி I, பகுதி II.
5. நோய்களுக்குச் சித்த பரிகாரம்.
6. தேரன் யமக வெண்பா.
7. தேரன் மருத்துவ பாரதம்.
8. தேரன் கரிசல்.
9. சரபேந்திர வைத்திய முறைகள் (சுவாசகாச கபரோக சிகிச்சை).
10. சரபேந்திர வைத்திய முறைகள் (சிரோரோக சிகிச்சை).
11. சித்த வைத்தியத் திரட்டு.
12. அகத்தியர் மணி 4000.
13. கண்ணுசாமி பரம்பரை வைத்தியம்
14. சித்த வைத்திய பதார்த்த குணவிளக்கம்.
15. சிகிச்சாரத்தின தீபம்.
16. புலிப்பாணி வைத்தியம் 500.
17. சரபேந்திர வைத்திய முறைகள் (சயரோக, உளைமாந்தை ரோக சிகிச்சை)

# சொல்லடைவு

# தமிழ் வளர்ச்சிக் கழகம்

தமிழ் மொழியின் வளர்ச்சி ஒன்றையேக் குறிக்கோளாகக் கொண்டு 1946 ஆம் ஆண்டு அந்நாள் கல்வியமைச்சர் திரு. தி.சு. அவினாசிலிங்கம் அவர்களால் தமிழ் வளர்ச்சிக் கழகம் நிறுவப்பட்டது. தொடக்க காலம் முதல் 1982 ஆம் ஆண்டு வரை அவர் அதன் தலைவராக இருந்து சிறப்பாகத் தொண்டாற்றி வந்தார். பின்னர் 1982 ஆம் ஆண்டு முன்னாள் மாநில, மைய அமைச்சரான திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் கழகத்தின் தலைமைப் பொறுப்பேற்றுச் சீரிய முறையில் தமிழ் வளர்ச்சிக்கு வழிகாட்டி வந்தார். 1990-ஆம் ஆண்டு முதல் முனைவர் வா.செ. குழந்தைசாமி அவர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்றுச் சீரிய பணியாற்றி வருகிறார்.

1947-ஆம் ஆண்டு முதல் தி.ரு. ம.ப. பெரியசாமித்தூரன் அவர்களைத் தலைமைப் பதிப்பு ஆசிரியராகக் கொண்டு, 'கலைக் களஞ்சியம்' 10 தொகுதிகள் வெளியிடப் பட்டன. இதுவே இந்திய மொழிகளில் முதல் முயற்சியாகத் திகழ்கிறது. பின்னர், அவரையே ஆசிரியராகக் கொண்டு 'குழந்தைகள் கலைக்களஞ்சியம்' 10 தொகுதிகள் 1976 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டன. இதன் இரண்டாவது திருத்திய பதிப்பும் (10 தொகுதிகள்) 1988-இல் முடிவுற்றது. அதன் பின்னர், தமிழ் வளர்ச்சிக் கழகம் அறிவியல் தொடர்பான நூல்களை வெளியிடும் பணியில் ஈடுபட்டு, நான்கு நூல்களை வெளியிட்டது.

தமிழ் வளர்ச்சிக் கழகம் மருத்துவ அறிவியலைக் கருத்தில் கொண்டு, 'மருத்துவக் களஞ்சியம்' எனும் தலைப்பில் 12 தொகுதிகளை வெளியிடும் பணியை மேற்கொண்டது. இதில் 'உடல் நலம்' எனும் தலைப்பில் முதல் தொகுதியும், 'தாய் சேய் நலம்' எனும் தலைப்பில் இரண்டாவது தொகுதியும், 'புலனுறுப்புகள்' எனும் தலைப்பில் இரு நூல்களாக மூன்றாவது நான்காவது தொகுதிகளும், 'நரம்பு மண்டலம், மனநோய், நாளமில் சுரப்பிகள்' ஆகியவை அடங்கிய ஐந்தாவது தொகுதியும், 'செரிமான மண்டலமும் மூச்சு மண்டலமும்' இடம்பெற்ற ஆறாவது தொகுதியும், 'தொற்று நோய்களும் பால்வினை நோய்களும்' எனும் தலைப்பில் ஏழாவது தொகுதியும், 'புற்றுநோய், முதியோர் நலம்' அடங்கிய எட்டாவது தொகுதி யும், 'இதய இரத்தநாள மண்டலம்' எனும் தலைப்பிலான ஒன்பதாம் தொகுதியும், 'சிறுநீரகம் மற்றும் இனவள உறுப்பு மண்டலம்' என்னும் பொருள் பற்றிய பத்தாம் தொகுதியும், 'எலும்பியல், மாற்றுறுப்பியல், ஒட்டறுவை மருத்துவம்' ஆகிய மூன்று பகுதிகளைக் கொண்ட பதினொன்றாம் தொகுதியும், 'மரபியல், விபத்து மருத்துவம், நோய் எதிர்ப்பாற்றல் மண்டலத்தின் அடிப்படைகள்' எனும் பகுதிகள் அடங்கிய பனிரண்டாம் தொகுதியும் வெளியிடப்பட்டு இப்பணி நிறைவு பெற்றது.

அலோபதி மருத்துவமுறை நூல் வெளியீட்டுத் திட்டத்தைத் தொடர்ந்து, தமிழகம் தரணிக்கு அளித்த மருத்துவ முறையாம் சித்த மருத்துவம் பற்றிய நூல் வெளியீட்டுத் திட்டத்தில் ஆறு தொகுதிகளை வெளியிடும் பணியைக் கழகம் மேற்கொண்டுள்ளது. இதில் 'சித்த மருத்துவம் தொகுதி-1: வரலாறு', 'சித்த மருத்துவம் தொகுதி-3: சிறப்பியல்', 'சித்த மருத்துவம் தொகுதி - 5: பித்தம் தொடர்பான நோய்கள்' என்னும் தொகுதிகள் ஏற்கனவே வெளியிடப்பட்டன. இப்போது 'சித்த மருத்துவம் தொகுதி-6 : கபம் தொடர்பான நோய்கள்' எனும் நூல் வெளிவந்துள்ளது. ஏனைய தொகுதிகளுக்கான தயாரிப்புப் பணிகள் நடைபெற்று வருகின்றன.